'இப்படியாப்பட்ட புள்ளையோட
ஈடுகுடுக்கறதுன்னு...'

'இப்படியாப்பட்ட புள்ளையோட ஈடுகுடுக்கற துன்னு... கைகொள்ளாத வேலைதான் போங்க. பயலைப் பளிச்சுன்னு சுத்தமா வெச்சுக்கணும்னு, எப்பப் பாருங்க, துணிதொவக்கற வேலைதான்... நல்ல வேளை, ஸன்லைட்தான் தெனம் காப்பாத் துது. வளப்பமா நுரை... துப்புரவாத் துணி வெளுக்குது தொல்லையில்லாம. சுத்தமான சோப் புக்கு அடையாளமே அதானே!'

புது டில்லிவாசியான ஸ்ரீமதி கமலா வாத்வானி கூறுகிறார்: 'ஸன்லைட்டுக்கு எந்த சோப் பும் ஈடாகவே ஆகாது!'

# ஸன்லைட்




ஸன்லைட் அருமை -- நம் துணிகளுக்கு நன்மை!

S. 31-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்

## Simpsons சிறந்த இலகு இயந்திர சாதனங்கள்



Garage Crane



Mechanical Trolley Jack



Sack Truck



Bitumen Drum Mixer



Double Wheel Tipping Barrow



Platform Trolley 10 Cwt. Cap

MANUFACTURERS **Simpson & Co. Ltd**

தலைமை ஆபீஸ் & தொழிற்சாலை, சென்னை–2

கிளைகள் : பெங்களூர், உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி, செகந்திராபாத்

பிலவ, புரட்டாசி 1

# கல்கி

செப்டம்பர் 17, 1961


## பொருளடக்கம்



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 7

# இருள் விலகுமா?

மூன்று ஆண்டுகளாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அணு ஆயுதச் சோதனைகள் மீண்டும் தொடங்கப் பட்டுள்ளன. முன்பு சோதனை நிறுத்தத்தை உடன்பட்டு மேற்கொண்ட ருஷியா இப்போது அந்தப் புனித ஏற்பாட்டைக் கெடுத்து விட்டது. வானவெளியில் மீண்டும் அணுகுண்டுகள் வெடிக்கப்பட்டு வருகின்றன. இவை போதாதென்று ஆயிரம் லட்சம் டன் டி.என்.டி. வெடி மருந்தின் சக்தி படைத்த ஆயுதங்களைத் தயாரிக்கப் போவதாகவும் ருஷ்யா பயம் காட்டியுள்ளது.

கட்டுப்பாடும், கண்காணிப்பும் இல்லாமல் சோதனைகளை நிறுத்துவதற்கு குருஷேவ் இணங்கா விட்டால் ருஷ்யாவைப் போலவே அமெரிக்காவும் வான வெளியில் பரீட்சைகள் மேற்கொள்ளும் என்று கென்னடி கூறியிருக்கிறார். சோதனை நிறுத்தம் பற்றிய இத்தீர்மானத்தை ஏற்பதற்காக பிரிட்டனும், அமெரிக்காவும் குருஷேவுக்கு ஒரு கெடு குறித்தன. ருஷ்யப் பிரதமரோ இது வெறும் பிரசார தந்திரம் என்று கூறி யோசனையை நிராகரித்து விட்டார்.

இதற்கு முன், ஒப்பந்தத்தின் பேரில் இரு சார்பாரும் அணு வெடிச் சோதனைகளை நிறுத்தி விடலாம் என்று அமெரிக்காவைக் குருஷேவ் வற்புறுத்தி வந்தது உலகமறிந்த விஷயம். அப்போது மேற்கத்திய வல்லரசுக் கோஷ்டியினர் இது குருஷேவின் பிரசார தந்திரம் என்று கூறினர். கட்டுப்பாடும் கண்காணிப்பும் இல்லாமல் சோதனைகளை நிறுத்தும் ஒப்பந்தம் பயனற்றதென்றும் ருஷ்யாவின் சாதாரண ராணுவ தளவாடங்களும் பலமும் அணுகுண்டுகள் இல்லாமலேயே பெரிய அளவில் இருக்கிறபடியால் முழுமையான படைபலக் குறைப்பு ஒப்பந்தம் ஏற்பட்டாலன்றி அணுகுண்டு சோதனைகளை நிறுத்த முடியாது என்றும் மேற்கு வல்லரசுக் கோஷ்டியினர் சொல்லிவந்தார்கள். அதே மேற்கத்திய வல்லரசுகள் தற்போது சோதனை நிறுத்தத்துக்கு ஒத்துவந்திருக்கும்போது அதைத் தன் வெற்றியாகக் கருதுவதற்குப் பதில், குருஷேவ், அவர்கள் முன்பு சொன்ன வாதங்களையும் செய்த தடைகளையும் இப்போது தாமும் சொல்லித் தடுத்து வருகிறார்.

இதனாலெல்லாம் வாயு மண்டலத்தில் பரவும் புகை போலவே மக்கள் உள்ளத்திலும் இருள் பரவியிருக்கிறது. இனி நடக்கவிருப்பது என்ன என்பது பற்றி உலகம் கவலையில் ஆழ்ந்திருக்கிறது.

இதையெல்லாம் மனத்தில் கொண்டு பார்த்தால், குருஷேவுக்கும் கென்னடிக்கும் சமாதானத்தில் நம்பிக்கையில்லை என்றுதான் தோன்றும். உண்மை அதுவல்ல. போர் மூண்டால் அது சர்வ நாசத்தில்தான் முடியும் என்பது தீர்மானமான பின்பும் சமாதானத்தை விரும்பாதவர்கள் யாரும் இருக்க முடியாது.

இருந்த போதிலும் வல்லரசுகள் மீண்டும் அணு ஆயுத சோதனைகளைத் தொடங்கியிருப்பதன் காரணம் பயம் என்கிற பேய்தான்; சமாதானத்தில் தனக்குள்ள நம்பிக்கை எதிர்க் கட்சிக்கு இருக்காதோ என்று பரஸ்பரம் கொண்டுள்ள ஐயப்பாடு பயத்தில் முடிந்து யுத்தத்தில் கொண்டுபோய் விடுவதாக இருக்கிறது.

சமாதான ஆசையும், சமாதானத்தைக் குறித்த பயமும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்திருக்கும் இந்த விந்தையைப் போலவே வேறு சில முரண்பாடுகளும் இப்புதிய நடவடிக்கைகளிலிருந்து தெரிய வருகின்றன.

யாரும் எதிர்க் கட்சி குண்டுகளுக்கு இலக்காகாத வகையில், தானே இயங்கிக் குண்டுகளைப் போடும் ஆளில்லாத யுத்த விமானத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்து

கொண்டிருப்பதாகப் பிரிட்டனிலிருந்து வெளியான ஒரு செய்தி குறிப்பிடுகிறது. மனித சமுதாயத்தையே அடியோடு நாசமாக்கக் கூடிய குண்டுகளைத் தயாரிப்பவர்கள் தங்களில் ஒரு சிலருக்குக் கூட ஆபத்து விளைவிக்கக் கூடாது என்பதில் கவனம் செலுத்துவது விந்தையாகத் தானே இருக்கிறது?

அவ்வப்போது 'ஆபத்தற்ற' சோதனைகள் என்று விளம்பரப்படுத்தப்படும் செய்திகளில் உண்மையில் பொருளே கிடையாது. வான வெளியிலிருந்து, வெகு நாட்களாகச் சோதனை வெடிகளால் உண்டான விஷச் சத்துக்கள் படிப் படியாக நிலத்தில் இறங்கி வருகின்றன. இதனால் மனித குலம் தாங்கக்கூடிய அளவுக்கு அதிகமாகவே கதிரியக்கம் பரவும் என்று கூறப்படுகிறது. இதற்கு எதிர் வாதமாக, இயற்கையாகவே வானத்திலிருந்து வரும் விஷ அணுச் சத்துக்களோடு ஒப்பிட்டால் இது ஒன்றும் பெரிதல்ல என்று சிலர் சொல்லுகிறார்கள். இந்த வாதம் ஒரு பெரிய பொய் வாதம். இயற்கையில் வருவதை இயற்கைச் சக்திகளால் தடுத்து வருகிறோம். விஷத்தோடு விஷம்கலந்தால் பின்னால் கலக்கும் விஷம் சிறிதளவாயினும் மொத்தத்தில் பார்த்தால் நமது தாங்கும் சக்திக்கு அதிகமாகத்தான் ஆகும்.

ஐயமும், பயமும் விலகி நம்பிக்கை ஒளி பிறக்குமா என்று ஆதுரத்துடன் எதிர்நோக்குகிறது உலகம். இந்த இருள் நீங்குவதற்கு வெகு நல்ல பணி புரியக் கூடிய ஒரே நாடு இந்தியாதான். எனினும் நேருஜியின் சமீபகால நடவடிக்கைகள், முக்கியமாகத் தில்லியில் பெர்லினைப் பற்றி நேருஜி வெளியிட்ட அபிப்பிராயங்கள்-இவற்றைக் குருஷேவ் வரவேற்பது, நமது நடுநிலைமை பற்றி மேலைநாடுகளுக்குச் சந்தேகத்தை உண்டாக்கியுள்ளது. இது பரிதாபகரமான விஷயம்.

# தேர்தல் ஊழல் தீர வழி

தேர்தலில் வெற்றி பெறுவதற்குக் காங்கிரஸ் பண பலத்தை மட்டுமே நம்பி இருக்கிறது என்பது மீண்டும் சந்தேகமற நிச்சயமாகியுள்ளது.

அபேட்சகர்கள் தேர்தலுக்கு இவ்வளவுதான் செலவிடலாம் என்பதற்கு உச்சவரம்பு நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அபேட்சகர்கள் தனிப்படச் செலவிடும் தொகையுடன் கட்சியின் சார்பில் அவர்களுக்காகச் செய்யப்படும் தொகையையும் இதில் அடக்க வேண்டும் என்று சுயேச்சை அங்கத்தினர் திரு ஏ. டி. மணி ராஜ்ய சபையில் ஒரு தீர்மானத்தைப் பிரேரித்தார். இந்த நியாயமான யோசனையைக் காங்கிரஸ் கட்சி தனக்குள்ள பெரும்பான்மை பலத்தால் முறியடித்து விட்டது. ஜனநாயக முறையில் செல்வதை விடப் பண பலத்தைக் கொண்டு தேர்தலில் ஜெயித்து விடலாம் என்ற நம்பிக்கை காங்கிரஸில் வேரூன்றி விட்டது.

தில்லி மேல் சபையில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் இத்தீர்மானம் 'காரியசாத்திய மற்றது' என்று வர்ணித்தார்கள். சமீபத்தில், சட்ட மந்திரி திரு ஏ. கே. சென் அவர்கள் தேர்தல் செலவு குறித்த சட்டம் மிகவும் மோசமான முறையில் மீறப்படுகிறது என்று ஒத்துக்கொண்டார். ஆனால் "பூனைக்கு மணி கட்டுவது யார்?" என்று கேட்டு விட்டு இந்த அக்கிரமத்தை அதன் போக்கிலே விட்டு வைப்பதற்கும் ஆதரவளித்து விட்டார்.

கட்சிகள் தாங்கள் தேர்தலுக்குச் செய்யும் செலவுகளை விவரமாகக் கணக்குக் காட்டினால் அபேட்சகருக்காகச் செலவிட்ட தொகை எவ்வளவு என்பது வெகு எளிதில் தெரியவரும். இது காரிய சாத்தியமில்லை என்று சொன்னால் தனது நேர்மைக் குறைவை காங்கிரஸ் கட்சி தானே ஒத்துக் கொண்டிருக்கிறது என்பதுதான் அதன் பொருள். கட்சியின் பொதுக் கொள்கையைப் பரப்புவதற்காகச் செய்த செலவு என்றும், தனிப்பட்ட அபேட்சகர்களுக்காகச் செய்த செலவு என்றும் பிரித்துக் காட்டினால் தங்களுடைய சட்ட விரோதமான நடவடிக்கை வெளியாகி விடும் என்று காங்கிரஸ் பயந்ததினால்தான் தீர்மானத்தை அது தோல்வியுறச் செய்திருக்க வேண்டும்.

'பூனைக்கு யார் மணி கட்டுவது?' என்ற கேள்விக்கு ராஜாஜி பதிலளித்திருக்கிறார். சர்க்கார்தான் இந்தப் பொறுப்பை ஏற்று, பூனைக்கு மணி கட்ட வேண்டும் என்கிறார். தேர்தல் செலவு பற்றிய சட்டம் கேலிக்கூத்தாகாமல் தடுத்து நிறுத்த வேண்டியது சர்க்காருடைய கடமை. வாக்களிப்புத் தினம் நெருங்க நெருங்க ஏற்படும் வெறி காரணமாகத்தான் தேர்தலுக்காகத் தவறான வழியில் செலவு செய்




யப்படும் தொகை அதிகமாகப் பெருகுகிறது. வாக்காளர்களைக் கண்டுபிடித்து, நேரில் அவர்களோடு சம்பாஷித்து, வாகன வசதி கொடுத்து வோட்டுச் சாவடிகளுக்கு இட்டுச் செல்வதும், அவர்களை 'இதர' முறைகளில் திருப்தி செய்வதும் தேர்தல் தினத்தன்று நடக்கும் சர்வ சாதாரண சம்பவங்களாகி விட்டன. ஒழுங்கீனங்கள் அழிவதற்கு ராஜாஜி கூறும் யோசனை இதுதான்:

தேர்தலுக்கு ஒரு வாரத்துக்கு முன்பே தேர்தல் பிரசாரங்களைச் சட்ட பூர்வமாகத் தடை செய்ய வேண்டும். தேர்தல் தினத்தன்று வாக்காளர்களை வோட்டுச் சாவடிக்குக் கொண்டு வரும் பொறுப்பைக் கட்சிச் சார்பினருக்கு விட்டு விடாமல் சர்க்கார் ஊழியர்களே வாக்காளர்களிடம் வோட்டுப் பெட்டிகளுடன் 'வான்'களில் சென்று வோட்டுக்களைச் சேகரிக்க வேண்டும். அபேட்சகர்களின் பிரதிநிதிகளுக்கு இந்த வோட்டுச் சேகரிப்பைத் தக்கபடி கண்காணிக்க மாத்திரம் வசதிகள் செய்து தரவேண்டும். இதற்கு ஏற்படும் செலவுகளையும் சர்க்காரே செய்ய வேண்டும். அதாவது தேர்தல் நடவடிக்கைகளைத் தேசிய மயமாக்க வேண்டும்.

வோட்டுக்களைச் சேகரிக்க ஆகும் செலவுத் தொகைகளை அபேட்சகர்களின் பேரில் போடலாகாது. சர்க்காரே இந்த நடவடிக்கைகளை நடத்தினால் மொத்தத்தில் ஆகும் செலவு குறையும். இப்பொறுப்பை அபேட்சகர்களுக்கே விட்டு விட்டதனால் மொத்தச் செலவு அதை விடப் பன்மடங்கு அதிகமாகிறது. இந்தப் புதுஏற்பாடு ஜனநாயகத்துக்கும் தேர்தல் தூய்மைக்கும் பெரிய உதவியாகும்.

தனி மனிதர்களின் வியாபாரங்களைத் தேசிய மயமாக்குவதைக் காட்டிலும் தேர்தல் நடவடிக்கைகளைத் தேசிய மயமாக்க வேண்டியது மிகவும் அவசியம்.

வீடு வீடாகச் சென்று ஜனசங்கியை எடுப்பது போலத்தான் இதுவும். வாக்காளர் பட்டியல் தயாரிப்பதற்குத் தற்போது கடைப்பிடிக்கும் வழியும் இதுவேதான். இதனையே விரிவுபடுத்தச் சொல்கிறார் ராஜாஜி. வாக்காளர்களுக்கு அடையாளச் சீட்டு வழங்கச் சர்க்காரே ஏற்பாடு செய்ய வேண்டும். வோட்டளிக்கும் தினத்தன்று இந்தச் சீட்டுக்களைத் திரும்பிப் பெற வேண்டும் என்பதும் ராஜாஜியின் யோசனை.

வாக்காளர்களை அடையாளம் கண்டு கொள்வதும் அவர்கள் பட்டியலில் இடம் பெற்றிருக்கிறார்களா என்பதை உறுதிப்படுத்துவதும் இன்று 'தனியார் துறையில்' தான் இருக்கிறது. இதுவே லஞ்ச ஊழல்களுக்கு இடமளிக்கிறது.

# என்ன சேதி ?

## சென்னை நகரக் குடித்தனச் செலவு

சென்னை நகரின் ஜனத்தொகை இருபது லட்சத்துக்குக் குறைவாக இருப்பதால் இதனை பம்பாய், கல்கத்தா முதலிய பெரிய நகரங்களைப் போல் 'ஏ' வகுப்பு நகரமாக்குவதற்கில்லை யென்று சர்க்கார் கூறுகிறது.

சென்னை நகரின் ஜனத் தொகை இன்னும் சில ஆண்டுகளில் இருபது லட்சத்துக்கு உயர்ந்தால் இப்போது 'ஏ' வகுப்பு நகரமாக அங்கீகரிக்கப்பட்டுள்ள பம்பாய், கல்கத்தா முதலிய பெரிய நகரங்களின் ஜனத் தொகையும் அப்போது கணிசமாக உயரும். அதற்காக அந் நகரங்களுக்கு இன்னும் ஏதாகிலும் அதிக சலுகை அளித்தால் அந்தச் சலுகை சென்னை நகர சர்க்கார் ஊழியர்களுக்கு இல்லாமற் போகும். ஆகவே சென்னை நகரத்தை 'ஏ' வகுப்பு நகரமாக இப்போதே அங்கீகரிக்கா விட்டால் அதிலுள்ள சர்க்கார் ஊழியர்கள், டில்லி, பம்பாய், கல்கத்தா ஊழியர்களைவிடக் குறைந்த வருமானம்தான் நிரந்தரமாகப் பெற்று வர நேரிடும்.

சென்னை நகரஊழியர்களும், பம்பாய், கல்கத்தா, டில்லி ஊழியர்களைப்போலவே ஜாகை வசதி கிடைக்காததாலும், அத்தியாவசியப் பொருள்களின் விலைவாசி உயர்வினலும் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே அந்த அநுதாப எண்ணத்தைக் கொண்டு சென்னை நகரை ஏ வகுப்பு நகரமாகச் சர்க்கார் உயர்த்த வேண்டும்.

## போர்ச்சுகலின் பிரலாபம்

காலனி ஆட்சி முறை பற்றிப் போர்ச்சுகல் அரசாங்கம் கடைப்பிடிக்கும் விதண்டாவாதக் கொள்கை அனைவரும் அறிந்ததே. பிற நாடுகளின் சில திட்டுப் பிரதேசங்களில் தான் ஆட்சி செய்வதால் அப்பகுதிகள் போர்ச்சுகலின் பகுதிகளே என்றும் அவை, காலனிகள் ஆகாதென்றும் குயுக்தி வாதம் செய்கிறது போர்ச்சுகீசிய சர்க்கார். அதோடு விரைவில் இந்தக் காலனிகளில் பெருமளவுக்குப் போர்ச்சுகீசியர்களைக் குடியேற்றவும் திட்டம் வகுத்துள்ளது.

இதையெல்லாம் எதிர்த்துக் கண்டித்த இந்திய சர்க்கார், அவசியமானல் போர்ச்சுகலின் திட்டுக்களில் எவ்வித நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படும் என்று கூறியது. இதை 'இந்தியாவின் ஆக்கிரமிப்பு' என்று ஐ. நா. சபையின் பந்தோபஸ்துக் கவுன்சிலில் முறையிட்டிருக்கிறது போர்ச்சுகல். எல்லா வகையிலும் இந்தியாவையே சேர்ந்த இப்பகுதிகளில் இந்தியா ஆக்கிரமிப்பு நிகழ்த்துவதாகச் சொல்வது தனது உடைமையைக் காத்துக் கொள்ள முன்வரும் ஒருவனை அதைத் திருடுவதாகக் குற்றம் சாட்டுவது போலத்தான்.

போர்ச்சுகல் தர்பாரின் கீழ் அங்கோலாவில் நடை பெறும் அலங்கோலம் உலகறியும். அங்கு ஐ. நா. விசாரணைக் கமிட்டியை அனுமதிக்க மறுக்கும் போர்ச்சுகல் சர்க்கார், தான் கால் வைத்துக் கொண்டிருக்கும் இந்தியத் திட்டுக்களை ஐ. நா. கமிட்டி யொன்று மேற்பார்வையிட்டு உண்மை நிலையைக் கண்டறிய வேண்டுமெனக் கேட்டுக் கொண்டிருக்கிறது. காட்டுமிராண்டித் தனமான கொடுங்கோலாட்சி நடைபெறும் இப்பகுதிகளுக்கு எந்தத் தைரியத்துடன் ஐ. நா. கமிட்டியை அது அழைக்கிறது என்பதுதான் புரியவில்லை.

## புதுவையில் விஷமப் பிரசாரம்

இந்தியாவில் அந்நிய ஆதிக்கத்தின் வாடையை நீடிக்க விடுவது எவ்வளவு ஆபத்து என்பதைப் புதுச்சேரியிலிருந்து கிடைத்துள்ள சில தகவல்கள் உணர்த்துகின்றன. அங்கு பிரெஞ்சு ஆட்சியின்போது விசேஷச் சலுகைபெற்றஒரு சிலர் சங்கம் ஒன்று அமைத்துக் கொண்டு இந்திய சர்க்காரைப் பலமாகத் தூற்றி வெளியீடுகள் பிரசுரிக்கிறார்களாம். புதுச்சேரியில் இன்னமும் அரசாங்கக் காரியாலயங்களில் பிரெஞ்சுக் கொடிகளைப் பறக்க விடுவதைச் சாக்குக் காட்டி, இந்தியா அதனை துராக்கிரகம் செய்வதாக ஒரு பைத்தியக்காரத்தனமான குற்றச்சாட்டை வீசுகிறார்களாம். இப்பகுதி மீண்டும் பிரான்சுடன் இணைந்துவிட வேண்டும் என்று சொல்லும் அளவுக்கு இவர்களுடைய புத்திசாலித்தனம் முற்றி யிருக்கிறது.

புதுவையில் சட்டம், கட்டுப்பாடு, இவைகளை நிலைநிறுத்த இந்தியாவுக்கு உள்ள பங்கை உரிய முறையில் பிரயோகித்து இந்தத் துஷ்பிரசாரத்தை நிறுத்த வேண்டும். இந்த விஷமிகளை 'மூளைக் கோளாறு' உள்ளவர்கள் என்பதாகக் கருதி 'விட்டு வைத்திருப்பதாக' லோக சபையில் சட்ட மந்திரி கூறியிருப்பது சரியல்ல. இவ்விஷயத்தில் கண்டிப்பான நடவடிக்கை தேவை என சபாநாயகர் அவர்கள் அறிவுறுத்தி யிருப்பதை ஏற்று, திட்டவட்டமான முறையில் அப் பகுதிகளில் கட்டுப்பாட்டை அமுலாக்க வேண்டியது இந்திய அரசாங்கத்தின் கடமையாகும்.

# நேர்த்தியான பின்னல் வேலைகளுக்கு ★துருவா தான் முதலில் தேவை



அவள் ஒரு கம்பீரமான பெண்மணி. மிகவும் நேர்த்தியான துருவா நிட்டிங் வுல்லைப்பற்றி அவளுக்கு நன்றாகத் தெரியும்.



துருவாவின் ஸ்பெஷல் சாயங்கள் பல வித அழகிய கலர்களை அவளுக்கு அளிக்கின்றன.
3—ஸ்டார் மற்றும் 4—ஸ்டார் பிராண்டுகள்.



தரத்தில் மிகவும் சிறந்த துருவா வுல்லையே அவளுடைய குழந்தைகளுக்கு உபயோகிக்கிறாள்—அவை 100% பரிசுத்தமான வுல்களென்பதை அவள் அறிவாள்.



அவள் குடும்பத்திலுள்ள அனைவருக்கும் துருவா வுல்லையே உபயோகிக்கிறாள்.



மிருதுவான துருவா பேபிவுல்லே அவள் குழந்தை விரும்புகிறாள்—சுருங்காது மற்றும் சாயம்போகாது—டெட்டி-வுல்.

**வுல் நிட்வேர் டிஸைன் போட்டியில் சேருங்கள்**
ஒரு பரிசும் பெறுங்கள்

வுல் நிட்வேர் டிஸைன் பரிசைப் பெறுவதற்கு நேர்த்தியான துருவா நிட்டிங் வுல்லையே உபயோகியுங்கள்

**துருவா வுல்லன் மில்ஸ் பிரைவேட் லிட்., பம்பாய்**

எல்லா வியாபார விவரங்களுக்கும் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்: ஜே. அன்ட் பி. கோட்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
பம்பாய்: 81 பாலடன் ரோடு / டில்லி: கார்ஸ்டின் பாஸ்டியன் ரோடு / மதராஸ், 19, வாலியர் தெரு
கௌஹாத்தி: ஏ. டி. ரோடு; டோகோபாரி, அஸ்ஸாம்

DWM/ZJ6

# ராமநாதபுரம் ஜில்லாவில் ராஜாஜி

ஆகஸ்ட் இருபத்தெட்டாம் தேதி தொடங்கி இம் மாதம் மூன்றும் தேதி வரை ராஜாஜி கிழக்கு ராமநாதபுரத்தில் செய்த சுற்றுப் பிரயாணத்தின் போது, பட்டி தொட்டி கிராமங்களில் எல்லாம் மக்கள் காட்டிய அன்பையும் ஆர்வத்தையும் எழுத்தில் வடித்துத் தருவது இயலாத காரியமே.

இந்த முதிர்ந்த வயதில் உற்சாகத்துடன் ராஜாஜி சின்னஞ் சிறு கிராமங்கள் தோறும் விஜயம்செய்துவிட்டு வந்திருக்கிறார்.

காரைக்குடியை அடைந்ததும் தமிழ்நாட்டுச் சுதந்திரக் கட்சித் தலைவர் திரு. சா. கணேசன் தலைமையில் நகரப் பொது மக்கள் ராஜாஜிக்குப் பெரும் வரவேற்பு அளித்தனர். காரைக்குடி நகராட்சி மன்றக் கூட்டத்தில் சர்க்காரின் திட்டங்களால் மக்களுக்கு நேரக் கூடிய இன்னல்களை ராஜாஜி தமக்கே உரிய முறையில் உதாரணத்துடன் விளக்கினார்.

"சில மருந்துகள் வியாதிக்கும் விரோதி, உயிருக்கும் விரோதியாக இருக்கும். அம்மாதிரி தான் இருக்கிறது இன்றையசர்க்கார் வகுக்கும் திட்டங்கள். ஏழைமையைப் போக்குவதற்காகத் திட்டம் போடுகிறோம் என்கிறார்கள். ஆனால் இத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காகப் போடும் வரிகளின் பளுவைத் தாங்கும் மக்கள் உயிரோடு இருப்பார்களா என்றே சந்தேகம் உண்டாகி விடுகிறது!" என்றார்.

சுதந்திரக் கட்சியும் தி. மு. க. வும் எந்தக் கொள்கை அடிப்படையில் ஒன்று சேர முடியும் என்று காங்கிரஸ் கேட்கிறதல்லவா? திருப்பூவணத்தில் பேசும்போது இதற்கு ஈசாப் கதையொன்றை உதாரணமாக எடுத்துக் காட்டினார் ராஜாஜி.

'மூன்று எருதுகள் காட்டில் மேய்ந்துகொண்டிருந்தன. ஒரு புலி பார்த்தது. மூன்று எருதுகளும் சேர்ந்து தாக்கினால் சமாளிக்க முடியாது என்பதால் அவற்றுக்கிடையே பிரிவினையை மூட்டிவிடத் தீர்மானித்தது. ஓர் எருதைப் பார்த்து, 'நீ வெள்ளையாக இருக்கிறாய். நீ எப்படி அந்தக் கறுப்பு எருதோடும், சிவப்பு எருதோடும் சேரலாம்!' என்றது. அப்படியே கறுப்பு எருதிடமும், சிவப்பு எருதிடமும் சென்று அவை தம்முடன் நிறத்தில் வேறான மற்ற எருதுகளிடம் நட்புக் கொள்வது சரியல்ல என்றது. இப்படி மூன்று எருதுகளிடையும் ஒற்றுமையைக் குலைத்த பின் ஒவ்வோர் எருதாக அடித்துக் கொன்றுதின்று விட்டது புலி. இந்தப் புலியின் தந்திரத்தையே காங்கிரஸ் கையாளப் பார்க்கிறது" என்றார்.

சிவகங்கை வக்கீல்கள் தீர புருஷர்கள். அவர்கள் சங்கத்தில் பேசியபோது "ஜனநாயக ஆட்சியில் இரண்டு கட்சிகள் இருந்து பணியாற்ற வேண்டும். ஆளும் கட்சியைப் போலவே எதிர்க் கட்சியும் முக்கியமானதாகும். காங்கிரசுக்கு எதிராக அப்பணியை நிறைவேற்றச் சுதந்திரக் கட்சி இயங்குகிறது. எனவே சுதந்திரக் கட்சிக்கு உதவுவதும் சர்க்காருக்கு — நல்ல நிர்வாகத்துக்கு — உதவுவது போலத்தான்' என்றார் ராஜாஜி.

நாயன்மார்களில் ஒருவரான இளையான்குடி மாறனார் வாழ்ந்த இளையான்குடியில் நடைபெற்றபொதுக்கூட்டத்தில் பேசிய ராஜாஜி, சர்க்கார் ஒரு பொருளுக்குக் கன்ட்ரோல் விதித்துஇன்னவிலைக்கு விற்கவேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்வதால் ஏற்படும் கோளாறுகளையும் இன்றைய சர்க்காரின் அவல நிலையையும் சித்திரம்போல் வடித்துக் காட்டினார்.

வெளி நாடுகளில் நமது சர்க்கார் தரப்பில் கடன் கேட்கச் செல்லும் ஓர் அதிகாரி ராஜாஜியைச் சந்தித்தாராம். அவரிடம் ராஜாஜி 'இந்தக் கடன்களைத் திருப்பிக் கொடுக்க முடியுமா?' என்று கேட்டாராம். 'அது ஒரு நாளும் முடியாது' என்றாராம் அந்த அதிகாரி. 'இந்த நிலை வெளி நாட்டுச் சர்க்கார்களுக்குத் தெரியுமா?' என்று ராஜாஜி கேட்டாராம். 'தெரிந்திருக்கலாம்' என்றாராம் அதிகாரி.

இந்தச் சம்பவத்தைச் சொல்லி "கடன்களைத் திருப்பிக் கொடுக்கவில்லை யெனில் 'மகாத்மா காந்தி பிறந்த தேசத்தைச் சேர்ந்தவர்களா நீங்கள்?' என்று கேட்க மாட்டார்களா?" என்று புனித ராமேசுவர க்ஷேத்திரத்தில் நடந்த கூட்டத்தில் கேட்டார் ராஜாஜி.

கீழக் கரை முஸ்லிம் சகோதரர்கள் ராஜாஜியை அன்பினால் முழுக்காட்டித் திக்குமுக்காடச் செய்து விட்டார்கள்.

பாம்பன் நகரப் பொதுமக்கள் ராஜாஜிக்கு ரயில்வே ஸ்டேஷனிலேயே வரவேற்புரை வாசித்துக் கூட்டம் நடத்திவிட விரும்பினர். ராஜாஜி பிடிவாதமாக இதற்கு மறுத்துவிட்டார். "ரயில்வே நிலையத்தை அரசியல் கூட்டங்களுக்குப் பயன்படுத்தக் கூடாது" என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

இந்தச் சுற்றுப்பிரயாணம் தேவகோட்டையிலும் காரைக்குடியிலும் 3-ம்தேதி மாபெரும் பொதுக்கூட்டங்களில் பேசுவதுடன் முடிய வேண்டும் என்று திட்டம் வகுக்கப் பட்டிருந்தது. இந்தச் சுற்றுப் பிரயாணத்தில் ராஜாஜி அநேக இடங்களில் பழைய காலத்து ஸாரட் (குதிரை) வண்டியிலும் ஜீப்பிலும் கூடச் செல்லவேண்டியிருந்ததால் மூன்றும் தேதி பிற்பகலில் ராஜாஜியின் உடல் நிலை சுகவீனமடைந்தது. அதனால் அன்று மாலை நடக்கவிருந்த கூட்டங்கள் ரத்தாயின. தேவகோட்டை ஊராட்சி மன்றத்தாரும், வக்கீல் சங்கத்தாரும் ராஜாஜி தங்கியிருந்த இடத்துக்கே வந்து வரவேற்புரை அளித்தனர்.

காரைக்குடிப் பொதுமக்கள் மிகவும் ஏமாற்றமுற்றிருக்கிறார்கள். அவர்கள் விருப்பத்தை ராஜாஜிவிரைவிலே நிறைவுசெய்வார்.

இந்தக் கடுமையான சுற்றுப் பிரயாணத்தை இவ்வளவு வெற்றிகரமாக்கியவர்கள் அந்தந்த ஊர் சுதந்திரக் கட்சி நிர்வாகக் குழுவினர். அவர்களனைவரையும் பாராட்ட வேண்டும்.

திரு சா. கணேசன், கிழக்கு ராமநாதபுரம் மாவட்டச் சுதந்திரக் கட்சிச் செயலாளர் திரு கருமுத்து சிவலிங்கம், காரைக்குடி நகர சுதந்திரக் கட்சித் தலைவர் திரு ராமசாமி செட்டியார், திரு கரியமாணிக்க அம்பலம், கல்வல் ராஜாராம், பெ. மு. சுப. சுப்பையா செட்டியார் முதலியவர்கள் மிகச் சீரிய முறையில் பிரயாணத் திட்டத்தை ஒழுங்கு படுத்தியதைக் குறிப்பிட வேண்டும்.

# வட்டமேஜை

## புது வெள்ளம்

இதுவரை எங்களுக்குத் தெவிட்டாத தீங் கனியாய் பல நாவல்களை அள்ளி வீசிய திரு அகிலன் புது வெள்ளத்தில் எடுத்த எடுப்பி லேயே உள்ளத்தைக் கவர்ந்து கொண் டார். முருகையனும் அவனுடைய நண்பர் களும் சேர்ந்து, ''செய்து முடிப்போம், அல் லது செத்து மடிவோம்'' என்று கூறிய வார்த் தைகள், 'காற்றின் சீற்றத்தையும், காவேரியின் உறுமல்களையும், மேகத்திரளின் மோதுதலை யும் மீறிக் கொண்டு அவை விண்ணதிரச் செய்தன' என்ற வரிகள் என் உள்ளத்தில் உணர்ச்சிவெள்ளத்தைப் பெருக்கச் செய்தன. முருகையனோடு நாம் சேர்ந்து இலட்சியக் குரல் எழுப்பவாவது பிறந்திருக்கக் கூடாதா என்ற எண்ணத்தை ஏற்படுத்தின.

ஆரணி வில்சன்

திரு அகிலன் எழுதும் 'புதுவெள்ளம்' எடுத்த எடுப்பிலேயே தமிழ் மக்களின் இத யத்தில் இடத்தைப் பிடித்துக் கொண்டது.

'பாவை விளக்கு'க் கதையின் மூலம் தமிழ் மக்களின் உணர்ச்சியைத் தூண்டி விட்ட அகிலனின் மற்றொரு சமூகக் கதை 'புது வெள்ளம்' தமிழ் மக்களின் சமூகத் துறையில் நல்லதொரு மாற்றத்தை ஏற்படுத்திவைக்கும் என நம்புகிறேன்.

இளம்பூர்ணன்



இந்திய மோட்டார் உற்பத்தியாளர் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீ என். பால கிருஷ்ண அவர்களின் தகப்பனார் ஸ்ரீ நாராயணய்யரின் சதாபிஷேகம் சமீபத்தில் கள்ளிக்கோட்டையில் வேத முறைப்படி விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. இவ் வைபவத்துக்கு உறவினரும், நண்பர் களும் பிரமுகர்களும்வந்திருந்து பெரி யவரின் நல்லாசியைப் பெற்றார்கள்.

நாங்கள் புது வெள்ளத்தில் வருகிற முரு கையனோடு வருகிறோம். நல்லன பல சொல் லிக் காட்டி, நவ சமுதாயம் உருவாக்கும் கதாபாத்திரங்களை ஆசிரியர் அகிலன் எங் களுக்குத் தரப் போகிறார் என்ற நம்பிக்கைச் சுடர் முன்னுரையில் தோன்றுகிறது. தொடக் கமே முருகையனைத் தொடரவைக்கிறது. அவ னுக்குத் துணையாகிறார் குருஜாசிரியர். வழி காட்டி ஒளிகூட்டும் முருகையன் பணி வளர்வ தாக. சமுதாயம் புதிய சிந்தனையில், புதுத் தெளிவில் புதுமை வழியில் மலர்ந்திடத்தான் 'புது வெள்ளம்' வந்துள்ளதாக உணர்கிறோம்.

திருநெல்வேலி-6 ச. செந்தில் வேலன்
சீதாலெட்சுமி

வறண்டு கிடந்த எங்கள் நெஞ்சங்களில் 'புது வெள்ள'த்தைப் பாய்ச்சுகிறார் திரு அகிலன் அவர்கள். நீண்ட நாட்களுக்குப் பின் அவர் இனிய எழுத்தைத் தாங்கி வந்து மகிழ்வூட்டிய கல்கி ஆண்டு மலருக்கு நன்றி யும் பாராட்டுகளும். காட்சிகளை இழுத்து வந்து கண் முன் நடத்திக் காட்டும் அவர் எழுத்துக்களில் புது மெருகு புகுந்திருக்கிறது.

கல்லக்குறிச்சி கல்லேப்பிந்தன்

அன்பர் திரு அகிலனது 'புது வெள்ளம்' வான்புகழ் கொண்ட வள்ளுவரின் மூலக் கருத்துக்களினூடே இணைந்து, அழகுற கருத் துச் செறிவுடன் தொடங்கப்பட்டு, இதழ் தோறும் சுவையுடன் வளர்ந்து வருவது கண்டு மெத்த மகிழ்ச்சி.

புது தில்லி-5 ஏ. ஆர். ராஜாமணி

பெருக்கெடுத்து ஓடும் அகிலனின் இலக் கிய வெள்ளத்தில் மூழ்கி எழுந்தேன். 'அடுத்த மலரின் இதழ் எப்போது விரியும்?' என்ற ஆவல் தோன்றுமாறு கதாநாயகன் முரு கையனைப் பரபரப்பான கட்டத்தில் நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறார் ஆசிரியர்.

காந்தியின் புன்னகையில் பூத்த புரட்சிப் பூக்களைப் பாரதமெங்கும் பரப்பிய ஆயிரமா யிரம் வீர வாலிபர்களுள் ஒருவனாக முருகைய னைச் சித்திரிக்கிறார் ஆசிரியர். பொங்கும் புனல் சிந்தும் நுரையைப் போல் - அவனுடைய பேச்சு புதுவெள்ளத்துக்கு அழகு சேர்க்கிறது.

சமூக அரசியல் மறுமலர்ச்சிக்காகப் புரட் சிக் கொடியேந்தி நிற்கும் எங்களுக்குப் புது வெள்ளத்தினின்றும் புறப்படும் அறிவுத் திவலைகள் புத்துணர்ச்சி யளிக்கின்றன.

அகிலனின் சிந்தனையிலிருந்து மடையுடைத் துப் பாயும் அறிவு வெள்ளம் 'கல்கி'யின் மூலம் வாசகர்களை வந்தடைகிறது. இலங்கை பல்கலைக் கழகத் தமிழ் மாணவர்களிடையே அகிலன் மூட்டிய வீரக்கனல் விறுவிறுப்புடன் பரவிக் கொண்டிருக்கிறது.

கொழும்பு-3 பி. குமார பாரதி

காவிரியில் பொங்கிய வெள்ளம் மக்களுக் குச் சொல்லொணாத் துயரத்தை அளித்தது. 'கல்கி'யில் வரும் 'புதுவெள்ளம்' வாசகர்களை

# – லிப்கோ –

## குறைந்த விலைச் சிறு பதிப்புக்கள் [64]

சுவை மிக்க தமிழ்ப் பெரு நூல்களின் சுருக்கங்கள் (கைபடக்க அளவில்)

**ஒவ்வொன்றின் (1, 2 தவிர) விலை அணா 4 தான்!**

1. வள்ளுவர் வாய்மொழி (குறள் மூலம்) - **35 ந.பை.** 2. பொய்யாமொழிக்குப் பொழிப்புரை - **35 ந.பை.** 3. வள்ளுவர் வகுத்த வழி. 4. வள்ளுவர் காட்டிய ஏர். 5. வள்ளுவர் கண்ட காதலர். 6. வள்ளுவர் காட்டிய இல்லறம். 7-8. நாலடியார் (மூலம், தெளிவுரை). 9. பிற்கால நீதி நூல்கள் (மூலம்). 10. கடையெழு வள்ளல்கள். 11. இலக்கியச் சோலையிலே. 12. பாரதியும் பைந்தமிழும். 13. வருக! வாழ்க! (அழைப்பும் வாழ்த்தும்). 14. சிலப்பதிகாரம். 15. சிலப்பதிகாரப் பெண்டிர். 16. மணிமேகலை. 17. சீவக சிந்தாமணி. 18-19. நளவெண்பா (மூலம், சுருக்கம்). 20. அரிச்சந்திர புராணம். 21. குசேலோபாக்கியானம். 22. பன்னிரு ஆழ்வார்கள். 23. சூடிக்கொடுத்த சுடர்க்கொடி. 24. திருவிளையாடற் புராணம். 25. பெரிய புராணம். 26-29. திருஞான சம்பந்தர். திருநாவுக்கரசர். சுந்தரர். மாணிக்கவாசகர். 30-36. கம்பரது ராமாயணம். 37-41. வில்லிபுத்தூராரின் மகா பாரதம். 42. சில தனிப்பாடற் காட்சிகள். 43-44. கந்த புராணம். 45 குமரேச சதகம் (மூலம்). 46. வளையாபதி. 47. குண்டலகேசி. 48. நக்கீரர். 49. பட்டினத்து அடிகள். 50. தாயுமான அடிகள். 51. இராமலிங்க அடிகள். 52. தசாவதாரம். 53. கம்பன் கண்ட பிரகலாதன். 54. தெய்வத் திருமணங்கள். 55. பழந்தமிழ்க் காதல் காட்சிகள். 56. தோத்திரத் திருப்புகழ். 57-59. சுகர் சொன்ன கதை (பாகவதம்). 60. பாரதியார் பாடல்கள்-சில. 61. அறப்பளீசுர சதகம் (மூலம்). 62. ஈசன் அருள் பெற்ற இளங்கன்றுகள். 63. புத்தி தரும் பத்தி தரும் சத்தி தரும் முத்தி தரும் புராணக் கதைகள். 64. மணிவாசகரும் மணிவாசகமும்.




10-ஆம் வகுப்புப் பொதுத் தேர்வு, 1962

## லிப்கோவின்

'மூவர்'

# தமிழ் உரை நூல்

(வினா விடையுடன்)

**தேர்வுக்கு இன்றியமையாத யாவும் அடங்கிய சிறந்த உரை நூல்**

**விலை ரூ. 3.00**

**தேர்வுக்கு இல்லாத பகுதிகள்:**

செய்யுள்: III (ஊ), (எ); IV (அ) 1. (ஆ) 1,2,3,4,7. (ஊ) (1), (எ) (4), (5);

உரைநடை: பாடங்கள் 13 முதல் 17 உட்பட (*Vide* Supplt. to Part II — Sec. 3 of The F. S. G. Gazette No. 35-E d. 6-9-61).

---

1. லிப்கோவின் ஸம்ஸ்க்ருத உரை நூல் ... ரூ. 3
2. லிப்கோவின் ஆங்கில உரை நூல் ... ரூ. 3
3. தி லிட்டில் லிப்கோ டிக்ஷனரி (இங்.- இங்.- தமிழ்) 7-ஆம் பதிப்பு: 504 பக்கங்கள் ... ரூ. 3

**பிரதிகள் கிடைக்கும் இடங்கள்**

தி லிட்டில் பிளவர் கம்பெனி (லிப்கோ). (போன்: 88538) ரங்கநாதன் தெரு, சென்னை-17; M. தாமோதரம் & கம்பெனி, அப்பா பில்டிங்க், எஸ்பிளனேட், சென்னை-1; ஹிக்கின்பாதம்ஸ் ரெயில்வே ஸ்டால்கள்; C. R. நடராஜன் & ஸன், (போன்: 3610) பெரிய கடைத் தெரு, கோயம்புத்தூர்-1; கவிஞர் பதிப்பகம், (போன்: 2321) 241, ராஜ வீதி, கோயம்புத்தூர்-1; P. K. A. குழந்தைவேல் நாடார், மெயின் ரோடு, திண்டுக்கல்; சிவலிங்க விலாஸ் புத்தகசாலை, (போன்: 399) ஈரோடு; ஸ்ரீ வெங்கடேஸ்வரா புக் டிபோ, டவுன் ஹை ஸ்கூல் ரோடு, கும்பகோணம்; M. நடனசுந்தரம் பிரதர்ஸ், புதுமண்டபம், மதுரை; பிரபாத் ஸ்டோர்ஸ், காலேஜ் ரோடு, நாகர்கோவில்; A. K. சந்திரய்ய செட்டியார், கோட்டை, சேலம்-1; M. ஆறுமுகம் பிள்ளை, திருநெல்வேலி ஜங்ஷன்; S. கிருஷ்ணஸ்வாமி & கம்பெனி தெப்பக்குளம், திருச்சி-2; சைவப்பிரகாசம் பேப்பர் ஸ்டோர், 207, க்ரேட் காட்டன் ரோடு, தூத்துக்குடி; K. V. பிரஸ் புக் டிபோ, (போன்: 111) லாங் பஜார், வேலூர்; மற்றும் அநேக புத்தகக் கடைகள்.

** லிப்கோ நடமாடும் புத்தக ''வேன்''களிலும் கிடைக்கும்.*

NALIN

மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியுள்ளது. அகிலனிடம் சொல்லி அவர்பேனாவைச் சில நாட்களுக்கு இரவல் வாங்கித் தர மாட்டீர்களா?

கனியூர் ரா. கு.

## நாவல் பிறக்கிறது

நாம் நாவல்கள் பிறக்கின்ற 'சிதம்பர ரகசி'யத்தைக் கல்கி 13-8-61 இதழில் திரு சிதம்பர ரகுநாதன் அவர்கள் மிகச் சுவைபட விளக்கியுள்ளார். கற்பனைக் கருவொன்று முளைத்து, துளிர்விட்டுத் தழைத்துப் பத்தாண்டுகளுக்கும் மேலாக வளர்ந்து, முழுமையான எழிலைப் பெற்ற பின்னர் அவரது இதயத்திலிருந்து வெளிப்படுகின்ற காரணத்தினாலேதான் தமது கதாபாத்திரங்கள் அனைவரும் ஊனமற்ற பிறவிகளாக- மக்களின் பெரு மதிப்புக்குரிய இலட்சிய உருவங்களாக விளங்கி நேயர்களின் நெஞ்சங்களிலே நீங்கா இடம்பெற முடிகிறது என்று அவர் கூறுவதில் ஆழ்ந்த கருத்துக்கள் அடங்கியுள்ளன.

''கண்ணீர் விடுபவனோடு கண்ணீர் விடுவது, அவனுடன் சேர்ந்து ஒப்பாரி வைப்பது எழுத்தாளனுக்கு அழகல்ல; கண்ணீரைத் துடைக்க வழிகாணும் பாதையிலே செல்பவன்தான் சிறந்த எழுத்தாளன்.'' ''எழுத்தாளன் என்பவன் வாழ்க்கையில் பார்வையாளனாக இருக்கக் கூடாது. பங்குதாரனாக இருக்கவேண்டும்'' என்பன போன்ற ஒப்பற்ற கருத்துக்களை எழுத்துலகுக்குப் படைத்த நாவலாசிரியர் அவர்களுக்கு எனது இதயங்கனிந்த பாராட்டுக்கள்.

கோவை கு. சண்முகசுந்தரம்

சிதம்பர ரகுநாதன் அவர்களின் அழுத்தமான சொற்கள், நினைப்பு, எழுத்து இவை அபாரம். எல்லாவற்றுக்கும் மகுடமாக ''எனது குறையினை நான் கண்டுகொள்ள முடிகிறது என்றால், நான் வளர்ந்திருக்கிறேன் என்றுதானே அர்த்தம்'' என்பது என் மனத்தில் பதிந்துவிட்டது. 'பஞ்சும் பசியும்' என்ற புத்தகம் எங்கு கிடைக்கும்? என்று பஞ்சாகப் பறக்கிறது என் நெஞ்சம்!

பெத்தசாக்காணி வே. கிருஷ்ணமூர்த்தி

## மணிபல்லவம்

மணிமேகலையின் காலத்துக்கே அழைத்துச் சென்றுவிட்டார் திரு நா. பார்த்தசாரதி. ''கலக்கங்களிலிருந்துதான் தெளிவு பிறக்க வேண்டும்'' என்ற அடிகளின் அறவுரை யாவருக்கும் பொருந்தும். ''மோகம் நிறைந்த வார்த்தைகளால் ஒரு பெண் கலக்கம் உண்டாக்கினாள். தன் ஞானம் நிறைந்த வார்த்தைகளால் இன்னொரு பெண் என் கலக்கத்தைப் போக்கினாள். ''இப்படி ஓடுகின்றன இளங்குமரனின் எண்ணங்கள்.

''இரும்பில் தோன்றும் துரு வளர்ந்து பெருகி இரும்பையே அழித்துவிடுவது போலச் சஞ்சலம் மன உறுதியை அழித்துவிடும். மந்தையில் ஊரார் பசுக்களைக் கணக்கிட்டு எண்ணி மேய்க்கின்ற ஆயனைப்போல் நமக்குப் பயன்கொள்ளாமல் நூல்களை எண்ணிப் படிப்பதில் உறுதியில்லை. இன்றிலிருந்து உங்களுடைய ஒவ்வொரு நாளும் தெய்வ நாளாகக் கழிய வேண்டும்'' என்ற விசாகையின் உரை இளங் குமரனுக்கு மட்டுமல்ல, நம் எல்லோருக்குமே அட்சய பாத்திரம் ஏந்திய மணிமேகலையின் குரலாய் ஒலிக்கிறது.

தூய நினைவுகள் பொங்கும் மனத்தோடு உலகத்துப் பேரறிஞர்கள் எல்லாம் அணிவகுத்து நிற்கும் ஞான வீதியில் தனியொருவனாக நடந்து தான் வெற்றிக்கொடி உயர்த்திச் செல்வதாகக் கனவு காணும் இளங்குமரனது உருவையும், '' பசியும், நோய்களும், வறுமையும் வாட்டமும் கொண்டு தவிக்கும் இலட்சக் கணக்கான ஆண், பெண்களின் இருண்ட கூட்டத்துக்கு நடுவே நான் கையில் ஒரு தீபத்தை ஏந்திக் கொண்டு செல்கிறேன். என் கைத் தீபத்தின் ஒளி பரவிப் பசியும் நோயும் அழிகின்றன....நான் மேலே மேலே முடிவற்று நிலையற்று அந்த ஒளி விளக்கோடு நடந்து கொண்டே யிருக்கிறேன்'' என்று அரவிந்தனிடம் தன் கனவைக் கூறும் பூரணியின் உருவையும் படைத்த ஒரே ஆசிரியரான பார்த்தசாரதி அவர்கள் வெற்றிப் பாதையில் மேன்மேலும் உயர உயரச் செல்கிறார்.

கல்லிடைக்குறிச்சி கி. நாராயணன்

---

சென்னை யுனைடெட் கமர்ஷியல் பாங்கின் மானேஜர் திரு எம். கருணாகர் அவர்கள் நியூயார்க் சேஸ் மான்ஹட்டன் பாங்கில் நடைபெறும் கடன் விவாத அரங்கில் கலந்துகொள்வதற்காக லண்டன் மார்க்கமாகச் செல்லுகிறார். அவர் மனைவியாரும் அவருடன் செல்கிறார். அவரை நண்பர்களும் உறவினர்களும் பாங்கின் உத்தியோகஸ்தர்களும் உற்சாகத்துடன் வழியனுப்பி வைத்தனர்.



# நாகரிகமிக்க நல்வாழ்வுக் கலை

பாப்ளின்கள்

சாவரின் ஸ்டார் • கோல்டன் க்ரேடு
கோல்டன் மனார்க் • டெப்பாசிட்டா
ரிஜென்டா

## பின்லே — நேர்த்தியான ஆடைகளை அளிக்கும் ஆலயம்



தி பின்லே க்ரூப் ஆப் மில்ஸ்

2-17-0

## டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில், அநேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சரியமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்டுகளிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:
டேம் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்

# அன்பே ஆரமுதே

## தி. ஜானகிராமன்

### அத்தியாயம் இருபத்துநான்கு

**சா**ந்தோம் கடற்கரையில் அனந்தசாமியும், கிழவரும் வெகுநேரம் பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள். எத்தனை நேரம்தான் பேசாமலிருப்பது?

தொப்பென்று ஓர் அலை ஓங்கி விழுந்து கரைந்தது.

''நான் வந்து ....... என்று ஆரம்பித்தார் கிழவர். அனந்தசாமி கவனிக்காததைக் கண்டு சற்றுப் பேசாமலிருந்தார். இரண்டு நிமிஷங்கள் கழித்து அனந்தசாமியின் கண்கள் அவர் பக்கம் திரும்பினதும் மீண்டும் சொன்னார்.

''நான் வந்து இந்த ஜன்மாவிலே யாரையும் கஷ்டப்படுத்தினதில்லை. அப்பா அம்மாவை நன்றாக வைத்துக் காப்பாற்றினேன். தங்கைகளுக்கு நிறையச் செய்து கல்யாணம் பண்ணி வைத்தேன். மூத்த சம்சாரத்தையும் உள்ளங்கையில் தான் வைத்துக் கொண்டிருந்தேன். அவள் பிள்ளைகளையும் நன்றாகப் படிக்க வைத்து வழி செய்து விட்டேன். இவளையும் அதிர்ந்து ஒரு வார்த்தை சொன்னதில்லை. உத்தியோகம் பார்க்கிறேனே, அதிலும் மனச்சாட்சிக்கு எந்த நாளிலும் அவமரியாதை காட்டினதில்லை. சம்பளத்தைத் தவிர தம்பிடிக் காசு இந்த உத்தியோகத்தில் பார்த்ததில்லை. அதற்காக, குமாஸ்தாக்கள், பியூன்கள் சாபம், மனஸ்தாபம் எல்லாம்கூடப் பாதகமில்லை என்று தலையில் கட்டிக் கொண்டிருக்கிறேன். மனசறிந்து யாருக்கும் எந்த அசௌகரியமும் உபத்திரவமும் செய்தது கிடையாது. அகம்பாவத்தோடு நான் சொல்லவில்லை. என்னால் முடிந்த மட்டும் நல்லவனாக இருக்கப் பிரயத்தனப்பட்டிருக்கிறேன். ஆனால் ஏன் இப்படி எனக்கு இந்த மாதிரி ஒரு இடி வந்து விழ வேண்டும்! ஒரு சமயம், இந்த ஜன்மத்தில் நல்லவனாக இருக்க முயன்றாலும், போன ஜன்மங்களில் பல பேரை வயிற்றெரிச்சல் கொட்டிக்கிட்டி, பிறர் சகிக்க முடியாத குரூரனாக இருந்திருப்பேனோ! வேறு வழியில் இதற்குக் காரணம் சொல்ல முடியவில்லையே...''

கிழவர் புலம்பிக் கொண்டிருந்தார்.

அந்த முக்கால் இருளிலிருந்து எங்கிருந்தோ ஓர் உருவம் வந்தது.

''நெய் முறுக்-முந்திரிப்பருப்பு, மிளகு வடை'' என்று குரல் கொடுத்தது.

''கடலை சாப்பிடுங்களேன்'' என்று அந்தப் புலம்பலுக்கு நடுவிலும் கிழவர் உபசாரம் செய்தார்.

''ம்ஹூம்!''

''பரவாயில்லை.''

''வேண்டவே வேண்டாம்'' என்று மறுத்தார் அனந்தசாமி. மறுகணம் கிழவருக்குப் பசிக்கிறதோ என்ற சந்தேகத்தில் அவனை எதையெதையோ கொடுக்கச் சொல்லிக் காசைக் கொடுத்தார்.

கிழவர் அவன் கையில் ஒரு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்து மிச்சம் வாங்கிக் கொண்டார். முறுக்குக்காரன் மீண்டும் மணலை அரைத்துக் கொண்டு நடந்து மறைந்தான்.

''என்னுடைய சம்சாரத்துக்குக்கூட நான் ஒன்றும் தவறு செய்யவில்லை. இளையாளாக அவளைக் கலியாணம் பண்ணிக் கொண்ட ஒரு வருத்தம் மட்டும் அவளுக்கு இருக்கலாம். ஆனால் அவளைக் கலியாணம் பண்ணிக் கொள்ளும்போது கூட எனக்கு வயது முப்பத்து நாலு தான். முதல் சம்சாரம் போய் நான்கு ஐந்து வருஷங்களுக்குப் பிறகுதான் கலியாணம் செய்து கொண்டேன். அவள் தம்பி ஏதோ வியாபாரத்துக்காகப் புரட்ட வேண்டியிருக்கிறது என்று பணம் கேட்டான், பத்து வருஷங்கள் முன்னால். அடுத்த மாதம் தந்து விடுகிறேன் என்றான். சம்பாதித்த பணம் அத்தனையையும் கொடுத்து விட்டேன். ஆறாயிரம் ரூபாய், உத்தியோகத்தில் மிச்சம் பிடித்தது, நெல் விற்ற பணம், எல்லாமாகச் சேர்ந்த மிச்சம். ஒரு வருஷம் ஆச்சு, இரண்டு வருஷங்கள் ஆச்சு. பணம் வரவில்லை. நோட்டு எழுதி வாங்கவும் இல்லை. வாங்கினால்தான் நடவடிக்கை எடுக்க முடியுமா? பத்து வருஷமாச்சு; பைசா வரவில்லை. ஒரு நோட்டாவது எழுதிக் கொடுக்கச் சொல்லேன் உன் தம்பியிடம் என்றேன் இவளிடம். 'என்ன அவ்வளவு பொறுமல் போய்விட்டோமா நாங்கள்?' என்றாள். வருஷக்கணக்கில் யுகக் கணக்கில் சேர்ந்து இழைந்து பழகினாலும் இந்த 'நாங்கள்' எப்படி வருகிறது பார்த்தீர்களா? பணம் வராதது கூட வருத்தமாயில்லை, எனக்கு. இந்த 'நாங்க'ளைக் கேட்டவுடன் மனசுக்குக் கொஞ்சம் கஷ்டமாகி விட்டது. எல்லாப் பொம்மனாட்டிகளும் அப்படித் தான் இருப்பார்களோ?'' என்று பேச்சை நிறுத்திக் கொண்டு கேட்டார் ராஜாங்கம்.

''எனக்கு என்ன தெரியும்?'' என்று சிரித்தார் அனந்தசாமி. ஆனால் கிழவர் காதில் அது சரியாக விழவில்லை. ஓர் அலை வேறு தொப்பென்று விழுந்து அதைச் சாப்பிட்டு விட்டது.

''அப்புறம் அந்தப் பணத்தைப் பற்றிப் பேச்சை எடுத்தால் அவன் முகம் கருங்கி விடும். பேசாமல் விட்டுவிட்டேன். அதைப் பற்றித்தான் குழந்தை அந்தக் கடுதாசியில் எழுதியிருந்தது'' என்று சட்டைப் பையைத் துழாவினார் கிழவர். ஒரு கடுதாசை எடுத்தார்.

''அந்தக் கடுதாசி என் கையில்தான் இருக்கிறது. நீங்கள் போய் வாசித்துப் பாருங்கள்'' என்று அனந்தசாமியிடம் கொடுத்தார்.

விருப்பமில்லாவிட்டாலும், கிழவரைச் சமாதானப் படுத்துவதற்காக அதை வாங்கிக் கொண்டார் அனந்தசாமி.

''எனக்கு என்ன செய்கிறது என்று புரியவில்லை'' என்றார்.

''இனிமேல் அவன் வந்து கூப்பிட்டால் அனுப்பாதீர்கள்'' என்று வெட்டினாற்போலச் சொன்னார் அனந்தசாமி.

''அனுப்ப வில்லை. அவனிடமும் சொல்லி விட்டுப் போகிறேன். நீங்களும் வந்து ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் சிநேகிதர்களைத் தான் நம்பியிருக்கிறேன். குழந்தை எப்படியாவது நன்றாக இருந்தால் போதும். எனக்காக நான் செய்து கொண்டது இரண்டுதான். வயிற்றுப் பாட்டுக்காக வேலை பார்க்கிறது. சொந்த சுகத்துக்காக இரண்டாவது தடவையும் கலியாணம் செய்து கொண்டது. இது தப்பாக இருக்கலாம், ஆனால் அவளுக்குப் பிறந்த குழந்தை இவன்-டொக்கியைச் சொல்கிறேன். அவன் சௌக்கியமாக இருக்க வேண்டும்'' என்று மீண்டும் கண்ணைத் துடைத்துக் கொண்டார் ராஜாங்கம்.

டொக்கியிடம் அவர் அபரிமிதமான பாசம் வைத்திருந்தார் என்று அனந்தசாமிக்குப் புரிந்தது. அந்தப் பாசம் அவரை எங்கெல்லாம் கொண்டுவிடப் போகிறதோ என்று நினைக்கும்போது, அவருக்குப் பயமாகத்தான் இருந்தது.

''ரங்கனிடம் இதைச் சொல்வதா, வேண்டாமா என்று தெரியவில்லை, எனக்கு'' என்றார் கிழவர்.

''அவரைப் பார்த்தால் எப்படித் தோன்றுகிறது உங்களுக்கு?''

''என்னமோ நல்லவராகத்தான் இதுவரை பழகி விட்டார். திருபுவனம், தாராசுரம், மகாபலிபுரத்துக்கெல்லாம் குழந்தையை அழைத்துக் கொண்டு போனார். குழந்தையிடம் ரொம்பக் கண்ணியமாக நடந்து கொண்டாராம். நானும் பார்த்த வரையில் சின்னத்தனமாக நடந்து கொள்ள மாட்டார் என்றுதான் பட்டுவருகிறது. இருந்தாலும்...''

''இருந்தாலும் என்ன?''

''இருந்தாலும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று உங்களுக்குப் பட்டால்.........''

அதைக் கேட்டு அனந்தசாமிக்கு ஆச்சரியமாயிருந்தது. எனக்கு ஏன் பட வேண்டும்? நான் ஏன் அபிப்பிராயம் சொல்ல வேண்டும்?



என்னைவிட அவளிடம் இத்தனை நாட்களாக, இத்தனை நெருங்கிப் பழகினவர் என்னை ஏன் கேட்க வேண்டும்?... பதிலே சொல்லவில்லை அவர்.

வெகு நேரமாகி விட்டது. கடற்கரை இப்பொழுது முற்றிலும் சூன்யமாகி விட்டது. மல்லாந்தும் கைகளைக் கால் இடுக்கிலும் வைத்து ஒருக்களித்துப் படுத்திருக்கும் 'சிந்தனையாளர்கள்' கூட இப்பொழுது ஒன்றிரண்டு பேர்தான் தென்பட்டார்கள். அலையும் நட்சத்திரங்களுந்தான் மணலைப் பார்த்துக் கொண்டிருந்தன. இருவரும் எழுந்து நடந்தனர்.

''இத்தனை நேரம் உட்கார்ந்திருந்தோமே—ஒரு துளி தண்ணீர் நம் மீது பட்டதோ? இப்படிச் சீறி உலகத்தையே அழிப்பது போல் அலைகள் வந்து கொண்டிருந்தன. நம்மை ஒன்றும் செய்யவில்லை. அலையோரமாக உட்கார்ந்தால் திரும்பத் திரும்ப வந்து நனைக்கும்'' என்றார் அனந்தசாமி.

அதைக் கேட்டுக் கொண்டே தலையைக் குனிந்து கொண்டு நடந்தார் கிழவர். ''ஆபத்து நம்மை வந்து தீண்டும்படியாக உட்கார்ந்து விட்டு, அப்புறம் வருத்தப்படக்கூடாது என்கிறீர்களா?''

''ஆமாம்.''

''சில சமயம், ஒரேயடியாகத் தாவியடித்துக் கொண்டு போகிறதே.''

''சமுத்திரம் அப்படி வராது. வந்தாலும் போதிய எச்சரிக்கை கொடுத்து விட்டுத்தான் வரும்.''

''வாஸ்தவம்...'' என்று வெட்கப்பட்டுக் கொண்டே நடந்தார் கிழவர்.

ஒரு பர்லாங்கு நடந்ததுமே, ஒரு ஸ்கூட்டர் அவர்கள் எதிரே வந்து 'கூர் கூர்' என்று காறிக் கொண்டே நின்றது.

''நீங்கள் எங்கே போய்விட்டு வருகிறீர்கள்?'' என்று கேட்டான் ரங்கன்.

''அடெடெ!''

''ரங்கன் சாரா?'' என்று கேட்டபடியே சிரித்தார் கிழவர்.

ரங்கன் காலையில் கண்ட உடுப்பில் வந்திருந்தான். கால் சட்டை, கொட்டடி போட்ட, சிவப்பும் கருப்பும் கலந்த அரைக்கைத் தளர் சட்டை.

''நான் இப்பொழுது உங்கள் வீட்டுக்குப் போய்விட்டு வருகிறேன்'' என்றான் அவன் அனந்தசாமியிடம்.

''என் வீட்டுக்கா?''

''ஆமாம், இவர்கள் வீட்டுக்குப் போனேன். அப்பா இன்னும் வரவில்லையே வரவில்லையே என்று டாக்கி னி பிடித்துப் போய்ப் பார்த்துக் கொண்டிருந்தாள். என்னடா இப்படிப் பயப்படுகிறாளே என்று உங்கள் வீட்டுக்கு வந்தேன். சொன்னால் கேட்டால்தானே? உங்கள் வீட்டில் நீங்கள் இல்லை. ஒருவேளை பீச்சுக்குப் போயிருப்பீர்களோ என்று வந்தேன். இவர்தான் சொல்லி விட்டுப் போகப்படாதோ?'' என்றான்.

அவன் பேசுவது காதில் விழாமல் அனந்தசாமியையும் அவனையும் மாறி மாறிப் பார்த்தார் கிழவர். உதட்டசைவிலிருந்து பேச்சைக் கண்டுபிடிக்க முயன்று கொண்டிருந்தார்.

''சும்மா இப்படிப் பேசிக் கொண்டிருந்தோம். நேரம் போனதே தெரிய



வில்லை. வீட்டுக்குத்தான் திரும்பிக் கொண்டிருக்கிறோம்'' என்று புன்சிரிப்புப் பூத்தார் ராஜாங்கம்.

''என்ன இவ்வளவு நேரம்? கிழவர் ஏதாவது சொன்னாரோ?'' என்று கேட்டான் ரங்கன்.

''ஏதோ சொன்னார்.''

''நாம் பிறரை ஏமாற்றினால், நமக்குத்தான் நஷ்டம். ஏமாளியைக் கடவுள் காப்பாற்றி விடுவார். உலகமும் ஏமாளிக்குப் பரிவு காட்டி விடும். ஏமாற்றுகிற நாம்தான் தனியாக நிற்க நேரிடும்'' என்றார் அனந்தசாமி.

''எல்லாம் சொல்லி விட்டான் டொக்கி. நான்தான் மத்தியானம் சொன்னேனே உங்களிடம். எனக்கு அப்பொழுதே தெரியும். ஆனால் நடந்ததை ஒருவர் சொல்லும் பொழுது, அப்பொழுதுதான் அதன் பயங்கரமெல்லாம் உணர முடிகிறது. காலையில் கோபமாக இருந்தது. இப்பொழுது நேரில் கேட்கிற பொழுது எங்கேயாவது உட்கார்ந்து அழவேண்டும் போல் இருக்கிறது. இந்தப் பயல் என் சிநேகிதனாக இருப்பது ஆபத்தாகி விட்டது. நான்தான் அறிமுகப்படுத்தி வைத்தேன். ஆனால் என் கழுத்திலேயே 'கத்தி வைப்பான் என்று நான் நினைக்கவில்லை'' என்றான் ரங்கன்.

அனந்தசாமிக்கு முகம் சற்று சிணுங்கிற்று. என்ன இவ்வளவு சொந்தமாகப் பேசுகிறான்!

''என்னமோ உங்களை நம்பியிருக்கிறேன் என்று சொல்லுகிறார் இவர்'' என்றார் மையமாக. ''உங்களை'' தன்னைக் குறிக்கிறதா, ரங்கனைக் குறிக்கிறதா என்று புரியாதபடிதான் சொன்னார் அவர்.

ரங்கன் அவரை ஒருகணம் பார்த்தான். குவிந்து கொண்டான். 'நான் பேசிப் பிரயோசனம் இல்லை. என் நல்லதனத்தை என் செய்கையைப் பார்த்தால்தான் தெரியும்' என்று சொல்வது போலப் பார்த்தான். சொல்லவில்லை. ''அந்த நம்பிக்கைக்குத் தகுதி உள்ளவனாகப் பகவான் அனுக்கிரகிக்கட்டும். நீங்களும் ஆசீர்வாதம் செய்யுங்கள்'' என்று சொன்னான்.

''என்னுடைய ஆசீர்வாதம் மட்டும் போதாது. அவரவர்களுக்கு மனோபலம் வேண்டும்......நல்லவர்களாக இருக்க வேண்டும் என்று புத்திபூர்வமான ஆசை இருக்க வேண்டும். தங்களுக்குத் தெரியாமலே சிலபேர் நல்லவர்களாக இருக்கிறார்கள். நான் நல்லவனாக இருக்கிறேன், இருக்கவேண்டும் என்ற பிரக்ஞையோடு வாழ்வதுதான் இன்னும் நல்லது. அந்த மனிதனுக்குத்தான் பலம் வரும். நான் கடவுளின் ஒரு பகுதி என்ற பாவம் வேண்டும். இல்லை, அந்த நினைப்பில் தவிட்டுத் தூற்றலில் நனைகிறது போல் நனையவாவது முயல வேண்டும்'' என்றார் அனந்தசாமி.

''இவ்வளவு பெரிய சிந்தனைப் பாரத்தைச் சுமக்கும் நிலையில் இல்லை நான் இப்போது. ஒரு பாவமும் அறியாத பெண்ணுக்கு. நேரும் துன்பத்தைத் தவிர்க்க பலம் இல்லாமல் பறக்கும் மனிதப் பூச்சியாக அலைகிறேன்'' என்றான் ரங்கன்.

அவன் குரலில் இருந்த பரபரப்பைக் கேட்டு அனந்தசாமியின் மனசு திடுக்கிட்டது; பூரிக்கவும் பூரித்தது.

''அந்தப் பெண்ணை நினைக்கும்போது எனக்குக் கொஞ்சம் பயமாயிருக்கிறது. நீங்கள் எனக்காக இப்போது ஒரு காரியம் செய்ய முடியுமா?'' என்று கெஞ்சாத குறையாகக் கேட்டான் அவன்.

''என்ன செய்ய வேண்டும்?''

''உங்களுக்கு எத்தனையோ நோயாளிகள் இருப்பார்கள். கவனிக்கப் போக வேண்டியிருக்கலாம். ஆனால் இந்தப் பெண்ணை ஒரு அவசரக் கேசாக நினைத்து இப்பொழுது என்னோடு வாருங்கள்.''

''என்ன அப்படி? சாயங்காலம் நான் அங்கேதானே இருந்தேன்?''

''தெரியும். மறுபடியும் அந்தப் பெண்ணுக்குத் தைரியம் சொல்லிவிட்டுப் போங்கள். என்னமோ குடி முழுகிப் போய் விட்டாற் போல் நடுங்கிக் கொண்டு கிடக்கிறாள்.''

''அதில் ஒன்றும் தப்பில்லையே. தம்முடைய ஒழுக்கத்தைப் பற்றி ஒரு ஜீவனுக்குக் குடி மூழ்கிப் போன கவலை இருப்பது நல்லதுதானே?''

''ஒழுக்கத்தைப் பற்றிய கவலை இல்லை இப்போது. அது கெட்டுவிட்டதே என்ற கவலைதான் இப்போது. நீங்கள் ஏன் வாதாடிக்கொண்டேயிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான் ரங்கன்.

அனந்தசாமிக்கு அவனுடைய துணிச்சலையும் சுவாதீனத்தையும் கண்டு வியப்பாக இருந்தது. மாற்றுப் பேச முடியாமல், அவனுடைய கண்ணை எதிர்த்துப் பார்க்க முடியாமல் நடந்தார்.

''நீங்கள் போங்கள். நான் இதோ வந்து விடுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே ஸ்கூட்டரை மிதித்துக் கிளப்பினான் ரங்கன். அவரும் ஏறக்குறைய ஒரு கட்டளை போலவே தள்ளிக் கொண்டு சென்ற அவனுடைய வேண்டுகோளுக்குப் பணிந்து கிழவருடன் நடக்க ஆரம்பித்தார்.

வீட்டுக்குள் நுழையும் பொழுது கல் இயந்திரத்தின் ஓசை கேட்டது. சமையலறை நிலையோரமாக ஒரு பெரிய கல்


Stanes
PURE INDIAN
COFFEE
STANES
FRENCH


தேர்ந்த ரசிகருக்கென விசேஷ
மாகப் பல ரகங்களைக் கலந்த
தூய இந்தியக் காப்பி
அல்லது இதிலிருந்து
மாறுதலை விரும்பு
வோருக்கு
பிரெஞ்சுக் காப்பி
Stanes
PURE INDIAN COFFEE
STANES FRENCH
THE UNITED COFFEE SUPPLY COMPANY LIMITED, COIMBATORE.

இயந்திரத்தில் அரிசியைப் போட்டுச் சுழற்றிக் கொண்டிருந்தாள் டொக்கி. பெரிய இயந்திரம். சாதாரணமாகச் சுழற்றுவது கடினம். நல்ல பலம் வேண்டும்.

"எங்கே மாமா போய் விட்டீர்கள்?" என்று கேட்டாள் அவள்.

"பீச்சுக்குப் போயிருந்தோம். திரும்பும்போது ரங்கன் எதிரே வந்தார். எங்களைத் தேடிக் கொண்டு தான் வருகிறேன் என்றார். ரொம்பப் பயப்பட்டாராமே! இந்தச் சென்னையிலே இப்படி பயப்படுவானோ?" என்று கேட்டார் அனந்தசாமி.

"பின்னே எங்கே பயப்படுகிறது?" என்று கல் இயந்திரத்தைப் பிடித்துக் கொண்டே கேட்டான் டொக்கி குனிந்துகொண்டே...

அனந்தசாமி சட்டென்று பேச்சை மாற்றினார். "அதிருக்கட்டும். இது என்ன வேலையம்மா? இந்த இயந்திரத்தை எனக்கே அசைக்க முடியாது போலிருக்கிறது. பழைய காலத்துப் பாட்டிகள், இங்காலப் பாட்டிகள் செய்ய வேண்டிய வேலைகள் இது. உனக்கு எதற்கு? தெருவிலே இறங்கினால் நூறு மாவு மிஷின்கள் இருக்கே. பட்டணத்துப் பொம்மனாட்டிகளெல்லாம் மியூஸியத்தில் இடமில்லை யென்றுதானே இவற்றை வீட்டில் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்....."

டொக்கி இலேசாகச் சிரித்து வைத்தாள் வறட்சியாக.

"இன்னும் சாப்பிட வில்லையே?" என்று கேட்டார் அவர்.

"அப்பாவுக்குப் பலகாரம் மாமா இன்றைக்கு. தோசை வார்த்து வைத்திருக்கிறேன். எங்களுக்கு மத்தியான சாதம் இருக்கிறது. நீங்களும் இங்கேயே பலகாரம் பண்ணலாம்."

"தோசை வார்த்த சூடு போதாதென்று இந்த மலையை உருட்ட ஆரம்பித்தாயா?"

"சும்மா உட்கார்ந்திருந்தால் பயமாக இருக்கிறது" என்று நிமிராமல் சொன்னாள் டொக்கி. "இன்றைக்கு இதைச் சுற்றுகிறது சிரமமாகவே இல்லை. இதைவிட இரண்டு பங்கு பெரிய எந்திரமாயிருந்தாலும் சுற்ற முடியும். இன்றைக்குச் சுற்ற வேண்டும் போல் தான் இருக்கிறது....."

இதைக் கேட்டதும் எது வந்தாலும் நெகிழாமல் பழகிக் கொண்ட அனந்தசாமியின் மனம் படபடவென்று சிலிர்த்தது. அந்த இளம் உடலையும் வயதையும் பார்த்தால் கண்ணீரின் சுவடு மறையாத அந்த முகத்தைப் பார்த்தார். அருகே சென்றார்.

"டொக்கி எழுந்திரு, பார்ப்போம்" என்றார் இன்னும் சற்றுக் கூடுதலாகப் புன்னகையைத் தருவித்துக் கொண்டு.

டொக்கி எழுந்து நின்றாள். "ஏன் மாமா?" என்று வினவினாள்.

"இப்படிக் கூடத்திலே நட, பார்ப்போம்" என்றார்.

டொக்கி நடந்தாள்.

"நிற்காமல் உடம்பைத் திருப்பாமல் என்னைப் பார்."

"என்ன மாமா இது?" என்று திரும்பினாள் டொக்கி.

"உடம்பு திரும்பக் கூடாது. நடந்து கொண்டே தலையை மட்டும் திரும்பிப் பார்க்க வேண்டும்."

"அது எப்படி மாமா முடியும்?"

"திரும்பிப் பார்க்கக் கூடாது என்பதற்காகத்தான் தலையை முழுதும் திருப்ப முடியாமல் நமக்கு வைத்திருக்கிறது. நாளையைத்தான் பார்க்க வேண்டும். நேற்றைய தினத்தைப் பார்க்கக்கூடாது. புரிகிறதா? இனிமேல் நீ அழுதாயோ, அழுதாய் என்று உங்கள் அப்பா சொன்னாரோ நீ மனுஷி இல்லை. பின்னால் திரும்பிப் பார்க்கிற மாடு என்று, நான் வரவேமாட்டேன் இங்கே!... ம்....என்ன?" என்றார் அனந்தசாமி.

"சரி, மாமா!"

"சரி. அப்பாவுக்கு இலையைப் போடு!" என்றார் அனந்தசாமி.

## அட்டைச் சித்திரம்

வண்ணப்படம்: சந்தாமியான் | கவிதை விளக்கம்: தமிழழகன்

ஆனை முகத்துப் பிள்ளையாரே,
அரச மரத்துப் பிள்ளையாரே,
பானை வயிற்றுப் பிள்ளையாரே,
பரமன் பெற்ற பிள்ளையாரே,

சந்திக் காவல் பிள்ளையாரே,
சலியா திருக்கும் பிள்ளையாரே,
வந்தோர் போவோர் யாவருமே
வணங்கிப் போகும் பிள்ளையாரே.

மூலப் பொருளே பிள்ளையாரே,
முன்னே இருக்கும் பிள்ளையாரே,
பாலும் பழமும் பிள்ளையாரே,
படைத்து வைப்போம், பிள்ளையாரே!

மனைவி மக்கள் பிள்ளையாரே,
மகிழச் செய்வாய், பிள்ளையாரே,
துணையும் நீ தான் பிள்ளையாரே,
தொல்லை தவிர்ப்பாய் பிள்ளையாரே!

'' இதோ போடுகிறேன் மாமா ... உங்களுக்கு?'' என்று இழுத்தாள் அவள்.

'' எனக்கு மட்டும் இல்லாமலா? காணுமோ இல்லியோ?''

'' நிறைய இருக்கு.''

இலையைப் போடும் போது ரங்கன் வந்தான். உபசாரத்தை மறுத்து விட்டான். அம்மா காத்துக் கொண்டிருப்பாளாம். அதிக உபசாரம் பலிக்கவில்லை.

அந்தச் சமையலறையிலே இருவரும் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தார்கள்.

'' குழந்தைகள் சாப்பிடவில்லையோ?''

'' சாப்பிட்டுத் தூங்குகிறார்கள்.''

வாசலில் கார் சத்தம் கேட்டது. குரல் கொடுக்காமலேயே ஓர் ஆள் உள்ளே வந்தான்.

'' யார்?'' என்றான் ரங்கன்.

'' நான்தான்'' என்று வந்த ஆள் உடனே வெளியே காலடி வைத்தான்.

'' யாரப்பாது?... அட! பங்காருவா?''

'' ஆமாங்க.''

'' எங்கே வந்தே?''

அப்புறம் பேச்சில்லை. ஒரு நிமிஷம் ஒன்றும் கேட்க வில்லை. காதில் விழுந்ததும் விழாததுமாக ரங்கன் கரகரப்பது கேட்டது. பின்பு கார் புறப்பட்டுப் போகும் ஓசை கேட்டது. டொக்கி, நிமிர்ந்து பார்த்து விட்டுப் பரிமாற ஆரம்பித்தாள். கை நடுங்கியது. அனந்தசாமி கூடத்தைப் பார்த்தார்.

ரங்கன் உள்ளே வந்தான்.

''யாரு?'' என்றார் அனந்தசாமி.

'' ஒத்திகைக்கு அழைத்து வரச் சொல்லி ஆள் வந்தது. யாரும் வர மாட்டார்கள் என்று சொன்னேன். இன்னும் ஒரு நிமிஷம் நின்றால் காலை ஒடித்து விடுவேன் என்றேன். வாலைக் காலுக்கிடையில் விட்டுக் கொண்டு ஓடிவிட்டது கார்'' என்றான் ரங்கன்.

என்ன?'' என்றார் கிழவர்.

''ஒன்றுமில்லை'' என்றார் அனந்தசாமி.

''யாராவது வந்தார்களா?''

''ஒருத்தருமில்லை.''

நோயாளியைப் போல அதை முழுவதும் நம்ப முடியாமல் சாப்பிட ஆரம்பித்தார் கிழவர் — சந்தேக முகத்துடன்.

''ராஸ்கல்'' என்று முணுமுணுத்தான் ரங்கன் கூடத்தில்.

சாப்பாடு முடிந்து பத்தரை மணி வரையில் பேசிக் கொண்டிருந்து விட்டு, விடைபெற்றார் அனந்தசாமி. ரங்கனும் அவர் தெம்பாக இருந்ததைப் பார்த்து விடைபெற்றுக் கொண்டான்.

''அப்பாடா'' என்று விடுதலையுணர்ச்சியுடன் மனத்தில் பாரமில்லாமல் வீட்டுக்கு வந்தார் அனந்தசாமி. மொட்டை மாடியில் பாயைப் பிரித்து, அவர் தலையணையான பணக்கட்டை மீது தலையை வைத்துப் படுத்தார்... சிரித்தார்.

எல்லாம் கனவு மாதிரி இருந்தது.

''ம்...உம்...ம்'' என்று உறுமல் கேட்டது. நெருங்கிக் கொண்டே வந்தது. காதே துளைந்து விடும் போல் பேரிரைச்சலுடன் நாகபுரி போகிற இரவுத் தபால் விமானம் தலைக்கு மேல் பறந்து சென்றது. அதில் நீலமும் சிவப்புமாக இரண்டு விளக்குகள் மாறி மாறிப் பளிச்சிட்டுக் கொண்டே பறந்தன.

என்ன இரைச்சல்! இவ்வளவு தாழ்வாகவா நகரத்தின் மீது பறப்பான் ஒருவன்!

''ஓகோ!''

இதில்தான் ருக்மிணி போய்க் கொண்டிருப்பாள் டில்லிக்கு. ஆமாம், இன்று தான் போகிறதாகச் சாயங்காலம் சொல்லிவிட்டுப் போனாள்.

''ஹ்ம்.''

மாறி மாறி எரிந்த நீல விளக்கும், செப்பு விளக்கும் சந்திராவைப் போலவும் டொக்கியைப் போலவும் இருந்தன அவருக்கு. (தொடரும்)

# சிங்கப்பூர்ப் பணம்

கிருஷ்ணன் நம்பி

நாணுவுக்கு ஒரு புதிய சிநேகிதன் கிடைத்தான். சிநேகிதன் என்றால் சாதாரண சிநேகிதனா? சிங்கப்பூர் சிநேகிதன். ரொம்ப ரொம்பப் பணக்கார சிநேகிதன். அவன் பெயர் பாலராஜா. ஆம், பாலராஜா! பேர்தான் எத்தனை ஜோராக இருக்கிறது. இத்தனை ஜோரான பெயருள்ள ஒரு பயலாவது இந்தக் கிராமத்தில் இருக்கிறானா? பாலராஜா என்றால் சின்ன ராஜா என்று அர்த்தம். சின்ன ராஜா என்றால் ராஜகுமாரன் என்று அர்த்தம். ராஜகுமாரன் மாதிரிதான் இருக்கிறான் இந்தப் பாலராஜா. சிவப்பாக, உயரமாக, கம்பீரமாக. நடுவகிடு எடுத்த கருட்டைத் தலை அலை அலையாக, கருகருவென்று பின்னோக்கிச் செல்வதுதான் எத்தனை நேர்த்தியாக இருக்கிறது.

பாலராஜா சிங்கப்பூரிலிருந்து தன் பாட்டியின் வீட்டுக்கு வந்திருக்கிறான். இரண்டு வயதுக் குழந்தையாக இருந்தபோது தன் அம்மா அப்பாவுடன் அவன் இங்கே வந்ததுண்டாம். எட்டு வருஷங்களுக்குப் பிறகு இப்போதுதான் மீண்டும் தன் பாட்டியைப் பார்க்கக் கிராமத்துக்கு வருகிறான். மூன்று மாதங்கள் இங்கே இருப்பான். பிறகு கப்பலில் சிங்கப்பூர் போய்விடுவான். இந்தக் கிராமத்தில் ஒரு பயலாவது கப்பலில் பிரயாணம் செய்திருப்பானா? ஏன், கப்பலைத்தான் பார்த்திருப்பானா? ம்ஹூம்....எல்லாம் கட்டை வண்டிதான்!

ஆயிற்று. பாலராஜா கிராமத்துக்கு வந்து ஒரு மாதம் ஓடி விட்டது. இன்னும் இரண்டு மாதங்கள் தான் இங்கே இருப்பான் அவன். ஆனால் இந்த ஒரு மாதத்திலேயே இருவரும் மிக நெருங்கிய நண்பர்களாகி விட்டார்கள். நாணுவின் வீட்டுக்கு அடுத்த வீடு பாலராஜாவின் பாட்டியின் வீடு. பெரிய வீடு. நாணுவின் வீடு சின்ன வீடுதான். அதுவும் வாடகை வீடு. அவனுடைய தகப்பனார் பண்ணையார் மாமாவிடம் கணக்கெழுத்து வேலை பார்க்கிறார். மாதம் அரைக்கோட்டை நெல் சம்பளம். பண்ணையார் மாமா வீட்டில் மிஞ்சிப்போகிற காய்கறிகளும், சோறு கறிகளும் நாணுவின் வீட்டுக்கு வரும். நாணுவின் தாய் தினமும் பண்ணையார் வீட்டுக்குப் போய் அடுக்களை வேலைகள் செய்து கொடுக்கிறாள். நாணு ஐந்தாவது வகுப்பில் படிக்கிறான். படிப்பில் அவன் கெட்டிக்காரன். கணக்கில் நூற்றுக்கு நூறு வாங்குவான் அவன். நாணுவின் அப்பாவால் புதிதாகக் கடையிலிருந்து நோட்டுப் புத்தகம் வாங்கிக் கொடுக்க முடியாது. காகிதம் வாங்கி, ஊசியில் நூலைக் கோத்து நியூஸ் பேப்பர் அட்டை போட்டுத்தான் தைத்துக் கொடுப்பார். அந்த நோட்டுப் புத்தகம் அசிங்கமாக இருக்கும். ஆனால் நோட்டுப் புத்தகத்தின் முதல் பக்கத்தில் எம். நாராயணன், ஐந்தாம் வகுப்பு, பாண்டிபுரம் ஆரம்பப் பள்ளி, பாண்டிபுரம் என்று குண்டு-குண்டாகச் சித்திரம் எழுதுவது போல் அப்பா ஆங்கிலத்தில் விலாசம் எழுதிக் கொடுப்பார். அது பார்ப்பதற்கு எவ்வளவு அற்புதமாக இருக்கும், தெரியுமா? அந்தக் கையெழுத்தைப் பார்க்கவே மாணவர்கள் வந்து கூடுவார்கள். ''ரொம்ப ஜோரா யிருக்கடா'' என்று ஆச்சரியத்துடன் கண்களை அகலத் திறப்பார்கள். புருவங்கள் மேலே உயரும். அப்போது நாணுவுக்கு ரொம்பவும் பெருமையாக இருக்கும். தன் அப்பாவின் சாமர்த்தியத்தை எண்ணி எண்ணி மகிழ்ச்சி அடைவான். பாலராஜாவின் அப்பாவைப் போல் நாணுவின் அப்பாவும் ஏன் பணக்காரராக இல்லை? பாலராஜாவின் அப்பாவுக்கு மகாராஜாவுக்கு வருவதுபோல் நிறையப் பணம் வருகிறதாம். மாதம் எவ்வளவு பணம் வருகிறது தெரியுமா அவருக்கு? நாலாயிரம் ரூபாய். அடேயப்பா! அந்தப் பணத்தை எப்படித்தான் அவர் எண்ணிக் கணக்கிடுவாரோ என்று நினைக்கிறான் நாணு.

பாலராஜா நாணுவுக்கு ஓர் அருமையான நோட்டுப் புத்தகம் கொடுத்தான். முந்நூறு பக்கங்கள். காகிதங்கள் தகடுபோல் கெட்டியாகவும், சலவை செய்த வேட்டி போல் வெள்ளை வெளேரென்றும் இருந்தன. அட்டை பளபளவென்று கண்ணாடிபோல் பிரகாசித்தது. சிவப்பு நிற அட்டை. அந்த அட்டையில் நீல நிறத்தில் நட்சத்திரங்கள் மின்னின. வானத்திலிருந்து பறித்து ஒட்ட வைத்தவை போலிருந்தன, அந்த நட்சத்திரங்கள். அந்த நோட்டுப் புத்தகத்தை ஆறாம் வகுப்புக்கு என்று தீர்மானித்துப் பெட்டிக்குள் வைத்துப் பூட்டி விட்டான் அவன். அம்மாதிரி ஒரு நோட்டுப் புத்தகம் அந்தக் கிராமத்தில் வேறு யாரிடமும் கிடையாது.

பாலராஜாவும் நாணுவும் அந்தக் கிராமத்துக்கு ஆறு மைல் தெற்கே இருக்கும் பட்டினத்துக்குத் தினமும் மாலையில் போவார்கள். சிவப்பு நிறமான, நீளமான சர்க்கார் பஸ்ஸிலே போவார்கள். தலைக்கு நாலணா பிரயாணக் கட்டணம். அதைப் பாலராஜா தான் கொடுப்பான். நாணுவிடம் பணம் ஏது? பாலராஜா நாணுவைப் பட்டணத்துப் பெரிய ஹோட்டலுக்கு அழைத்துச் செல்லுவான். ஒருநாள் பாதாம் -ஹல்வா, ப்ரூட் ஸாலட், நெய் தோசை, ஜவ்வரிசி வடை— இப்படி என்றால் அடுத்த நாள் இன்னொரு விதம். நாணு பார்த்திராத, கேட்டிராத பதார்த்தங்கள் அவை. இரண்டு பேரும் போட்டி போட்டுக்கொண்டு சாப்பிடுவார்கள். அதற்கும் பாலராஜாதான் பணம் கொடுப்பான். நாணுவிடம் ஏது பணம்? அவனுடைய அப்பா சிங்கப்பூருக்குப் போய்க் கை

நிறையச் சம்பாதித்துக் கொண்டு வந்தால் அவனிடமும் பணம் இருக்கும்.

வாரத்தில் ஒரு நாள் இருவரும் சினிமாவுக்குப் போவார்கள். முதல் வகுப்பில், மின்சார விசிறிக்கு அடியில், மெத்தை தைத்த நாற்காலியில் ஜோராக உட்கார்ந்துகொண்டு படம் பார்ப்பது எத்தனை குஷி! இரண்டு ரூபாய் டிக்கட். பாலராஜாவின் பர்ஸ்'பும்' மென்று பன்ரொட்டி போல் உப்பி யிருக்கும்.

பாலராஜா வெகு 'டீக்'காக டிரஸ் பண்ணிக் கொள்ளுவான். சில்க் ஸ்லாக் ஷர்ட்டும், சில்க் நிஜாரும், தங்கப் பூக்கள் போட்ட தோல் பெல்ட்டும், கறுப்பு ரப்பர் பூட்சுகளும் அணிந்து 'சர்க் சர்க்' என்று கடிகாரக் கையையும் கடிகாரமில்லாத கையையும் வீசிக்கொண்டு அவன் நடந்து வருவது கண்கொள்ளாக் காட்சி. பேசும்போது இடையிடையே அவன் தோளைக் குலுக்குவது பார்க்க வெகு ரசமாக இருக்கும். பாலராஜாவுடன் டவுனுக்குச் செல்லுகையில், நாணு சற்று வெட்கப் படுவான். முரட்டுக் காக்கி நிஜாரும், காசிக்கல் துணியில் தைக்கப்பட்ட பழைய மாடல் அரைக் கைச்சட்டையும்தான் அவனுடைய சிறந்த உடைகள். துவைத்துத் துவைத்துப் பழுப்பேறிப் போன, சுருக்கங்கள் நிறைந்த உடைகள் அவை. வேறு வழி?

பாலராஜா சிங்கப்பூரிலிருந்து ஒரு விந்தையான பொருள் கொண்டு வந்திருந்தான். அதைக் கண்ணுக்கு நேரே பிடித்துக் கொண்டு பார்த்தால், வெகு தொலைவில் மலையில் மேயும் மாடு, மிக அருகில் பெரிதாய், கல ஜோராய்த் தெரியும். இரண்டு நண்பர்களும் அந்த விந்தையான தூரதிருஷ்டிக் கண்ணாடி மூலம் இந்த உலகத்தின் தூரக் காட்சிகளையெல்லாம் கண் விளிம்பில் பார்த்து மகிழ்வார்கள். பார்த்தபின் அந்தக் கண்ணாடியை ஒரு பிளாஸ்டிக் பெட்டியினுள் போட்டு மூடி விடுவான் பாலராஜா. அம்மாதிரிப் பெட்டி உலகத்தில் வேறு யாரிடமும் இருக்க முடியாது. அத்தனை அழகான பெட்டி அது. பாலராஜா, பாலராஜாவிடம் இருந்த பொருள்கள் எல்லாமே அழகாகவும், நூதனமாகவும், அற்புதமாகவும் இருந்தன.

நாட்கள் ஓடி விட்டன. இன்னும் பத்தே நாட்களில் பாலராஜா ஊருக்குப் போய் விடுவான். அவனுடைய அப்பாவிடமிருந்து அவனுக்குக் கடிதம் வேறு வந்து விட்டது. அந்தக் கடிதத்தை அவன் நாணுவிடம் காட்டினான். கையெழுத்து நன்றாக இல்லை. நாணுவால் படிக்கவே முடியவில்லை. 'நான் படிக்கிறேன்' என்று அந்தக் கடிதத்தை வாங்கி உரக்கப் படித்தான் பாலராஜா. தன் தந்தையின் கடிதத்தைப் படிப்பதில்தான் எத்தனை பெருமை அவனுக்கு. எத்தனை அன்பு ததும்பத் தம் பிள்ளைக்குக் கடிதம் எழுதி யிருக்கிறார் அந்தத் தகப்பனார். அத்தகைய ஒரு கடிதம் எந்தக் காலத்திலும் தனக்கு வர முடியாது என்று நினைத்தபோது நாணுவின் கண்கள் கலங்கின. பாலராஜாவிடம் சற்றுப் பொறாமை கூடத் தோன்றிற்று அவனுக்கு. நாணுவின் அப்பாவும் சிங்கப்பூருக்குப் போனால் அவரிடமிருந்து அவனுக்கு இம்மாதிரி அன்பு ததும்பும் கடிதங்கள் வரும். அந்தக் கடிதங்களைப் படித்து விட்டு அவைகளில் ஒட்டப்பட்டிருக்கும் புதுமையான சிங்கப்பூர் தபால்தலைகளை யெல்லாம் எடுத்துப் பத்திரப்படுத்தலாம்.

மறு நாள் காலையில் தெருக்கோடியில் வந்து கொண்டிருந்த தபால்காரனைத் தூரதிருஷ்டிக் கண்ணாடி மூலம் வெகு சமீபத்தில் பார்த்து ரசித்துக் கொண்டிருந்த போது நாணு கேட்டான்: ''இது என்ன விலை பாலராஜா?''

''நாற்பது ரூபாய்.''



"நூற்றிருபது ரூபாயா?"

"ஆமாம்....! ஏன், உனக்கு வேணுமா?"

"இதுவா?.....என்கிட்டே பணம் ஒன்றும் இல்லையே.......!"

"இதை நீயே எடுத்துக்கொள்...இந்தா, என் பிரஸன்டேஷனாக..ம்..வாங்கிக்கொள்."

நாணு திக்குமுக்காடிப் போனான். அவனால் நம்பவே முடியவில்லை.

"எனக்கு வேண்டாம். உன் பாட்டி ஏதாவது சொல்லுவாள். உன் அப்பா இதை எங்கே என்று கேட்க மாட்டாரா?"

"பாட்டி ஒன்றும் சொல்ல மாட்டாள். அப்பாவிடம் நான் சொல்லிக் கொள்கிறேன். இதை நீ எடுத்துக் கொள்."

பாலராஜூவின் அன்பை எப்படி எதிர்கொள்வது என்று தெரியாமல் விழித்தான் நாணு. தன் மகிழ்ச்சியை வெளியிடும் வகை அறியாதவனாய், வியப்பு மேலிட, தன் சிநேகிதனின் முகத்தை ஏற இறங்கப் பார்த்தபடி கைகளை முன்னே நீட்டினான். அந்தத் தூரதிருஷ்டிக் கண்ணாடி மட்டுமல்ல, அந்த அருமையான பிளாஸ்டிக் பெட்டியும் நாணுவுக்குக் கிடைத்துவிட்டது.

அவன் வீட்டுக்குப் போய்த் தன் அம்மாவிடம் அதைக் காட்டினான். அவள் அந்த அதிசய வஸ்துவைக் கண்டு ஆச்சரியப்பட்டு மூக்கின் மேல் விரலை வைத்தாள். "அவன் கொடுத்தானா. இல்லை அவனுக்குத் தெரியாமல் எடுத்துக்கொண்டு வந்து விட்டாயா?" என்று சந்தேகத்துடன் கேட்டாள் அவள். நடந்ததை விவரித்தான் நாணு. "அந்தப் பையனிடமிருந்து இதையெல்லாம் வாங்கிக் கொண்டு வருகிறாயே, நாம் அவனுக்கு என்ன கொடுக்கப் போகிறோம்?" என்று கேட்டாள் அம்மா. என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் திரு திருவென்று விழித்தான் அவன். பாலராஜூவுக்கு அவன் என்ன கொடுக்க முடியும்? கொடுப்பதற்கு அவனிடம் என்ன இருக்கிறது? இரவில் படுக்கையில் புரண்டு கொண்டே யோசனைகளில் ஆழ்ந்தான் நாணு. ஒரு விடையும் காண முடியாமலே தூங்கிப் போய் விட்டான் நாணு.

மறு நாள் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. நாணுவுக்கு ஒரு ரூபாய் கிடைத்தது.

வீட்டின் ஒரு மூலையில் கள்ளிப் பெட்டி ஒன்றில் அடைத்து கிடந்த பழைய ஓட்டை உடைசல் சாமான்களை எதற்கோ வென்று அள்ளிக் கொட்டிச் சுத்தப்படுத்திக் கொண்டிருந்தாள் அம்மா. நாணு பக்கத்தில் நின்று கவனித்துக் கொண்டிருந்தான். ஒரு பழைய அஞ்சறைப் பெட்டி நாணுவின் கண்களில் பட்டது. நாணு அந்த அஞ்சறைப் பெட்டியைக் கையிலெடுத்தான். அதற்குள் என்ன இருக்கும்? திறந்து பார்த்தான் நாணு. அவன் கண்கள் வியப்பில் விரிந்தன. கரித் தூசி படிந்த ஒரு நாணயம் பெட்டியோடு பெட்டியாக ஒட்டிக் கொண்டிருந்தது. ஆவலோடு அதைக் கையிலெடுத்து ஒரு காகிதத் துண்டால் அதை நன்றாகத் துடைத்துப் பார்த்தான். ஆம், சந்தேகமே இல்லை. முழுசாக ஒரு ரூபாய் அவனுக்குக் கிடைத்து விட்டது! அவனுடைய அப்போதைய தேவையை முன்பே தெரிந்து கொண்டு யாரோ அவனுக்காக அந்த ஒரு ரூபாயை அந்த அஞ்சறைப் பெட்டியினுள் வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். அது அவனுடைய பாட்டியின் பெட்டி என்று அம்மா சொன்னாள்.



அப்படியானால் நாணுவுக்காகப் பாட்டி முழுசாக ஒரு ரூபாய் வைத்து விட்டுப்போயிருக்கிறாள். நாணு தன் பாட்டியைப் பார்த்ததே இல்லை. நாணு அதிர்ஷ்டக்காரன்தான்! அந்த ஒரு ரூபாயில் தன் அருமை சிநேகிதன் பாலராஜாவுக்கு அவன் ஒரு பரிசுப் பொருள் வாங்கிக் கொடுக்க முடியும். ஊர் திரும்புகையில் பாலராஜா வாங்கிப் போகத் தீர்மானித்திருந்த அந்தத் தேர்ப் பொம்மையையே வாங்கிக் கொடுத்து விடலாம்.

அன்று மாலையிலும் வழக்கம்போல் அந்த நண்பர்கள் டவுனுக்குப் போனார்கள். வழக்கம்போல் சிவப்பான சர்க்கார் பஸ்; பெரிய ஹோட்டல். அந்த ஹோட்டலுக்குப் பக்கத்தில்தான் அந்தக் கடை. அங்கே அந்தத் தேர்ப் பொம்மை தொங்குகிறது. நாணுவின் நிஜார்ப் பையில் இப்போது ஒரு ரூபாய் இருக்கிறது. அந்தத் தேர்ப் பொம்மையை அன்றே அப்போதே வாங்கிப் பாலராஜாவுக்குப் பரிசளிக்கப் போகிறான் அவன். ஹோட்டலிலிருந்து வெளியே இறங்கும்போது நாணு கேட்டான்: ''அதோ, அந்தக் கடைக்குப் போய் விட்டுப் போகலாமா?''

''எதற்கு?''

''அந்தத் தேர் என்ன விலை என்று கேட்கலாமே?'' என்றான் நாணு.

''விலையைக் கேட்பதற்கு ஒரு தரம், வாங்குவதற்கு ஒருதரமா? இப்போதே வாங்கி விட்டால் போச்சு.''

நாணுவுக்குத் 'துணுக்'கென்றது. பாலராஜாவே அதைப் பணம் கொடுத்து வாங்கி விட்டால்....? ஆனால் அப்படி நடக்காது. நாணு மிகவும் சாமர்த்தியமாக இப்போது நடந்து கொள்ளப் போகிறான். கடைக்குள் நுழைவது வரை, நுழைந்து அந்தப் பொம்மைத் தேரை வாங்கிக் கொண்டு முதலாளியின் கல்லா அருகே வருவது வரை, தானே பணம் கொடுக்கப் போவதாகத்தான் நினைத்துக் கொண்டு வருவான் பாலராஜா. ஆனால் அது நடக்காது. அவன் பர்ஸைக் கையில் எடுப்பதற்கு முன் நாணு அந்த ஒரு ரூபாயை முதலாளியின் கையில் நுழைத்து விடுவான். ''வேண்டாம், நானே கொடுக்கிறேனடா'' என்று கையைப் பிடித்துத் தடுப்பான் பாலராஜா. ஆனால் நாணு அதற்குச் சம்மதிக்க மாட்டான். ''பாலராஜா, இதை மட்டும் தடுக்காதே. நீ என் உண்மையான சிநேகிதன் என்றால் இதைத் தடுக்காதே. இது உனக்கு என் பரிசு. உன் தங்கைக்கும் இது என் பரிசு'' என்று உணர்ச்சியோடு சொல்வான் நாணு...

அந்தத் தேருக்குப் பதின்மூன்றணா விலை சொன்னான் கடைக்காரன். நாணு புளகாங்கிதமடைந்தான். அவன் எதிர்பார்த்ததுபோலவே விலை மிகவும் குறைவுதான். குறைவோ, கூடுதலோ, பாலராஜாவுக்கு என்ன கொடுத்தாலும் அது தகும். தன் திட்டப்படியே தன் நண்பனை முந்திக்கொண்டு அஞ்சறைப்பெட்டி தந்த செல்வத்தை முதலாளியின் மேசை மேல் வைத்தான் நாணு. உள்ளத்தில் தேன் பொங்குவது போலிருந்தது அவனுக்கு.

அவன் எதிர்பார்த்ததுபோலவே பாலராஜா ''வேண்டாம், வேண்டாம்'' என்று தடுத்தான். உணர்ச்சி நிறைந்த வார்த்தைகளில் அப்போது அவனிடம் என்ன சொல்லவேண்டுமென்று தீர்மானித்திருந்தானோ, அதைச் சொல்ல அவன் வாயைத் திறந்தபோது கடை முதலாளி இடி இடியென்று சிரித்தான். ''தம்பி, இந்த ரூபாய் உனக்கு எங்கிருந்து கிடைத்தது? ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தியல்லவா இதில் கம்பீரமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறார். இது செல்லாதப்பா. வேறு பணம் கொடு'' என்றான் சிரிப்பை அடக்கிக் கொண்டு. நாணுவின் முகத்தில் 'குப்'பென்று, ரத்தம் ஏறி, கண நேரத்தில் உடலெல்லாம் வேர்த்துக் கொட்டிவிட்டது.

''பரவாயில்லை நாணு. நானே கொடுக்கிறேன். என்னிடம்தான் பணம் இருக்கிறதே'' என்று கூறித் தன் பர்ஸைத் திறந்து ஐந்து ரூபாய்க் காகிதம் ஒன்றை எடுத்துக் கடை முதலாளியிடம் நீட்டினான் பாலராஜா.

தாங்கமுடியாத அவமானத்தால் நாணு மனமும், உடம்பும் குன்றிப் போனான். பாலராஜாவே தன்னை அவமதித்து விட்டதுபோலிருந்தது அவனுக்கு. அந்த ஐந்து ரூபாய் நோட்டும் அவனை அவமானப்படுத்துகிறதோ? அவனுக்காகப் பாலராஜா செலவு செய்த பணமெல்லாம் நாணுவை அவமானப்படுத்திய பணம்தானோ? அந்தப் பரிசு - அந்தத் தூர திருஷ்டிக் கண்ணாடி - அதுகூட ஒரு மகத்தான அவமானச் சின்னம்தானோ?

அன்றிரவு படுக்கையில் கண்ணீர் சிந்தினான் நாணு. அவன் ஏன் ஏழையாகப் போய் விட்டான்? அவனுடைய அப்பா மட்டும் ஏன் பணக்காரராக இல்லை? அவரும் சிங்கப்பூர் போய் ஆயிரம் ஆயிரமாகச் சம்பாதித்தால் என்ன? எப்படியும் அப்பா சிங்கப்பூர் போயாக வேண்டும். கப்பல்காரனுக்குக் கொடுக்கப் பண்ணையார் மாமாவிடம் பணம் கேட்க வேண்டும்........

மறுநாள் காலையில் கண் விழித்ததும் 'அம்மா அம்மா' என்று உரக்கக் கூப்பிட்டான் நாணு. தலையில் விறகுக் கட்டுடன் வாசலில் நின்று கொண்டிருந்த ஒருவனிடம் அம்மா விலை பேசிக் கொண்டிருந்தாள். நாணு வாசல் பக்கம் போனான்.

''அம்மா.''

''என்னடா?''

''அப்பாவைச் சிங்கப்பூருக்குப் போகச் சொல்லம்மா.''

''சிங்கப்பூருக்கா? என்னடா உளறுகிறாய்?''

''சிங்கப்பூருக்குப் போனால்தான் அம்மா நிறையப் பணம் சம்பாதிக்க முடியும். பாலராஜாவின் அப்பா மாசம் நாலாயிரம் ரூபாய் சம்பாதிக்கிறார்'' என்றான் நாணு புருவத்தை உயர்த்தியபடி.

இந்தப் பேச்சைக் கேட்டுத் தலையில் விறகுக் கட்டுடன் ஒடிந்து விழுபவன் போல் நின்று கொண்டிருந்தவன் பெரிதாகச் சிரித்தான். ''குழந்தே, இருபது வருசமா நான் சிங்கப்பூரிலேதான் இருந்தேன். திரும்பி வந்து ஆறு மாசம்தான் ஆச்சு'' என்று சொல்லி விட்டு மீண்டும் சிரிக்கத் தொடங்கினான் அந்த விறகுக் கட்டுக்காரன். அவன் விலாவெலும்புகள் முறிந்து விழுந்து விடுபவை போல் புடைத்தன அவன் சிரிக்கையில்.

'அவன் ஏன் அப்படிச் சிரிக்கிறான்?' என்று புரியாமல் தன் தாயின் முகத்தைப் பார்த்தான் நாணு.

# நரவேட்டை

௨௩

கதை: ஜெயந்தி
சித்திரம்: விஜயம்

தற்காப்புக்காக ஷியாமளாவையும் உடன் இழுத்துக்
கொண்டு மலைச் சரிவில் ஓடுகிறான் லாஷா.
குமார் அவனைப் பின் தொடர, இன்ஸ்பெக்டர்
இரட்டையர்களைப் பிடிக்க விரைகிறார்.
















நான் பிடிபட்டால் எனக்குக் கிடைக்கக் கூடியது தூக்குத் தண்டனைதான். ஆகவே நான் எதற்கும் துணிந்து விட்டேன். நீ ஓர் அங்குலம் நகர்ந்தாலும் ஷியாமாவின் உயிர் பிரிந்து விடும்.


இந்த வாக்கு வாதத்தின்போது ஓர் உருவம் யாருமறியாமல் பாறைகளுக்கிடையில் புகுந்து முன்னேறுகிறது.


லாஷாவுக்குப் பின்னால் வந்து சட்டென்று துப்பாக்கி ஏந்தி இருக்கும் அவன் வலக்கரத்தைப் பற்றி முறிக்கிறான் வின்சி!


சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் ஷியாமாவின் கூரிய பற்கள் லாஷாவின் இடக்கரத்தைப் பதம் பார்க்க...
ஓ! அம்மா!!


வின்சியின் மென்மையான உடலை உதைத்து உருட்டித் தள்ள முரடனுக்கு அதிக நேரமாகவில்லை.


தன்னை விடுவித்துக் கொண்டு கணவனிடம் ஷியாமா ஓடி வருகையில்...
குமார்!
ஷியாமா!

...லாஷாவின் கரத்திலுள்ள துப்பாக்கி வெடிக்கிறது.



குமாரின் கழுத்தை ஒரு கணம் ஆவலோடு சுற்றி வளைத்த பூச்சரக் கரங்கள் துவண்டு விழுகின்றன.




இன்ஸ்பெக்டர் வருகிறார்.

இரட்டையர் அகப்பட்டுக் கொண்டார்கள். ஐயோ! இதென்ன?

திகைக்கவேண்டாம், இன்ஸ்பெக்டர்! ஷியாமாவை இழக்காமல் லாஷாவைக் கைப்பற்ற முடியாதென்றேன்! அது உண்மையாயிற்று. அவ்வளவு தான்.



லாஷாவை இன்ஸ்பெக்டரிடம் ஒப்புவித்து விட்டுக் கீழே இறங்குகிறான் குமார். மலர்ச் சுமையைத் தாங்குகின்றன அவன் கரங்கள். மனச் சுமையைத் தாங்க முடியவில்லை அவனால்.



மூன்று மாதங்களுக்குப் பின் ஒரு நாள் தன் மேலதிகாரியின் எதிரே நிற்கிறான் குமார்.

லாஷாவின் மோட்டார் காரில் தேடியபோது கிடைத்த தகவல்களின் படி நாடு முழுவதும் பரவிக் கிடந்த ஒற்றர்கள் அனைவரையும் உடனடியாகக் கைது செய்தோம்....



இருந்தாலும் நீ இதை வெற்றியாகக் கருதவில்லை என்பது எனக்குத் தெரியும், குமார்! உனக்கு ஓய்வு தேவை. மன அமைதியை நாடி எங்கேயாவது போய் வா!



இரு தினங்களுக்குப் பிறகு ஓட்டல் டைவிமோவில்...

தங்குவதற்கு ஓர் அறை வேண்டும்!

ரூம் நம்பர் பதினாறு, லக்ஷ்மி! இவரை அழைத்துச் செல்!

என்னம்மா யோசனையா ருகிறீர்கள்? வந்திருப்பது யாரென்று தலை நிமிர்ந்து பாருங்களேன்!

குமார்! நீங்களா?

ஆமாம் விஜயா! ஓட்டலில் தங்க இடம் தருவதுடன் உன் இதயத்திலும் எனக்கு இடமிருக்கலாமோ என்று எதிர்பார்த்து வந்திருக்கிறேன்.

விஜயாவின் கண்களில் நீர் திரையிடுகிறது.

இம்மியளவு கூட அது பற்றி உங்களுக்குச் சந்தேகம் உண்டாகலாமா, குமார்?

மலைச்சரிவில் உருண்டு விழுந்த உன்னைத் திரும்பிப் பாராமலே சென்று விட்ட என்னைப் பற்றி நீ என்ன நினைப்பாயோ என்று நான் தயங்கினேன்.

விஜயா! உன்னைக் காதலிப்பது போல நடித்ததே வெறும் 'நடிப்புத்தான்' என்பதை மூன்று மாதப் பிரிவு எனக்கு உணர்த்தி விட்டது!

குமார்! நான் பாக்கியசாலி!

அடக்கமாட்டாத ஆர்வத்துடன் நான்கு கரங்கள் நீளுகின்றன.

முத்தம்

# வெள்ளிப் பனி மலை வீதியிலே

## 6. கண்டோம்—கண்ணுக்கினியன கண்டோம்!

**என்.வி.அனந்தராமன்**

குதிரைக்காரர்கள் இல்லாவிட்டால் அங்கேயே சில நாட்கள் தங்குவதைத்தவிர மேலே போக முடியாதென்று கூறினார் சுவாமி வித்தியானந்த சரஸ்வதி. கயிலையைக் காணும் ஏக்கம் தவிப்பாக மாறியது. என்ன செய்வதென்று தெரியாமல் மயங்கி யிருந்தோம். என்ன செய்வதென ஒன்றும் புரியவில்லை.

சில ஆண்டுகளுக்குமுன் குதிரைக்காரர்களும் வழித்துணையான கூலி ஆட்களும், தகராறு செய்து விட்டதன் காரணமாகக் கயிலை யாத்திரைக் குழு ஒன்று இந்த இடத்திலேயே ஒரு வாரம் முகாம் போட்டு விட்டு வந்த வழியே திரும்ப வேண்டியதாக நேர்ந்ததைச் சுவாமி வித்தியானந்த சரஸ்வதி எங்களுக்குச் சொன்னார். மீலத்திலிருந்து ஜீவன் சிங்கும் பொருள்களும் வரவில்லையே என்ற கவலை வேறு. குதிரைக்காரர்களில்லாத கவலை வேறு. நாங்கள் அதிர்ச்சியடைந்திருந்தோம்.

குதிரைக்காரர்கள் கலகம் செய்துவிட்டுத் திரும்பிப் போனபின்பு மேலே யாத்திரையை எப்படித் தொடர்வதென்று தயங்கிக் 'கோபாங்' ஆற்றங்கரையிலேயே இருந்தோம். அந்த நிலையில் மறுபடியும் இருவருளின் துணை எங்களுக்குக் கிடைத்தது. 'வேண்டத்தக்கது அறிந்து, வேண்ட முழுதும்'- தரும் இறைவனின் பெருமையை மறுபடியும் நாங்கள் வியந்து வணங்க நேர்ந்தது. எங்கள் வழிகாட்டியான ஜீவன்சிங் வழியில் குதிரைக்காரர்களை எதிரே சந்தித்து அவர்களுக்கு நல்லுரை கூறிச் சமாதானப்படுத்தி அவர்களைத் திரும்பவும் அழைத்துக் கொண்டுவந்து விட்டான். 'ஜீவனை'க் கண்டபின் எங்களுக்கு மறுபடியும் ஜீவன் வந்தது.

ஒருவாறு காலை பதினொரு மணியளவில் 'சம் கால்' கிராமத்தை விட்டுப் புறப்பட்டோம். கோபாங் நதியைச் சார்ந்தாற் போல் பாதை செல்கிறது. போகப்போகக் கடுமையான ஏற்ற இறக்கங்களையும், கரடுமுரடான பாதைகளையும், மலைச் சரிவுகளை அறுத்து ஓடும் நதிகளையும் சமாளிக்க வேண்டியிருந்தது. நடந்து நடந்து முன்னேறி, 'துங்' என்ற இடத்தை அடைந்து அங்கிருந்த பெரிய சமவெளி ஒன்றில் தங்கினோம். இந்த வட்டாரங்களில் கணவாய்ப் பகுதிகள் நிறைய இருந்தன. தாங்க முடியாத குளிர் நடுக்க ஆரம்பித்தது. சமவெளியில் கூடாரமடித்துத் தங்கியிருந்த இடத்திலேயே உணவு தயாரிக்க ஆரம்பித்தோம். உணவு தயாரிப்பதற்கான விறகைக் கூலிக்காரர்கள் கொண்டு வந்தார்கள். உணவைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? மீலம் என்ற இடத்துக்குச் சென்ற நான் முதல் கயிலைத் தரிசனம் செய்து திரும்பி வரும் வரை உருளைக்கிழங்கு ஆதிக்கம்தான். உருளைக்கிழங்கைத் தான் எத்தனை, எத்தனை விதமாகச் சமைத்துச் சோதனைகள் நடத்தினோம்? பொடிமாஸ், காரக்கறி, ஸப்ஜி, பஜ்ஜி, கூட்டு, பொரியல், வறுவல் இன்னும் எத்தனை, எத்தனையோ? உலகத்தில் இனிமேல் இந்த உருளைக் கிழங்கு என்கிற பண்டத்தை வேறு விதமாகச் சமைக்க முடியாது என்று தீர்மானம் பண்ணி விடத்தக்க விதத்தில் 'ரிகார்டு பிரேக்' நிலைமையை உண்டாக்கி விட்டோம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

நாங்கள் 'துங்' சமவெளியில் தங்கி விட்டுப் புறப்பட்ட நாளில் மாலை இருட்டுவதற்குள் மூன்று கணவாய்களைக் கடந்தாக வேண்டியிருந்தது. உத்தா, ஜயந்தி, குங்கிரி பிங்கிரி இம்மூன்று கணவாய்களையும் கடப்பதற்கே பதினேழு மைல்கள் ஆகும். கடல் மட்டத்துக்குமேல் 18,500 அடி உயரத்தில் செல்ல வேண்டியிருந்தது. கணவாய்ப் பகுதிகளைக் கடக்கும்போது, அடர்ந்த பனிமூட்டம், பனி பெய்தல், புயல் காற்று அடித்தல், பனிப்பாறைகள் வெடித்து விழ்தல் போன்ற துன்பங்கள் நிகழுமாம். எப்பொழுது என்ன துன்பம் நேரிடுமென்றும் சொல்ல முடியாது. இந்தக் கணவாய்களில் நடப்பதே வாழ்க்கையில் பெரிய சோதனைதான். முந்திய ஆண்டுகளில் இந்தக் கணவாய்களைக் கடந்தவர்கள் சிலர் பெருந் துன்பங்களுக்கு ஆளானதாக எங்கள் வழிகாட்டி கூறி யிருந்தான். அது வேறு நினைவு வந்து மனத்தைக் கலக்கியது.

நல்ல வேளையாக நாங்கள் கணவாய்களைக் கடக்கும் போது மழை சிறிதும் இல்லை. உத்தா கணவாயில் பெரிய பெரிய கூழாங் கற்களின் மேல்தான் கால் வைத்து நடந்து போக வேண்டி யிருந்தது. பனி அடைகள் வெள்ளைத் தூள்களைப் போல் விழுந்து கொண்டிருந்தன. வெளேரென்று பனி வெண்மையில் கண்கள் கூசாமல் இருப்பதற்காகப் பச்சைக் கண்ணாடி அணிந்திருந்தோம். என்றாலும் சிலர் கண்கள் நெருப்பு உண்டைபோல் ஆகி விட்டன. பனி ஒளியில் கண்கள் பூத்துப் போயின.

ஜயந்தி கணவாய் தொடங்கும் இடத்தில் இரண்டு தேநீர்க் கடைகள் இருந்தன. அங்கே சூடாகத் தேநீர் குடித்துச் சிறிது தெம்பு பெற்றோம். முன் கணவாயைக் காட்டிலும் இது மிகவும் உயரமானது.

அடுத்த கணவாயான குங்கிரி பிங்கிரிக் கணவாயில் உளியால் செதுக்கப்படாத இயற்கையன்னையின் தானாக நேர்ந்த சௌந்தரியங்களை நிறையக் கண்டோம். 'குங்கிரி பிங்கிரி' கணவாயைக் கடந்த பின் அதன் முடிவில் எதிரே காண்பதற்கு அரிய 'காட்சி' ஒன்று காத்திருந்தது. ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள அந்தக் காட்சியைக் கண்டு மெய் சிலிர்த்து நின்றோம்.

பனியால் அமைந்த சிவலிங்கத் திருமேனியும், கோட்டை மதில், கோயில், விமானங்கள், மண்டபங்கள், கோபுரங்கள் போன்ற அமைப்புடைய தூய வெண்மலர்ச் சிகரங்களுமாகக் கயிலாயத்தின் முதல் தரிச



திபெத் சமவெளி

ரோமங்களுடன் பயங்கரத் தோற்றமளிக்கும். அடுக்கடுக்கான கம்பளிச் சட்டைகளை அணிந்து யாக் மேல் ஏறிச் சவாரி செய்யும் போது பார்த்தால் எமதர்மராஜன் வெட்கப் பட்டுத் தலை குனிய வேண்டிய விதத்தில் தோற்றமளிக்கலாம். யாக் சவாரி செய்யும் போது பல முறை கீழேவிழவும் நேரிடும். சில சமயங்களில் 'யாக்' முரட்டுத் தனமாகத் தறிகெட்டு ஓடத் தொடங்கிவிடும். யாக்கில் போகும்போது பனி மழையும் கொடுமையாகப் பெய்தது.

ளம் தொலைவிலிருந்தே எங்களுக்குக் கிடைத்தது. கைலாசப்பொருளின் ஒன்றி விவரிக்க இயலாத பேரின்ப உணர்ச்சியைப் பெற்றோம். கற்பூரம் கொளுத்தி வணங்கினோம். சிவபரம் பொருளின் அந்தப் பேரொளி தொலைவில் இருந்தாலும் அங்கேயே முதற்காட்சியைக் கண்ட பெருமிதத்தில் நடையைத் தொடர்ந்தோம். மாலை ஆறு மணியளவில் 'சிர்ச்சின்' என்னும் ஆற்றங்கரையில் கூடாரம் போட்டோம். அந்த இடத்தைச் சுற்றிலும் தென்பட்ட காட்சிகள் களிப்பூட்டின. எங்கள் கூடாரத்துக்கு அருகே ஓடிக்கொண்டிருந்த சிர்ச்சின் நதியில் தண்ணீர் அரை அடி ஆழம் கூட இல்லா விட்டாலும் வேகம் ஆளையே அடித்துக் கொண்டு போகிறாற் போல் இருந்தது. சிர்ச்சின் நதிக்கரையில் தங்கச் சுரங்கங்கள் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். 'சாளக்ராமமும்' கிடைக்கும் என்று சொன்னார்கள். நான் தேடிப் பார்த்த போது ஒன்றும் கிடைக்கவில்லை. என்னுடைய வழிகாட்டி எனக்கொரு சாளக்ராமத்தைத் தேடி எடுத்துக் கொடுத்தான். சிர்ச்சின் நதிக் கரையில் அன்று காலை உணவை முடித்துக் கொண்டு 14 மைல்களுக்கு அப்பாலுள்ள 'கும்சின்' என்னும் முகாமுக்குப் புறப்பட்டு மாலை ஐந்தரை மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். கும்சின் முகாமுக்கு அருகில் தான் இந்திய எல்லைக்கோடு முடிந்து திபெத்திய எல்லை ஆரம்பமாகிறது. மேலே போகப் போகக் கோடி சூரியர்கள் ஒரே இடத்தில் சேர்ந்திருப்பது போலத் தாவள்யமான மலைச் சிகரங்கள் கூட்டம் கூட்டமாகத் தெரிந்தன. எங்கு பார்த்தாலும் ஓரேவிதமான காட்சிகள் தென்படுவதனால் இவ்வழிகளிலே நிறைந்த பழக்கமுள்ள திபெத்தியர்களுக்கே பாதை தடுமாறி விடுமாம்.

மறுநாள் நடுப்பகலில் 'மாணித் தங்கா' என்னும் முகாமுக்குச் சென்று ஓர் ஆற்றங் கரையில் தங்கினோம். அன்று இரவு குளிர் தாங்கஇயலாமல் இருந்தது. நெருப்பு மூட்டிக் குளிர் காய வேண்டிய நிலை ஏற்பட்டது. டர்பென்டைன் பூசிக் கொண்டே உறங்க முடிந்தது. இந்த முகாமுக்கு மேலே குதிரைகளால் யாத்திரையை நடத்த முடியாது. ஆகவே எங்களுடைய குதிரைகளுக்கும், குதிரைக்காரர்களுக்கும் நன்றி கூறி அனுப்பினோம். இங்கிருந்து 'யாக்' என்னும் எருமைகளிலே ஏறிச் சவாரியைத் தொடங்கினோம். 'யாக்' என்பது ஒரு வகைச் சடை எருமை. இவை கரடியைப் போல நீண்டு அடர்ந்த

பன்னிரண்டு மைல்களுக்கு அப்பால் திபெத் பீடபூமியைச் சேர்ந்த 'சூகாட்' என்ற ஊரை அடைந்த பின்பே நிம்மதி பெற்றோம். திபெத்தியர்களில் ஆண்களுக்கும், பெண்களுக்கும் பார்வையில் அதிக வித்தியாசம் தெரியாது. இரு வகையினருமே இரட்டைப் பின்னல் சடை போட்டுக் கொள்கிறார்கள். அவர்களுடைய உடைகளும், அணிகலன்களும் முரட்டுத்தனமாகவே இருக்கின்றன. எத்தனை மாதங்களுக்கு ஒரு முறை குளிப்பார்கள் என்பதைச் சொல்லவே முடியாது. துடைப்பத்தின் மேல் பசுநெய்யைச் சீப்பாகப் பயன்படுத்தித் தலை சீவிக் கொள்கிறார்கள் திபெத்தியர்கள். தங்கள் வீடுகளை மண்ணினாலும், கல்லினாலும் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். வீட்டின் உட்புறம் பகலிலேயே இருட்டாயிருக்கிறது. இவர்களில் பெரும்பாலோர் ஆடு மாடு மேய்ப்பவர்கள். இவர்களுடைய செல்வமே 'யாக்' என்னும் சடை எருமைகளும், ஆடுகளுமேயாம். ஒவ்வொரு குடும்பத்திலும் மூந்நூறு ஆடுகளுக்குக் குறையாமல் இருக்கும். ஒவ்வொரு வீட்டிலும் குறைந்த பட்சம் நான்கு நாய்களாவது வளர்க்கிறார்கள். ஒவ்வொரு வீட்டு வாயிலிலும் உரல் போன்ற ஒரு மரத் தொட்டியில் நிறைய மோர் ஊற்றி வைத்திருக்கிறார்கள். குளிர்ப் பிரதேசமாதலால் மோர் எத்தனை நாளானாலும் புளித்துப் போவதில்லை. பச்சைத் தேயிலையைக் கொதிநீரில் இட்டுக் காய்ச்சி உப்பைத் தூவிக் குடிக்கிறார்கள்; விருந்தாளிகளுக்கும் அளிக்கிறார்கள்.

27-7-59 அன்று அதிகாலையில் உணவு தயாரித்து உண்டு ஓய்வும்கொண்டு பின் இங்கிருந்து புறப்பட்டோம். பதினன்கு மைல்களுக்கு அப்பால் உள்ள தீர்த்தபுரி என்னும் ஊரை நோக்கிச் சென்றோம். இருட்டுகிற வரை நடந்து இருட்டிய பின் 'சூ-காட்' என்னும் நதிக் கரையில் 'குர்கியம்' என்னும் இடத்தில் கூடாரம் அடித்துத் தங்கினோம். மறுநாள் காலையில் நதியிலே வெள்ளம் மிகுதியாயிருந்ததனால் பயணம் தடைப்பட்டது. நதியிலே வெள்ளம் வடிந்த பின்பே புறப்பட்டோம். தீர்த்தபுரியை அடையுமுன் நடுவே ஸட்லெஜ் நதியை இரண்டு இடங்களில் கடக்க வேண்டியிருந்தது. அதற்கப்புறமும் தீர்த்தபுரி போகிறவரை களிமண் உளைகள் நிறைந்த பாதையாயிருந்ததனால் கால்களைப் பூமியில் ஊன்றினாலே முழங்கால் அளவு அழுந்தியது. துன்பங்களைச் சமாளித்து மாலை ஐந்து மணிக்குத் தீர்த்தபுரியை அடைந்தோம். (தொடரும்)




**நா**ன் பத்திரிகாசிரியனாக, இலக்கியக் கலைஞனாக, அதிலும் நாவல் ஆசிரியனாக வந்தது சிறிதும் எதிர்பாராத சம்பவம். இளமையில் என் நாட்டம், இசை, நாடகம், ஓவியம் ஆகிய அழகுக் கலைகளில் பதிந்திருந்தது. ஆனால்வாழ்க்கை வருவாய்க்கென நான் தாளாண்மையை மேற்கொண்ட போது அச்சுப் பிழை பார்ப்பவனாகவும் தட்டெழுத்தாளனாகவும், குமாஸ்தாவாகவுமே என் வாழ்க்கை தொடங்கியது. புத்தகங்கள் படிப்பதிலும், பிரசங்கங்கள் கேட்பதிலும்எனக்கிருந்த பேரார்வம் இளமையிலேயே பேரறிஞர் பலருடைய கூட்டுறவை ஏற்படுத்தியது. 'திருக்குறள் விளக்கம்' ஆசிரியர் குப்புசாமி முதலியார், 'அபிதான சிந்தாமணி' ஆசிரியர் ஆனூர் சிங்காரவேலு முதலியார், மகா வித்துவான் கா. நமசிவாய முதலியார், திருவி.க., மு.இராகவ ஐயங்கார், கம்பர் விலாசம் இராஜ கோபால் ஐயங்கார், மணி. திருநாவுக்கரசு முதலியார், 'கலாநிலையம்' டி. என். சேஷாசலம் அய்யர், மறைமலையடிகள் முதலிய அறிஞர் பெருமக்களின் தொடர்பு எனக்கு இலக்கியப் புலமையையும் சமய தத்துவ சாத்திர ஞானத்தையும் உண்டுபண்ணியது.

இந்த அறிவைக் கொண்டு நான் சுதேசமித்திரன், லோகோபகாரி, கலாநிலையம், தமிழ்நாடு, செந்தமிழ்ச் செல்வி, சித்தாந்தம் முதலிய பத்திரிகைகளுக்குச் சங்க இலக்கியக் கட்டுரைகளும், சைவ சித்தாந்தக் கட்டுரைகளுமே முதன்முதலாக எழுதலானேன். எமர்ஸன் முதலிய மேனாட்டு அறிஞர்களின் ஆங்கிலக் கட்டுரைகளையும் மொழி பெயர்க்கலானேன்.

இவ்விதம் பழைமையில் உழன்று கொண்டிருந்த என்னை இக்காலத்துக் கேற்பப் புதுமை இலக்கியங்களைச் செய்யத் தூண்டியவர்கள், பரிதிமாற்கலைஞர், மறைமலையடிகள், டி. என். சேஷாசலம் ஆகிய பேரறிஞர்களேயாவர். பரிதிமாற்கலைஞர் எழுதியுள்ள 'மதிவாணன்', 'கலாவதி' முதலிய நாவல்களும், மறைமலையடிகள் எழுதியுள்ள 'கோகிலாம்பாளின் கடிதங்கள்', 'குமுதவல்லி' அல்லது 'நாகநாட்டு அரசி' ஆகிய இரு நவீனங்களும் அவை போல் என்னை எழுதத் தூண்டின. பரிதிமாற்கலைஞரின் கம்பீரமான உயர்ந்த நடை என் இளம் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. அத்துடன் அச்சமயம் என் அன்பையும் மதிப்பையும் பெற்றிருந்த 'கலா நிலையம்' என்ற உயர்ந்த இலக்கிய வாரப் பத்திரிகையின் ஆசிரியர் என். சேஷாசலம் 'ஏமாங்கதத்து இளவரசன்' என்ற பெயரில் எழுதிய நாவல் பரிதிமாற் கலைஞர் நடையையே ஒத்திருந்தது எனக்குஅவர் நடையில்இன்னும் பெருமயக்கத்தை ஏற்படுத்தியது. ஆகவேதான் நான் 1927-ம் ஆண்டில் ஷேக்ஸ்பியர் இயற்றிய 'Rape of Lucrece' என்ற சிறு காவியத்தைத் தமிழ்ப்படுத்தியபோது, பரிதி மாற்கலைஞரின் கம்பீர நடையைப் பின்பற்றி எழுதினேன். ஆனால், அக்காலத்தில் இலக்கிய விமரிசகராயிருந்த எம். நாராயணன் எம். ஏ. 'புதுமை இலக்கியம் செய்வோர் இதுபோன்ற கடுமையான பண்டிதநடையில் எழுதுவது சரியல்ல' என்று சுதேசமித்திரன் வாரப் பத்திரிகை வாயிலாகத் தெரிவித்த கண்டனம் என் மயக்கத்தைத் தெளிவித்தது. எனினும், நான் நாவல் ஆசிரியனாவதற்கு மறைமலையடிகளும் பரிதிமாற்கலைஞரும் வழிகாட்டிகளாவர் என்பதை இங்கேகுறிப்பிடவேண்டும். 'நாவல் என்பது வெறுங் களிக்கதை. அதைப் படிப்பதால் அறிவு நலம் பெறாது; அகமனம் பண்படாது. ஆகவே அதை எழுதுவதும் படிப்பதும் வீண் பொழுதுபோக்காகும்' என்று திரு வி.க. போன்ற உலகியலறிவு நிரம்பப் பெற்ற அறிஞர்களும் கருதி வந்த அந்தக் காலத்தில், 'நாவல் நலம் பயப்பதொன்று. நாவல்கள் மூலம் பல அரிய கருத்துக்களை வெளியிடலாம். அவற்றின் வாயிலாக மக்களுக்கு நல்லறிவு உண்டாக்கலாம். பண்பாட்டை உண்டாக்கலாம்' என்று சொல்லாமல் சொல்லி நாவல்கள் எழுதியவர்கள் மறைமலையடிகளும் பரிதிமாற்கலைஞருமே. அவர்கள் காட்டிய வழியைப் பின்பற்றியே நான் சிறுகதைகள், நாவல்கள், நாடகங்களை எழுதலானேன். 'நாவலில் புற மனம் மட்டுமே ஈடுபடும். அகமனம் படியாது; பண்படாது' என்று திரு வி.க. சொல்லி

யிருப்பது, பொழுது போக்குக்கென எழுதுவோருடைய கதைப் புத்தகங்களைக் கருத்தில் கொண்டே என எண்ணுகிறேன். 'இலக்கியம் ஒரு பொழுது போக்கு' என்போரால்தான் நாவலைப் பற்றி இவ்விபரீதக் கருத்து எப்படியோ பரவியிருக்கிறது.

என் இருபத்தோராவது வயதில் மேற்கொண்ட பத்திரிகாசிரியர் தொழில் சிறுகதை, நாவல்கள் எழுதுவதற்கு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தது. தினசரிப் பத்திரிகைகளில் நான் பணியாற்றி வருகையில், செய்திகளை வெளியிடுவதுடன், எஞ்சியிருக்கும் காலி இடங்களில் மேனாட்டுப் பத்திரிகைகளிலுள்ள அரசியல் கட்டுரைகளையும் கதைகளையும் தமிழ்ப்படுத்தி வெளியிடும் பழக்கமிருந்தது. சில காலம் என் சக ஆசிரியர்களின் போக்கிலேயே போய்க் கொண்டிருந்த எனக்கு 'மேனாட்டு எழுத்தாளர்களைப் போல் நாமும் சுயமாகச் சிந்தித்துக் கதை, கட்டுரைகளை எழுதினால் என்ன?' என்ற எண்ணமுண்டாயிற்று. 'பத்திரிகையாளனாக இருப்பவன் கதை சொல்லவும் தெரிந்திருக்க வேண்டும். அப்போதுதான் அவன் பத்திரிகைத் துறையில் சிறந்து விளங்க முடியும்' என்று மேனாட்டுப் பத்திரிகையாசிரியர் ஒருவர் ஒரு சமயம் வெளியிட்ட கருத்தும் அவ்வெண்ணத்தை விரைவில் செயல்படுத்தும் அளவுக்கு முதிர்ச்சி கொள்ளச் செய்தது. எனவே, நாற்றிசைச் செய்திகளுக்கே முதலிடம் தரும் செய்திப் பத்திரிகைகளில் புதுமை இலக்கியங்களைப் படைத்துத் தமிழ் மக்களுக்கு வழங்குவதில் நான்உவகைகொண்டு முதன் முதலாக 1930-ம் ஆண்டில் 'யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?' என்ற பெயருடன் இளம் விதவை ஒருத்தி தன் அவல வாழ்வைத் தானே சொல்லுவதாக அமைத்து நாவல் ஒன்று எழுதினேன். அந்நாவல் அக்காலத்தில் மிகப் பிரபலமாயிருந்த 'திராவிடன்' என்ற தினசரிப் பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளி வந்தது. பின், தேசபந்து, லோகோபகாரி, தமிழரசு, கலாநிலையம் முதலிய பத்திரிகைகளில் சிறுகதைகளும், நாவல்களும் தொடர்ந்து எழுதி வந்தேன். 1933-ம் ஆண்டு பிற்பகுதியில் நான் ஆனந்த போதினி, பிரசண்டவிகடன் ஆகிய பத்திரிகைகளின் ஆசிரியப் பொறுப்பை ஏற்ற பின்னர், சிறுகதை, நாவல், நாடகங்கள் எழுதுவது தவிர்க்க முடியாத கடமையாகி விட்டது.

எப்படி யெப்படியோ தொடங்கிய என் வாழ்க்கை எழுதுவதையே தொழிலாகக் கொள்வதில், இலக்கியக் கலைஞனாவதில் முடிந்தது.

**சு**ற்றுச் சார்பும் சூழ்நிலையும்தான் மனிதனை உருவாக்குகின்றன என்ற உண்மையை ஒப்புக் கொள்ளுபவர்கள் இலக்கிய சிருஷ்டிகளும் சூழ்நிலையை ஒட்டியே உருவாகின்றன என்ற என்கொள்கையை நிச்சயம் ஒப்புக் கொள்ளுவார்கள். நான் எந்தச் சூழ்நிலையில் வளைய வருகிறேனோ அந்தச் சூழ்நிலையின் பிரதிபலிப்பாக அவ்வப்போது என் சிறுகதைகளும், நாவல்களும், நாடகங்களும் உருவாகி வெளிவரும். என்னைச் சூழ்ந்துள்ளவர்களுடைய பலதரப்பட்ட வாழ்க்கை நிலைகளுமே என் கதைகளுக்கும் கதாபாத்திரங்களுக்கும் முன் மாதிரியாக அமைந்து விடும். நம் சமுதாயத்தில் அவ்வப்போது எழும் பிரச்னைகளும் நம் நாட்டில் நிகழும் முக்கிய நிகழ்ச்சிகளும் என் கதைகளுக்குக் கருப்பொருள்களாகி விடும். இவ்வுலகைத் திரும்பிப் பாரேன்!, காதலனா? காதகனா?, உயிரோவியம் ஆகிய மூன்று நாவல்களும் மாணவ உலகப் போக்கையும், யான் ஏன்பெண்ணாய்ப்பிறந்தேன்?, தாசி ரமணி, வேலைக்காரி, மைத்துனி, நடுத் தெரு நாராயணன் ஆகிய ஐந்து நாவல்களும் இன்றைய சமுதாய நிலைகளையும், வேடதாரி, சீமான் சுயநலம், தியாகத்தழும்பு ஆகிய மூன்று நாவல்களும்அரசியல் பொது வாழ்வு நிலையையும் அப்படியே பிரதிபலித்திருப்பதைப் படித்துப் பார்ப்பவர்கள் என் இலக்கிய சிருஷ்டிகள் பெரிதும் காலத்தையும், சூழ்நிலையையும் அநுசரித்தே உருவாகியிருக்கின்றன என்பதை உணர்வார்கள்.



கோகிலா என்ற நாவல் மட்டும் கர்நாடக சங்கீதத்தின் சிறப்பையும், நாதோபாசனை செய்துவரும் சங்கீத வித்வான்களின் தன்னலமற்ற வாழ்க்கையையும் தெரிவிக்க எழுதப்பட்டதாகும்.

கலை இலக்கியங்கள் சிலர் கூறுவது போல் வெறும் பொழுது போக்குக்கு உரியன அல்ல; மக்கள் வாழ்க்கைக்கு நல் வழிகாட்ட உதவுபவை; வாழ்க்கையில் நம்பிக்கையையும் தெம்பையும் ஊட்டுபவை என்ற கொள்கையுடையவன்; ஆதலால்தான் நான் உலகியலையும் மக்கள் இயற்கையையும் கூர்ந்து நோக்கிச் சமுதாயத்தில் நிகழும் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு மேற்குறித்தவாறு நாவல்களையும் சிறுகதைகளையும் நாடகங்களையும் எழுதி அவர்கள் சிந்தனைகளைச் சீரிய வழியில் செலுத்திச் சிந்திக்க வைக்கிறேன்; அவர்கள் இதயங்களை நல்லொழுக்க நெறியில் நிறுத்திப் பண்படுத்த முயன்று வருகிறேன். என் இலக்கியப் படைப்பு மூலம் இன்றைய மனித வாழ்க்கையை மட்டும் செம்மைப்படுத்த முயலாமல் இன்றுள்ள வாழ்க்கை நிலையில் நின்று கொண்டே இதைவிடச் சிறந்ததொரு நல்வாழ்வைச் சித்திரித்துக் காட்ட முயற்சிசெய்து வருகிறேன். இப்படிச் சொல்லும்போது நான் என் கதைகள் வாயிலாக மக்களுக்கு இதோபதேசம் செய்து வருவதாக வாசக நேயர்கள் நினைக்கக் கூடாது. இதோபதேசம் செய்வது என் நோக்கமல்ல. அது இலக்கியப் படைப்பாளனின் வேலையும் அன்று; இலக்கியத்தின் இலட்சியமும் அல்ல என்று அறிய வேண்டும்.

இலக்கியகர்த்தா தான் சிருஷ்டிக்கும் கதைகளில் உண்மைக்கு முதலிடம் தர வேண்டும். உண்மை நிகழ்ச்சிகளைக் கூட அழகுபடுத்திச் சொல்ல வேண்டும். சத்தியமும் சௌந்தரியமும் கற்பனையில் இணைந்து வந்தால்தான் நாவலோ, சிறுகதையோ, நாடகமோ இலக்கியப் பண்பைப் பெறமுடியும்.

அதிருக்கட்டும். நான் நாவல்களை எப்படி எழுதி வருகிறேன்? நாவல்கள் என்னிடமிருந்து எப்படிப் பிறக்கின்றன? என்று அறிய வாசக நண்பர்கள் ஆவல் கொள்ளலாம். நான் பத்திரிகைகளுக்கோ பதிப்பாளர்களுக்கோ கொடுக்க நாவல்கள் எழுதத் திட்டம் போடுவேன். இத்திட்டம் சில சமயங்களில் சீக்கிரம் நிறைவேறி விடும். சில சமயம் நிறைவேறப் பல காலம் ஆகும். நாவலுக்குரிய கருப்பொருளும் கதைப் போக்கும் என் உள்ளத்தில் கருக் கொண்டு முழு உருவாவது சந்தர்ப்

பத்தையும் மன நிலையையும் பொறுத்தது. ஆரம்ப காலத்தில் என் உள்ளத்தில் உருவாகும் கதையை முதலில் சுருக்கமாக எழுதி வைத்துக்கொண்டு விரிவுபடுத்தி எழுதுவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன். ஆனால், பல நாவல்கள் விரிவாக எழுதிக் கொண்டு செல்கையில் அடிப்படை அமைப்பே அடியோடு மாறி விடும். கதையின் மூலமும் முடிவுமே முற்றும் மாற்றமடைந்து விடும். எனவே, இந்த அனுபவத்துக்குப்பின், ஒரு நாவலுக்குரிய கருப் பொருளைச் சிந்தனையில் வைத்து உருவாக்கிக் கொண்டால் எழுதும் போது கற்பனை ஓட்டம் எப்படி ஓடுகின்றதோ, அதன் போக்கில் விட்டு விடுவதை வழக்கமாகக் கொள்ளலானேன். இவ்விதம்நான் நாவலை எழுதுவதற்கு ஒருகுறிப்பிட்ட காலத்தையோ, ஒரு குறிப்பிட்ட இடத்தையோ எதிர்பார்த்துத் தேடிச் செல்லுவதில்லை. மனஎழுச்சி அல்லது தென்பு ஏற்பட வேண்டும் என்று எதிர்பார்த்துக் காத்திருப்பதில்லை. எழுத வேண்டிய அவசியமும் நிர்ப்பந்தமும் ஏற்படும்போது எழுதுவதற்கு எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் உட்கார்ந்து விடுவேன். தொடக்கத்தில்தான் சிந்தனையை ஒருமுகப்படுத்துவதற்குச் சிறிது சிரமமாயிருக்கும். ஆனால் சில நிமிடங்களுக்கெல்லாம் சூழ்நிலையை மறந்து கற்பனையில் மூழ்கிவிடுவேன். எண்ணத்தில், எழுத்தில் நான் ஐக்கியமாகி விடுவேன். எழுத வேண்டும் என்ற ஆவேசம் பிறந்து விட்டால், நான் என்னை மறந்து விடுவேன். எழுதும் தீவிரத்தில் நான் என்பது என்னை விட்டு நழுவி விடும். நான் பேனாவைக் கருவியாகக் கொண்டு எழுதுவது போல் என்னைக் கருவியாகக் கொண்டு ஏதோ ஒரு சக்தி இருந்து இயக்கி எழுதுவதாக -இலக்கியங்களை என் வாயிலாகச் சிருஷ்டி செய்வதாக- உணர்ச்சி உண்டாகும். இவ்விதம் இலக்கிய வேள்வி புரிந்து வருகையில் என் மூளை சோர்ந்து உள்ளமும் உடலும் அயர்ச்சியுற்றால்தான் எழுதுவது நிற்கும். அல்லது எழுதுகின்ற ஏகாக்ர நிலையை யாராயினும் வந்து கலைத்தால்தான் எழுதுவது தடைப்படும்.

சில சமயங்களில் பத்திரிகை அலுவலகத்தில் வைத்தே நாவல்களை எழுத நேரிடும். நான் எழுதும் அறைக்குப் பக்கத்தில் ஒரு பெரிய இரும்புப் பட்டறை




இருக்கிறது. இரும்பைக் காய்ச்சி உருக்கி வார்ப்படத்தில் ஊற்றும் போதும் சம்மட்டியால் அடிக்கும் போதும் ஏற்படும் ஆரவாரமும் அதிர்ச்சியும் இருக்கிறதே, அதைஎளிதில் வர்ணிக்கமுடியாது. இந்த இரும்புப்பட்டறை ஒலியுடன், பின்புறம் எங்கள் அச்சு இயந்திரங்கள் ஓடும் ஓசையும், பக்கத்தறையில் சிப்பந்திகளின் பேச்சு அரவமும், வீதியில் சிறு பிள்ளைகளின் விளையாட்டுச் சத்தமும் சேர்ந்து உண்டாகும் கலகலப்பான சூழ்நிலையில் அமர்ந்து நான் பாட்டுக்கு எழுதிக்கொண்டு போவேன். அச்சுக் கோக்கும் ஆட்கள் ஒருவர் பின் ஒருவராக வந்து ஒவ்வொரு தாளாக, இரண்டிரண்டு தாள்களாக எடுத்துக்கொண்டு போய் அச்சுக் கோப்பார்கள். இப்படிப்பட்ட சூழ்நிலையில் தான் நான் பல நாவல்களை உருவாக்கியிருக்கிறேன்.

நான் ஆரம்ப காலத்தில் எழுதுவதற்கு உகந்த பொழுதாகக் கொண்டது விடியற்காலையும் நள்ளிரவும்தான். சகல ஜீவராசிகளும் அயர்ந்து உறங்கும் இராப் பொழுதின் அமைதியான சூழ்நிலையில் கற்பனை ஊற்றுப் பெருக்கெடுத்தோடும். அருணோதயத்துக்கு முந்தைய பொழுதும் உள்ளத்தில் உவகையையும் உடம்பில் சுறுசுறுப்பையும் உண்டுபண்ணும். இவ்விரு பொழுதுகளையுமே இலக்கியப் படைப்புக்கு ஏற்ற காலமாக நான் கொண்டிருந்தேன்.

இன்னொன்று. நாவல் எழுதுகையில் கதையமைப்பை நன்கு அமைக்க முயலும் போதோ அல்லது கதாபாத்திரத்தின் குணசித்திரத்தை நன்கு சித்திரிக்க முயலும்போதோ சில சமயங்களில் மிகச் சிரமம் ஏற்படும். நினைத்ததை நினைத்தபடி சித்திரிக்கச் சரியான வார்த்தைகள் வாய்ப்பாகக் கிடைக்காமல் அல்லது உள்ளத்தில் எண்ணி உருவாக்கியுள்ளபடி எழுத்தில் எழுத முடியாமல் போகையில் ஏற்படும் வேதனை இருக்கிறதே; அந்த அவஸ்தைக்கு, குழந்தை பிறப்பதற்குமுன் ஒரு பெண் படும் பிரசவவேதனையைத் தவிர வேறொன்றையும் ஒப்பிட்டுச் சொல்ல முடியாது.

நான் ஒரு நாவலை எழுதத் தொடங்குவதற்குமுன், அது பற்றிப் பலகாலும் சிந்திப்பேன். வாய்விட்டுச் சொல்லிப் பார்த்துக் கொள்ளுவேன். என் மன அரங்கத்தில் கதாபாத்திரங்கள் தோன்றி நாடகமாடுவார்கள். அவர்கள் என்

ளோடு பேசுவார்கள். நான் அவர்களோடு உரையாடுவேன். இவ்வளவும் நான் தனிமையாயிருக்கையிலும், தனியாக நடந்து செல்லுகையிலும் என்னுள் நிகழும்.

*  *  *

இவ்விதம் நான் இலக்கிய வேள்வி செய்து படைத்துள்ள நாவல்களில் நல்ல நாவல் எது என்று கேட்பது தெரிகிறது. இதை எப்படிச் சொல்லுவது? எழுத்தாளன் ஒருவன் எழுதும் எழுத்தெல்லாவற்றையும் பொன் எழுத்துக்கள் என்றுதான் கருதுவான். ஆனாலும் நான் என் சிருஷ்டிகளைச் சுய விமரிசனம் செய்து பார்த்துக் கொள்ளுவது வழக்கம். நடுநிலையான விமர்சகர்களின் நேர்மையான மதிப்புரைகளில் அதிக 'மார்க்'குகளைப் பெற்றிருப்பவை உயிரோவியம், நடுத் தெரு நாராயணன், சீமான் சுயநலம் ஆகிய மூன்று நாவல்களாகும். என் மனத்துக்கு இவை ஓரளவு பிடித்தவைதாம். இம்மூன்று நாவல்களும் ஒவ்வொரு வகையில் சிறப்பாக அமைந்திருப்பதாக இலக்கிய விமரிசகர்கள் தெரிவித்திருக்கிறார்கள். நானும் அவ்விதந்தான் அபிப்பிராயப்பட்டிருக்கிறேன்.

'உயிரோவியம்' நாவல் பிறந்தபோது சகோதர எழுத்தாளர்கள் பலரிடையிலும் வாசக நேயர்களிடையிலும் ஏற்பட்ட கருத்துப் பரிமாற்றம் இலக்கிய உலகம் நன்கறிந்தது. இந்நாவலில் கதையம்சம் அதிக மில்லாதிருந்தும் ஆன்மநேய ஒருமைப்பாட்டை லட்சியமாகக்கொண்டிருந்த அதன் கருப்பொருளும் கட்டுக்கோப்பும் பலரால் வரவேற்கப்பட்டது. கதையின் நூதன முடிவு வியந்து பாராட்டப்பட்டது. நீண்டகாலம் அதுபற்றி வாதப்பிரதிவாதங்கள் நிகழலாயின. அது மட்டுமல்ல; இந்நாவலின் போக்கைப் பின்பற்றிப் பிரபல எழுத்தாளர்கள் சிலர் சில நாவல்களை எழுதலாயினர்.

'நடுத்தெரு நாராயணன்' நாவல் நம் சென்னை நகரத்தில் வாழும் பல்லாயிரக்கணக்கான நடைபாதைவாசிகளை மனத்தில் கொண்டு எழுதப்பட்டது. ஆனாலும் நடைபாதைவாசிகளின் பரிதாபத்துக்குரிய வாழ்க்கையை என்னால் மிகச் சிறிய அளவில்தான் காட்ட முடிந்தது. லட்சுவான்தாரரான பண்ணையார் குடும்பத்தினரும், வியாபார சமூகமான செட்டியார் குடும்பத்தினரும், வழக்கறிஞராயிருந்த பிராம்மணக் குடும்பத்தினரும் இந்நாவலில் பெரிதும் இடம் பெற்று விட்டனர். அத்துடன் இதில் இரு தலைமுறையினரின் கதை இனிமையாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. சாதி, சமயவேற்றுமைகளாலும், பொருளாதார ஏற்றத் தாழ்வாலும் நம் சமுதாயம் எப்படியெல்லாம் சீர்குலைந்துவருகிறது; மக்கள் தங்கள் விருப்பப்படி நல்வாழ்வு வாழாமல் அல்லலுற்று வருகின்றனர் என்ற உண்மையை இந்த நாவலின் வாயிலாக நான் எடுத்துச் சொல்லியிருக்கிறேன்.

1942-ம் ஆண்டில் நம் பாரத தேசத்தில் நடந்த ஆகஸ்டுப்புரட்சி என் கற்பனை உள்ளத்தில் எதிரொலித்ததன் பயனாக உருவானது 'சீமான் சுயநலம்.' அண்ணல் காந்தியடிகள், 'வெள்ளையனே வெளியேறு!' என்று முழக்கிய வீர முழக்கம் நம் நாட்டிலிருந்து அன்னிய ஆட்சியை வெகு விரைவில் ஒழித்துவிடும் என்ற நம்பிக்கையை என் உள்ளத்தில் விதைத்தது. ஆகவே, நான் 1943-ம் ஆண்டில் 'சீமான் சுயநலம்' என்ற அரசியல் நாவல் ஒன்றை எழுதி நமக்குச் சுதந்திரம் கிடைத்து விட்டது என்று துணிந்து கூறினேன். இவ்விதம் கற்பனையில் கண்ட கனவு 1947-ம் ஆண்டில் நனவாகி விட்டது. இந்நாவலில் கதாநாயகனைச் சிருஷ்டித்து உலவ விட்டுள்ள ஜம்புநாதர் என்ற கதாபாத்திரம், சுதந்திரப் போராட்ட இயக்கங்களிலும் பட்டம் பதவிகளில் நாட்டமுடைய போலி தேச பக்தர்களும் சுயநல அரசியல்வாதிகளும் கலந்து கொண்டு செய்யும் தகிடுதத்தங்களை நினைவுபடுத்தும்.

நாவல் ஆசிரியன் ஒருவனுக்குப் பல நாவல்கள் எழுதி விட்டதனாலேயே பெருமை வந்து விடாது. அவன் ஒரு நாவல் எழுதியிருந்தாலும், அது சிறந்ததாக அமைந்து விட்டால், நல்ல நாவல் என்று வாசக நேயர்களாலும் இலக்கிய விமரிசகர்களாலும் கருதப் பட்டால் அதுவே அவனுக்குப் பெருமையாகும். என்னுடைய முப்பத்தைந்து வருஷ இலக்கிய வாழ்வில் சிறுகதை, கட்டுரை, கவிதை, நாடகங்களுடன் நாவல்கள் பல எழுதி வந்திருக்கிறேன். மேலும் எழுதிக் கொண்டேயிருப்பேன். இவ்விதம் நான் எழுதி வருபவைகளில் 'எது சிறந்த சிருஷ்டி? எது நல்ல நாவல்?' என்று வாசக நேயர்கள் சொல்லட்டும். இலக்கிய விமரிசகர்கள் எடை போட்டுக் கூறட்டும். எல்லாவற்றுக்கும் மேலாக, காலம் தீர்ப்பளிக்கட்டும். நல்ல நாவல் என்றால்தான் எல்லா நிலைகளையும் கடந்து நிலைத்து நின்று தானே சொல்லாமல் சொல்லுமே!

# கால்கேட்டின் மூலம்

# நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாறிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்தன்னை! இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் விசேஷமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் அதன் நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

DCG 1207-TAM.

# திருமூலர் தவ மொழி

ராஜாஜி - சோமு

23

சித்தர்கள் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவர்கள்? அவர்கள் சைவரா, வைஷ்ணவரா? த்வைதிகளா, அத்வைதிகளா, விசிஷ்டாத்வைதிகளா, சைவ சித்தாந்திகளா? — என்றெல்லாம் சிலர் கேட்பார்கள். இந்தச் சந்தேகங்களுக்குத் தாயுமானவர் ஒரு தெளிவான விளக்கம் தந்து முடித்து விட்டார்.

திருமூலருடைய மரபிலே வந்த மௌன குரு என்ற சித்தரின் சீடரே தாயுமானவர். தமது குருவைப் பற்றி, "மூலன் மரபில் வரு மௌன குருவே" என்றே பாடுகிறார். அந்தத் தாயுமானவர் செய்துள்ள இனிமையான துதிப்பாடல்களிலே ஒரு பகுதி "சித்தர் கணம்" என்பது. இந்தப் பாடல்களில் தாயுமானவர் சித்தர்களை நமஸ்கரிக்கிறார்.

**வேதாந்த சித்தாந்த**
**சமரச நன்னிலைபெற்ற**
**வித்தகச் சித்தர் கணமே!**

என்று, சமய பேதங்களை அகற்றிய முற்றறிவுடன் துதிக்கிறார். இந்தச் சமரசமே மெய்ஞ்ஞானம் என்பதைக் காட்டுகிற தொடர்மொழியே "சமரச நன்னிலை" என்பது.

வேதாந்தம் சித்தாந்தம் என்று பெயர்கள் சூட்டிப் பிரிந்து நின்ற சமய வாதிகளுக்கு ஒற்றுமையைக் காட்டி ஜீவன் முக்தி பெற்ற முனிவர்களே சித்தர்கள் என்கிறார் தாயுமானவர். நம்முடைய திருமூலர் இந்தச் சித்தர்களிலெல்லாம் தலைசிறந்த சித்தராகப் போற்றி வணங்கப்படுகிறார். இவருடைய திருமந்திரப் பாடல்களில் இந்த வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலையையே காண்கிறோம்.

புராணக் கதைகளை எடுத்துக் கொண்டு அவற்றின் உட்கருத்தை விளக்குகிற பல இடங்கள் திருமந்திரத்தில் உள்ளன. சமயங்களின் எல்லைக் கோடுகளைத் தாண்டி நின்று பேசுகிற பூரண ஞானியின் பேச்சாகவே இருக்கும், இந்த விளக்கங்கள் எல்லாம்! அப்படிப்பட்ட ஒரு விளக்கம் திரிபுரம் எரித்த வரலாறு பற்றியது.

மூன்று அசுரர்கள் தங்களுடைய வரத்தின் பலத்தால் மூன்று நகரங்களை நிர்மாணித்து, அங்கிருந்து கொண்டு தேவர்களைத் துன்புறுத்தினார்கள். சிவபெருமான் இந்த மூன்று நகரங்களையும் அழித்து, மூன்று அசுரர்களையும் வதம் செய்து, தேவர்களைக் காப்பாற்றி அருளினான் என்பது புராணம்.

திருமூலர் பாடுகிறார்:

**அப்பணி செஞ்சடை**
**ஆதி புராதனன்**
**முப்புரம் செற்றனன்**
**என்பர்கள் மூடர்கள்**

[அப்பணி—அப்பு அணி: அப்பு அணிந்த, அதாவது கங்கையைச் சூடிய. செஞ்சடை—சிவந்த சடையை உடைய. ஆதி புராதனன்—எல்லாவற்றிற்கும் பழைமையான முதற் காரணமாகிய

இறைவன். மூப்புரம் செற்றனன்— திரிபுரங்களை[அழித்தனன்.]

மூப்புரம் ஆவது
மும்மல காரியம்

மூப்புரம் என்பது உயிரைப் பிணித்துள்ள ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூவகை மலங்கள்.

அப்புரம் எய்தமை
யார்அறி வாரே

[அப்புரம்—அத்தகைய புரத்தை. எய்தமை—அழித்ததை.]

அந்த மும்மலச் செயலை இறைவன் அம்பு எய்து அழிப்பதை யாரும் உணர்கிறதில்லை! யார் அறிவாரே— யாரே அறிவார்கள். அதாவது யாரும் உணர்வதில்லை.

ஏதோ மூன்று நகரங்களில் மூன்று அசுரர்கள் இருந்து கேடு விளைத்தார்கள் என்றும், அவர்களைச் சிவ பெருமான் மேருவையே வில்லாக வளைத்து அழித்தான் என்றும் கதை சொல்லுகிறார்கள். ஆனால் மூப்புரம் என்பது நம்முடைய உயிரைப் பிணித்துக் கேடு விளைக்கிற மூன்று அழுக்குகள். இந்த மூன்று அழுக்குகளையும், பக்தி செலுத்துகிற அன்பர்களுக்காக இரங்கி வந்து இறைவன் அழித்து ஆட்கொள்ளுகிறான். இதை மக்கள் அறியவில்லை என்று குற்றம் சாட்டுவது போல் உபதேசிக்கிறார்.

அப்பணி செஞ்சடை
ஆதி புராதனன்
மூப்புரம் செற்றனன்
என்பர்கள் மூடர்கள்;
மூப்புர மாவது
மும்மல காரியம்
அப்புரம் எய்தமை
யாரறி வாரே!

இறைவனுடைய திருவருளை நாடினால் அந்தத் திருவருளினால் மூன்று மலங்களும் நீங்கிப் பேரின்பத்தை அடைவோர். ஆணவம், கன்மம், மாயை, என்ற இந்த மூன்று கோட்டைகளையும் தகர்த்தெறிந்து, ஆன்மா விடுதலை பெற்று இறை இன்பத்தை நுகர வேண்டும். இறைவனே கருணையோடு வந்து அருள் தந்தால் தான் இது சாத்தியமாகும். அப்படிப் பட்ட திருவருள் எளிதில்கிடைக்குமா?

# அறிமுகப்படுத்துகிறோம்...

## பாமாலிவ்
## லவண்டர் டால்க்




PTG.5 T.




டி.எஸ். பாலையா :—பழைமையில் ஊறிப் போன பதஞ்சலி சாஸ்திரி. சாதி வேற்றுமை யினால் பெற்ற மகளையே கொடுமைப்படுத்த நேர்ந்து கடைசியில் உண்மையை உணர்ந்து உருகுகிறார்.

எம். வி. ராஜம்மா :—விதியின் கொடுமை யினால் (பதியின் கொடுமையினாலுந்தான்) பெற்ற மகனை அநாதையாக விட்டு ஓர் அநாதைக் குழந்தைக்குப் பாலூட்டி வளர்க்க நேர்ந்து பாசத்துக்கும் கடமைக்குமிடையே தவிக்கும் பார்வதி.

ஜி. முத்துகிருஷ்ணன் :—பிறந்தபோதே தாயை இழந்தும், தாயன்பைப் பெறும் பாக்கியம் பெற்ற அநாதை சங்கர்.

கல்யாண் குமார் :—தாயிருந்தும் படத்தின் தாயில்லாப் பிள்ளை. ரிக்ஷா இழுத்து, கருணையைக் காதலித்துக் கடைசியில் தாயை யும் தந்தையையும் அறிந்து கொண்டு ஆனந்தமடையும் சோமு.

மனோகர் :—சீர்திருத்தக் கொள்கைகளில் ஆர்வம் கொண்ட டாக்டர் பாரதி. பதஞ்சலி சாஸ்திரியின் மைத்துனர். அடிபட்டு உணர் விழந்துபோன சோமுவுக்கு உயிர் கொடுத்துப் படத்துக்கும் உயிர் கொடுக்கிறார்.

பல்லாண்டுகளுக்கு முன்பு வெளியான ''தாயுள்ள''த்தில் நடித்துப் புகழ் பெற்ற ராஜம்மாவுக்கு மீண்டும் அதே மாதிரி பாகத்தை ஏற்று நடிப்பதில் சிரமம் இருக் குமா? பாத்திரத்தை உணர்ந்து உருகி நடிப்பதோடு படம் பார்ப்பவர்களையும் உருக வைக்க முடிகிறது அவரால். அவருடைய நடிப்பினால்தான் படமே ஓடுகிறது.

டி. எஸ். பாலையா நன்றாகவே நடிக்கிறார். ஆனால் அவரது நடை, உடை, பாவனைகள் சற்று இயல்புக்கும் மீறி வெறும் நடிப்பாகவே போய்விடுகின்றனவே!

தாயன்பை வெளிப்படுத்தச் சாதிக் கொடு மையின் துணையை நாடிக் கதையைப் பாழாக்கி யிருக்கின்றனர். குடியின் கேட்டை விளக்கும் நாடகம் என்று போட்டுவிட்டு, நாடகம் முழுவதும் கதாநாயகன் குடித்து விட்டுக் கும்மாளமடிப்பதைப் பார்த்திருக் கிறோம். அதேமாதிரி சாதிக் கொடுமையை எதிர்ப்பதாகக் கூறிக்கொண்டு ஒரு குறிப் பிட்ட இனத்தை மட்டும் சற்று அதிகமாகவே இழித்துக் காட்ட முயன்றிருப்பது தவிர்க்கப் பட்டிருக்கலாம். ''எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் ஓர் குலம்'' என்ற கொள்கை வளம் பெற்று வரும் இந்நாளில் (ஆறிப் போன புண்ணைக் கீறி விடுகிறமாதிரி) மிகைப்படுத்திக் காட்டியிருக்க வேண்டாம்.

கல்யாண் குமார் புது முகமானாலும் நன்றாகவே நடித்திருக்கிறார். ஒளிப்பதிவின் நுணுக்கங்களை அறிந்து அதற்கேற்ப முக பாவங்களைக் காட்டும் திறமையைப் பெற நல்ல அநுபவம் வேண்டுமே!

எஸ். ராமராவ் சக்கைப்போடு போட்டு விட்டார். அவருடன் டி. பி. முத்துலட்சுமி யும் அமர்க்களப்படுத்துகிறார்.

சங்கர் ஆரம்பத்தில் மந்தமாயிருந்து விடு கிறான்; அவனுக்குத் தான் ஏழைப் பொன்ன னின் மகன் என்ற உண்மை தெரியவந்த பிறகுதான் அந்தப் பாத்திரத்தை ஏற்ற முத்துகிருஷ்ணனின் நடிப்பில் உயிரும் உணர்ச்சியும் உண்டாகின்றன.

''சீராரும் பைங்கிளியே'' என்ற பாட்டும், ''சின்னச் சின்ன ஊரணியாம்'' என்ற பாட்டும் நன்றாயிருக்கின்றன.

கருணையாக வரும் எல். விஜயலட்சுமி ஆடிப்பாடி, ஓடி, காதலனிடம் அடியும் வாங் கிக் கொள்கிறார். அடி வாங்கிய பிறகு அவர் நடிப்பு நன்றாக இருக்கிறது!

பிரசாத் மூவீஸ் தயாரிப்பான ''தாயில் லாப் பிள்ளை'' உண்மையிலேயே தாயில்லாப் பிள்ளையின் நிலையை அடைந்து விடாதிருக்க உணர்ச்சி நிறைந்த கட்டங்களும், நல்ல நடிப்பும் உதவி புரிகின்றன. —காந்தன்

# வாழும் வர்ணனைகள்

2. பாரதிதாசன்

செங்கதிர் பொழிந்த ஒளி வெள்ளத்தில் தங்கக் கப்பல் வானம்! எங்கும் பரந்த வானத்து அழகில் எனையே மறந்தேன் நானும். திசை காணாத வானும் உலகும் யாவும் ஒன்றே என்னும் இசை தான் கண்டேன் அறிவால்! அந்த அறிவே முடிந்த பொருளாம்.

## நெய்தல் நிலத்து நிலவு

கடற்கரை சார்ந்த பட்டினம் நிலவின் ஒளியால் திகழ்கின்றது. சங்கு வளையல்களும், முத்துத் தொங்கலும், பலகறை யணியும் அணிந்த பட்டினத்து மங்கைமார் கும்மியடித்தும், முழுநிலா வாழ்த்தியும், ஓடியும் பாடியும் விளையாடுகிறார்கள். காவிரி கடலில் கலக்கும் இடத்தில் கட்டுமரத்தை மிதக்க விட்டும், அதன் ஓட்டத்தை அளந்தும் ஆடவர்—மகளிர் கடல் நடுச்சென்று களிப்புறுகின்றனர். கடலில் எழுந்த முழு நிலவில் ஆங்கே கட்டு மரத்தில் விளரியாழ் கூட்டிப் பாடி இருக்கும் நெய்தலி, தன் தோழியர் இடையே மற்றொரு முழுமதி என விளங்குகின்றாள்.

விரிந்த வானும் கடலின் பரப்பும் மெருகேறிய வெள்ளி எனக் காட்சி தர, நெய்தலியின் கட்டவிழ்ந்த கூந்தல், அகிலின் மென்புகை போலக் காற்றில் மிதந்தது. இடது தோள்மேல் கிடந்த வெண்துகிலின் முன்தானை ஒருபுறம் கடகடவென உதறிற்று. அவள் கனியுதடு சாறு உதிர்ந்ததோ எனும்படி அவள் பாடும் பாட்டு அடுத்திருந்த தோழிமார்களுக்கு இனிமை செய்தது. அப்பாடலைத்தொடர்ந்த விளரியாழின் இசையால் குளிர்ந்தது முழு நிலா.

## ஓவியம் நடக்கக் கண்டோம்

"ஏறிட்டுப்பார்க்கும் போதெல்லாம் அவள் இரு விழிகள் இதழ் விரிந்த செந்தாமரைகள்! எதிர்நோக்கிச் சாயும் அவள் பார்வை, காதல் முழங்கிக் காண் போர் உளத்தில் மின்னிப் பொழியும் அமுத மழை! நெற்றிக்கு மேல் அமைந்த கருங்குழல், நிலவுக்கு மேலமைந்த கருமுகில், புன்சிரிப்பில் முத்துப் பிறக்கும். மாணிக்கம்சிந்தும்; வாய்விட்டுச் சிரிக்கையில் இளைஞர் வையம் அதிர்கிறது. பொன்னே, தன்வன்மை இழந்து, மென்மை அடைந்து மெருகுடன் அமைந்ததோ என்னும் கன்னம். சின்ன இடை கொடிபோல் அசையப் பொன்னுடையும், பன்மணி நகைகளும் கமந்து சிலம்பு பண்பாட அவள் நடக்கையில் வல்லவன் ஆக்கிய ஓவியமே நடக்கக் கண்டோம். அவள் இருக்கையில் அழகின் அரசு கொலுவிருக்கக் கண்டோம். முறுக்காணியைச் சரிப்படுத்தியபின் இசைவல்லான் மிழற்றிய யாழ் தருவதை அவள் பேச்சுக்கள் தரும். அவள் தலை, விழி, கால், கைகளில் இயற்கையாகத் தோன்றும் ஒவ்வோர் அசைவும், ஆடல் நூலின் மெய்ப்பாட்டிலக்கணத்தையே பயனற்றதாக்கி விடுகிறது. அவள் எதிர் நிற்க அஞ்சினோம். இருக்க அஞ்சினோம். பேச அஞ்சினோம். பாடென்றாள், ஆடென்றாள், அஞ்சினோம். காரணம், அவள் ஆயிழை அல்லள். அழகின் ஒளி என்று நாங்கள் நினைத்ததுதான்."

## ஆடல் அரங்கு

"எட்டுக்கால் நட்டு மேலே பட்டு விரித்துக் கட்டிய ஆடல் அரங்கு அழகு செய்கின்றது. மேடையிட்டனர் — அதன் மேற் சரிகை ஆடையிட்டனர். தரை மட்டும் தொங்கும் திரையிட்டனர்.



ஓசையில்லை. மக்கள் காதில் செந் தமிழ் புகத் தொடங்கிற்று. வியக்க வியக்க மெல்லென ஆடி வந்தான் ஒருவன். பல்லிசையும் எல்லையில்லா இன்பத்தை ஈந்தன. பாட்

டொன்று, பின் கேட்கலாயினர். அப்பாடலின் பொருளை ஆடுவோனின் கை, கண், நிலை, இதழ், இவற்றினால் விளக்கியதானது வயிரத்தின் எதிரில் விளக்கிட்டது போலிருந்தது.

### சேர தாண்டவம்

**கூ**ட்டுக் குயிலும் கடல் முழக்கமும் ஒத்து இசைத்தாற்போல் கூட்டிசை தொடங்குகிறது. சேரன் ஆட்டனத்தி ஆடி வருகிறான். பின்னிசையும், வரலாறு குறித்துப் பாடும் இன்னிசைத் தமிழும் ஒன்றுபட்டுக் கேட்போர் காதில் இன்பத்தைப் பொழிகின்றன. ஆடுவோனின் ஆடுங் காலடி இயக்கம், முழவு முழக்குவோனின் விரல் இயக்கத்துக்குச் சரிநிகர். அவன் கண்ணும், கருத்தும், வரலாற்றின் கருத்தை எண்பித்துக் கலையின்பத்தை வார்த்தன. ஆடல், பாடல், அழகு என்னும் அம்மூன்றினின்று கடலின்மேல் இளஞாயிறு போல் வரலாறு தோன்றுகிறது. பார்ப்போர் பாழுலகை மறந்தனர், இன்ப உலகில் வாழ்வாராயினர்.

### இன்பமும் துன்பமும்

**வெ**யிலில் தங்கம் போர்த்ததுபோல் ஒரு மலை தோற்றமளிக்கிறது. அதன் சரிவில் ஒரு பெருமாள் கோவில் தோன்றுகிறது. கோயில் சூழ ஆயிரக் கணக்கான மக்களின் நடமாட்டம். அங்குள்ள ஒரு தோப்பில் ஒரு புறமாக உட்காருகிறான் மண்ணுணங்கட்டி.

தோப்பில் பல புறங்களிலும், வியர்வை ஒழுகும் மேனியும், கண் குழிவுபட்ட முகமுமாகப் பலர் காணப்படுகிறார்கள். சிலர் உட்கார்ந்திருக்கிறார்கள் சோர்ந்து! சிலர் படுத்துப் புரள்கிறார்கள், வயிற்றைப் பிசைந்தபடி! அவர்கள் முகங்கள் ஒவ்வொன்றும் பசித் துன்பத்தால் கருகி யிருக்கின்றது.

ஒரு மூலையில் வேறொரு காட்சியை மண்ணுணங்கட்டி காணுகிறான். புன்னை மரத்தின் நன்னிழலில் பொன்னிழை கலந்து நெய்த துகில் விரித்து அதன்மேல் மணியிழை மின்னும் ஒருத்தியும், தங்கத் துகில் சரிந்து வீழ வெயில் வீசும் மார்பணி துலங்க, அருகமர்ந்த ஒருவனும் மகிழ்ந்திருக்கின்றனர். பாலில் துவைத்த ஒப்பிட்டை அவன் வாயில் அவள் அப்பிக்கொண்டிருக்கிறாள். அவர்கள் எறிந்த நெய்யொழுகும் பண்ணியமும் அப்பமும், எதிரில் நாய்கள் தின்று தெவிட்டுதல் அடைகின்றன. மிகுபலர் துன்பமுறுகின்றனர். மிகச் சிலர் இன்பமுறுகின்றனர்.




## தாராளச் செலவாளி

### அத்தியாயம் பதின்மூன்று

மாடி வீடாக இருந்தாலும் சரி, கூரைக் குடிசையாக இருந்தாலும் சரி, அங்கு குடித்தனம் நடத்தத் தெரிந்த ஒரு குடும்பத் தலைவி இருந்து விட்டால் அதன் களையே தனிச் சிறப்புடையது தான். கூரை வீட்டில் குதூகலச் சிரிப்பு பொங்கி வழிவதுண்டு; அது மாடி வீடாக உயர்வதும் உண்டு; அங்கே மனைமாட்சி தெரிந்த மங்கலப் பெண் வேண்டும்.

பெரியபாளையத்தின் மாடி வீட்டில் முருகையனின் தாயார் மீனாட்சி இருந்த வரையில் அது சீரும் செட்டுமாகத்தான் வளர்ந்தது. கடுமையான உழைப்பு, கடுஞ்சொல் பேசாத குணம், எப்போதும் சிரித்த முகம். இவற்றோடு வீட்டுக்குள் ஒளி சிந்தி உலவி வந்தாள் அந்த அம்மாள். சிவப்பிரகாசம் அவளுக்குக் கணவன் மட்டும் அல்ல; அவளுடைய பெரிய குழந்தையே அவர் தான். முருகையன் சிறிய குழந்தை.

மீனாட்சியின் காலத்திலும் வீட்டில் விருந்துகள், கேளிக்கைகள் தாராளச் செலவுகள் இருக்கத்தான் செய்தன.. ஆனால் ஒவ்வொன்றுக்கும் ஒரு வரம்பு வைத்து, கணக்கு வைத்து, வரவுக்கு மீறாத செலவாகப் பார்த்துக் கொண்டாள் அவள். திடீரென்று கிராமத்தில் பரவிய வைசூரி அந்த அம்மாளைக் கொண்டு போன பிறகுதான், தம்மையும் சேர்த்து அந்த வீட்டில் இரண்டு தாயில்லாக் குழந்தைகள் இருப்பதைக் கண்டார் சிவப்பிரகாசம்.

வீட்டிலிருந்த பாட்டியோ பழைய காலத்துப் பாட்டி. மீனாட்சிக்குப் பெரிய தாயார் முறை. அந்த அம்மாளுக்குச் சொன்னதைச் செய்யத் தெரியுமே தவிர, தன்னால் ஒன்றும் தெரியாது. பெண் பிள்ளை இல்லாத குடும்பம் என்று நிச்சயமான பிறகு அதன் தலைவர் ஒரு பரந்த மனம் படைத்த பாமரக் குழந்தை என்று கண்ட பிறகு அங்கே யார் யாரோ வந்தார்கள்; போனார்கள். உண்டான போது உறவு முறை கொண்டாடி வருபவர்களுக்குத்தான் பஞ்சமில்லையே !

சிவப்பிரகாசத்துக்குப் பணப் பஞ்சமும் ஏற்படவில்லை. குமரவேல் அவருக்குக் கேட்ட போதெல்லாம் கொடுத்தார். இப்படி ஒருவர் தமக்குக் கிடைத்தது தம்முடைய பாக்கியமென்று நம்பினார் சிவப்பிரகாசம்.

பட்டணத்துத் தங்கச்சி வந்த பிறகு இரண்டாயிரம் ரூபாய் குமரவேலிடமிருந்து சிவப்பிரகாசத்துக்குக் கைமாறியது. இதன் முன்பு எத்தனை ஆயிரம் ரூபாய்களோ! கணக்கு வைத்துக் கொள்கிற பழக்கம் வாங்கியவருக்குக் கிடையாது; நல்ல கணக்கு எழுதுகிற பழக்கம் கொடுத்தவருக்குக் கிடையாது. குமரவேலின் கணக்கு நோட்டு ரகசியங்கள் அவரைப் படைத்த ஆண்டவனின் அறிவுக்கே புலப்பட முடியாதவை.

தோட்டத்தி லிருந்து முருகையனும் சித்திராவும் ஜோடிப் புருக்களைப்போல் பறந்தோடி வந்த காட்சியைக் கண்டு மெய் மறந்து உளம் பூரித்தார் சிவப்பிரகாசம். கண்ணுக்கு விருந்தான காட்சி; மனத்துக்குத் தேன் போன்ற மகிழ்ச்சி. 'இவர்களுக்கொரு கல்யாணத்தை இன்றைக்கே செய்து வைத்துப் பார்க்க முடியாதா ?' என்று ஏங்கினார்.

அன்றைக்கே அவரால் கல்யாணத்தை நடத்த முடியவில்லைதான். என்றாலும் விருந்து கல்யாண விருந்தைத் தோற்கடிக்கக் கூடியதாக இருந்தது. அவருடைய மகிழ்ச்சியில் அவர் முருகையனை ஒரு வார்த்தை கூடப் பேச விடவில்லை. அவன் 'விடுமுறை பெற்றுக் கொண்டு வந்திருக்கும்' பெருமையையும், பட்டணத்துத் தங்கச்சி வீட்டாரிடம் அவன் கொண்டிருக்கும் பாசத்தையும் உற்சாகத்தோடு மற்றவர்களிடம் வர்ணித்தார்.

தகப்பனருக்கு ஆனந்தம் பொங்கப் பொங்க மகனுக்குத் துக்கம் பொங்கியது. 'என்னைக் கல்லூரியிலிருந்து விலக்கி விட்டார்களப்பா! இனி நான் அங்கே திரும்ப முடியாது!' என்று அவரிடம் சொல்ல முயன்றான். முடியவில்லை. பிறகு விருந்தினர்கள் சென்னைக்குச் சென்றவுடன் சொல்லிக் கொள்ளலாம் என்று பேசாதிருந்து விட்டான்.

அன்றைக்குப் பொழுது ஆனந்தத்தின் எல்லையில் கழிந்தது. மாலையில் சித்திரா முருகையனை வற்புறுத்தித் தன்னைத் தோட்டத்துக்கு அழைத்துக் கொண்டு போகச் சொன்னாள். அவளுக்காக அவன் திரும்பவும் கிணற்றுக்குள் குதித்தான். திரும்பவும் மரம் ஏறினான். கனிகள் கொய்தான்; பூப்பறித்தான். 'ஆட்டுவித்தால் யார் ஒருவர் ஆடாதாரே!' என்பது போல் அவள் அவனை எப்படி ஆட்டி வைத்தாளோ அப்படியெல்லாம் அவன் ஆடினான்.




என்ன செய்வது ? எவ்வளவு படித்தாலும் அவன் சிறு பிள்ளை. அவளோ சிறு பிள்ளையிலும் சிறு பிள்ளையாக இருந்தாள். அவள் சிரிக்கும் சிரிப்புக்காக அவன் பம்பரமாய்ச் சுழல வேண்டியிருந்தது. பெண்களின் கண்ணீருக்குத்தான் வலிமை என்று சொல்லுவார்கள். ஆனால் கண்ணீர்கூடச் சிலருக்கு எரிச்சலைத் தருவதுண்டு. சிரிப்புக்குத்தான் கண்ணீரை விட வலிமை அதிகம்.

மறு நாள் மத்தியானச் சாப்பாடு முடிந்தவுடன் குமரவேலையும் அழைத்துக் கொண்டு எல்லோரும் காரில் கரூருக்குக் கிளம்பினார்கள். சிவப்பிரகாசமும் குமரவேலும் காரோட்டும் தாத்தாவுக்குப் பக்கத்தில் அமர்ந்து கொள்ளவே, முருகையன் காரின் பின் னிருக்கையில் உட்காரத் தயங்கினான். அங்கே சித்திராவின் தாயாரும் சித்திராவும் ஏற்கெனவே இருந்தார்கள்.

முருகையனின் தயக்கத்தைக் கண்ட தாத்தாவுக்கு உற்சாகம் பிறந்துவிட்டது. ''வெட்கப்படாதே தம்பி! இப்போதே நீ இப்படித் தயங்கினால் நாளைக்கு நீ எப்படிக் கல்யாண ஊர்வலத்தில் எங்கள் பெண்ணோடு ஒன்றாய் உட்காரப் போகிறாய்? பயந்தால் மாப்பிள்ளைக்கு நாங்கள் பெண் தர மாட்டோம், தெரியுமா?'' என்றார்.

காரிலிருந்த எல்லோரும் சிரித்தார்கள். முருகையன் வெட்கப்பட்டுக் கொண்டே சித்திராவின் தாயாருக்குப் பக்கத்தில் அடக்கத்தோடு அமர்ந்தான். தாயாருக்கு மறு புறம் சித்திரா இருந்து கொண்டு அவனைக் கேலி செய்வது போல் பார்த்தாள். அதோடு அவளுக்கு முருகையனுக்கு முன்னால் தன் திறமையைக் காட்ட வேண்டும் என்றும் தோன்றி விட்டது.

''தாத்தா! என்னிடம் கொஞ்சம் காரைக் கொடுங்கள். நான் ஓட்டி வருகிறேன்'' என்றாள் சித்திரா. முருகையன் அவளை வியப்புடன் திரும்பிப் பார்த்தான். பதினெட்டு வயதுகூட ஆகாத இந்தப் பெண்ணுக்குக் காரோட்டத் தெரியுமா ?

அவள் அலட்சியமாகச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு 'உங்களுக்கு மரமேறத் தெரியும்; மடுவில் குதிக்கத் தெரியும்; ஆனால் என்னைப் போல் காரோட்டத் தெரியாது!' என்று சொல்லிக் காட்டுவது போலிருந்தது.

அதற்குள் அவளுடைய திறமை ரகசியத்தை உடைத்துக் காட்டிவிட்டார் அந்தப் பொல்லாத தாத்தா. ''வேண்டாம், சித்திரா! காரும் பத்திரமாகத் திரும்ப வேண்டும்; நாமும் பத்திரமாகத் திரும்பவேண்டும்'' என்றார். அத்துடன் நிறுத்தாமல் அவளிடம் அந்தக் கார் பட்டிருக்கிற தொல்லைகளையும் பாதசாரிகள் பட்டிருக்கிற பாடுகளையும் மற்றவர்களிடம் வர்

ணித்தார். "சித்திரா பத்து நிமிஷம் காரோட்டினால் பத்துப் பேர்களாவது ஆஸ்பத்திரிக்குப் போவார்கள்; இல்லை, பத்துப் பேர்களாவது காரைத் தள்ளிக் கொண்டு வீட்டுக்குவந்துசேருவார்கள்!"

"போங்கள் தாத்தா!" என்று கோபத்தோடு கத்தினாள் சித்திரா. முருகையனுக்கு முன்னால் கிழவர் தன்னை மடக்கி விட்டதில் அவளுக்கு ஆத்திரம். "உங்களுக்கு வயசாகி விட்டது. நத்தை வேகத்தில் சக்கரத்தை உருட்டிக் கொண்டு போகத்தான் உங்களுக்குத் தெரியும். வேகமாய்ப் போகிறவர்களைக் கண்டால் பிடிக்காது!"

"கிராமத்துச் சாலையில் உன் பட்டணத்து வேகம் எடுபடாது, சித்திரா!"

தாத்தாவுக்கும் பேத்திக்கும் சமரசம் ஏற்படுத்த முன்வந்தார் சிவப் பிரகாசம். சித்திராவிடம் திரும்பி, "தாத்தா விளையாட்டுக்குச் சொல்கிறாரம்மா! மெதுவாக நேரமிருக்கும் போது நீயே முருகையனுக்கும் கார் ஓட்டக் கற்றுக் கொடு" என்றார்.

கர்வத்தோடு சித்திரா முருகையனைப் பார்க்க அவன் பயத்தோடு விழித்தான்.

அதற்குள் தாத்தா, "முருகையா! நீ சித்திராவைக் கல்யாணம் செய்து கொள்வதுகூட அவ்வளவு ஆபத்தில்லை. ஆனால் காரோட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமானால் என்னிடம் வந்துவிடு" என்றார்.

கிராமத்துப் பாதையின் மேடு பள்ளங்களில் குலுங்கியபடி கார் ஒருவிதமாகப் போய்க் கொண்டிருந்தது. கரூருக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் பாதை இணைந்தவுடன் காரை அறுபது மைல் வேகத்தில் விரட்டினார் தாத்தா. சித்திராவிடம் பட்டசூடு அவருக்கு இளமை முறுக்கைக் கொடுத்து விட்டது. ஒரே வேகந்தான்; ஆனந்தமயமான வேகம்; இன்பப் பரபரப்பு நிறைந்த வேகம்.

சித்திராவின் தாயார் பொன்னம்மாளுக்கு அந்த வேகம் சுகமான நித்திரையைக் கொடுக்கவே, அவள் கண்ணயர்ந்து விட்டாள். அயராத இரு கண்கள் முருகையனை அடிக்கடி பார்த்துப் புன்முறுவல் சிந்திக் கொண்டு வந்தன. முருகையனுடைய வாழ்க்கையில் அது ஒரு புத்தம் புதிய அனுபவம்.

மலர் மணமும் வாசனைத் திரவியங்களின் மணமும் சித்திராவிடமிருந்து பொங்கி முருகையனின் மனத்தை நிரப்பிக் கொண்டிருந்தன. காற்றின் வேகத்தில் துடித்து அவள் நெற்றிப் புருவத்தில் தவழ்ந்த கேசம் அவனுக்கு எத்தனையோ கதைகளைக் கூறியது. சித்திரா அவனிடம் காண்பித்த பரிவை முருகையனால் நம்பவே முடியவில்லை. 'கார் கூட ஓட்டத் தெரியாத ஒரு கிராமவாசியிடம் பட்டணத்து நாகரிகத்தில் ஊறி வளர்ந்த ஓர் அழகுத் தேவதை அன்பைச் சொரிகிறாளே, இது உண்மைதானா?'

காதல் என்கிற சொல்லுக்கும் முருகையனுக்கும் எப்போதும் காத தூரம். அது இப்போது ஓர் அடி தூரத்தில் இருப்பதாகவும் அவன் நினைக்கவில்லை. அந்தச் சொல்லைப் பற்றி அவன் தமிழ் இலக்கிய வகுப்புகளிலும் ஆங்கில இலக்கிய வகுப்புகளிலும் ஓரளவு கேள்வியுற்றிருக்கிறான். அவ்வளவுதான். ஓய்ந்த வேளைகளில் பெண்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் இளைஞர்களிடம் அவன் நட்பு வைத்துக் கொண்டதில்லை.

ஆனால் முருகையன் இப்போது, தன்னை யறியாத ஒரு மன மயக்கத்தில் இருந்தான் என்பது மட்டும் உண்மை. தாத்தா வேறு அதற்குள் கல்யாணமென்றும் ஊர்வலமென்றும் வெளிப்படையாகவே பேசி விட்டார். அந்தப் பேச்சை அவ்வளவு எளிதாக அவர் பேசி விட்டது அவனுக்குப் பிடிக்கவில்லை யென்றாலும் அதை அவனால் மறக்கவும் முடியவில்லை. நகரவாசிகள் வயது வந்த ஓர் ஆணையும் பெண்ணையும் நேரில் வைத்துக் கொண்டு இப்படித்தான் பேசிக் கொள்வார்களா— அதை நினைக்க நினைக்க அவனுக்கு வெட்கமாக இருந்தது; சித்திராவை ஏறெடுத்துப் பார்க்கத் தயங்கியவன் போல் தலை குனிந்துகொண்டான்.

"தூங்குகிறீர்களா அத்தான்? விழித்துக் கொள்ளுங்கள்!" என்று கேலிசெய்தாள் சித்திரா. விரைவில் கார் கரூருக்குள் நுழைந்தது.

கடைகளுக்குச் சென்று பட்டுப் புடவைகளைப் பார்வையிடத் தொடங்கினார்கள் எல்லோரும். சித்திராவுக்குத் தேர்ந்தெடுக்க வேண்டிய வேலையை முருகையனிடம் கொடுத்தார் தாத்தா. முருகையனுக்கோ எல்லாத் துணிகளும் ஒன்று போலவே தோன்றின. ஒவ்வொன்றாகக் கையில் எடுத்துக்கொண்டு சித்திராவைப் பார்த்துப் பரிதாபமாக விழித்தான். கடைசியில் சித்திரா அவனுடைய உதவிக்கு வந்து தனக்குப் பிடித்தவற்றை அவனுக்குப் பிடித்தவை என்று சொல்ல வைத்து, வாங்கிக் கொண்டாள்.

துணிக் கடை முடிந்த பின்பு நகைக் கடைக்குச் சென்று சித்திராவுக்காக ஒரு தங்கச் சங்கிலி பார்க்க முற்பட்டார் சிவப்பிரகாசம். பொன்னம்மா

ளுக்கு அதை வாங்கிக் கொள்வதில் ஆசை இருந்தாலும் ஒப்புக்காகத் தன் மறுப்பை வெளியிட்டாள்.

''சித்திராவுக்கு ஏற்கனவே ஒரு வைர நெக்லஸ்ும், இரண்டு தங்கச் சங்கிலிகளும் இருக்கின்றன, அண்ணா! இப்போது எதற்காக உங்களுக்கு வீண் செலவு?''

''இருந்தால் என்ன தங்கச்சி! அண்ணன் தன் மருமகளுக்கு ஆசையோடு வாங்கிக் கொடுப்பதை வேண்டாம் என்று சொல்லலாமா?'' என்று குறுக்கிட்டார் குமரவேல். ''பட்டணத்தில்தான் ஒரு நாளைக்கு ஒரு மாதிரி நகை போட்டுக் கொள்கிறார்களாமே! ஏழு நாளைக்கு ஏழு சங்கிலியாவது வேண்டாமா?''

சங்கிலியை வாங்கிக் கொண்டு எல்லோரும் காப்பி ஓட்டலுக்குச் சென்றார்கள். சிவப்பிரகாசம் மற்றவர்களையும் ஓடி ஓடி உபசாரம் செய்து, தம் வயிற்றுக்கும் உபசாரம் செய்து கொண்டார். எதையெடுத்தாலும் 'தாராளம், ஏராளம்' என்ற சொற்கள்தான் அவரிடம் வெளிவரும். அன்றைக்கு அவருடைய தாராள ஏராளச் செலவு அறுநூறு ரூபாய்க்கு மேலாயிற்று.

அந்தப் பணம் எப்படி வந்தது என்பது அவருக்கும் குமரவேலுக்கும்தான் தெரியுமே தவிர, முருகையனுக்குக்கூடத் தெரியாது. தன் தகப்பனார் கடன் வாங்கக் கூடியவர் என்று அவன் கனவிலும் நினைத்ததில்லை.

கரூரிலிருந்து புறப்பட்ட அவர்களுடைய கார் திரும்பவும் பெரியபாளையத்துக்கு வந்து சேர்வதற்குள் நன்றாக இருட்டி விட்டது. வானத்தில் மீன்கள் கூடத் தெரியாதபடி மேகத்திரள் கவிந்திருந்தது.

## அத்தியாயம் பதினான்கு

# தகப்பனாரின் ஆசை

சித்திராவும் அவள் தாயாரும் மறுநாள் காலை சென்னைக்குத் திரும்புவதாக இருந்தார்கள். கரூரிலிருந்து வந்தவுடன் இரவோடு இரவாகக் காரில், சாமான்களைத் திணிக்கத் தொடங்கிவிட்டார் பட்டணத்துத் தாத்தா. பஞ்சுப் பொதியல் நிறைந்த சின்னஞ் சிறு லாரி போல் தோற்றமளித்தது அந்தக் கார். முன் 'சீட்'டை மாத்திரம் மனிதர்களுக்கு விட்டு விட்டு, மற்றபடி எல்லா இடங்களிலும் சாமான்களைச் சுற்றி வளைத்துக் கட்டினார். சிவப் பிரகாசத்தின் பணியாட்களை அவர் அதட்டி மிரட்டி வேலை வாங்கியது போல் சிவப்பிரகாசமே வேலை வாங்கியதில்லை. தாத்தாவின் தொழில் ரகசியமே இதுதான்: எட்டினால் தலையைப் பிடித்து இழுப்பார்; எட்டாவிட்டால் கால்களில் விழுந்து விடுவார்.

பின் கட்டுக் கூடத்தில் 'அரிகேன்' விளக்கு எரிந்து கொண்டிருந்தது. குமரவேல் தம் வீட்டுக்குச் சென்றதால், சிவப்பிரகாசமும் அவர் தங்கச்சியும் தனியே அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

''தங்கச்சி! வந்ததிலிருந்து உன்னோடு தனியாகப் பேச வேண்டுமென்று நினைத்தேன். நாளைக்கு நீ புறப்படுவதால், இனிமேல் இந்தச் சந்தர்ப்பத்தை விட்டால் வேறு நேரம் கிடைக்காது.''

''சொல்லுங்களண்ணா!'' என்று ஆவலுடன் கேட்டாள் பொன்னம்மாள்.

''மீனாட்சி போனதிலிருந்து என் உடம்பிலிருந்து பாதி உயிர் போய் விட்டது. இன்னும் பாதி உயிர் முருகையனால்தான் துடித்துக் கொண்டிருக்கிறது. வெளிப் பார்வைக்கு நான் சந்தோஷமாக இருக்கிறேன் என்று நீ நினைத்துக் கொண்டிருப்பாய். உண்மைதான். எனக்கு இப்போது ஒரு குறைவுமில்லை. நான் சிரித்துக் கொண்டிருந்தால் முருகையன் சிரித்துக் கொண்டிருப்பானல்லவா? அவனை நினைத்துத்தான் நான் ஒவ்வொரு காரியமும் செய்கிறேன். மிஞ்சியிருக்கும் என் உயிரே அவன் ஒருவனுடையதுதான்.'' சிவப்பிரகாசத்தின் குரல் தழுதழுத்தது.

''எதற்காக அண்ணா கலங்குகிறீர்கள்? அவனைத்தான் ராஜாவைப் போல் வளர்த்து விட்டீர்கள். நன்றாகப் படிக்க வைக்கிறீர்கள். தாய்க்குத் தாயாகத் தகப்பனுக்குத் தகப்பனாராக நீங்கள் அவனைக் கவனித்து வரும்போது, அவனுடைய எதிர்காலம் அற்புதமாக இருக்கும் அண்ணா!''

''அது ஒன்றுதான் அம்மா எனக்கு வேண்டும்! அவன் படித்து முடித்துப் பெரிய உத்தியோகம் பார்க்கவேண்டும். எனக்கு மீனாட்சி கிடைத்தது போல் அவனுக்கு ஒரு உத்தமி மனைவியாக வந்து வாய்க்க வேண்டும். இக் குடும்பம் அவளால் களைபெற்று விளங்கவேண்டும். என்னைவிட என் மகன் எல்லா வகையிலும் உயர்ந்திருக்க வேண்டுமம்மா!''

''அண்ணு! உங்கள் மனசு பெரிய மனசண்ணு. எல்லாம் நீங்கள் நினைப்பது போலவே நடக்கும்'' என்று மனம் விட்டுக் கூறினுள் பொன்னம்மாள்.

''நான் நினைப்பதை இனியும் எதற்காக உன்னிடம் சுற்றி வளைத்துப் பேச வேண்டும்? மீனுட்சி இருந்த வீட்டில் விளக்கேற்றி வைப்பதற்கு நீ சித்திராவைக் கொடுப்பாயா? முருகையனுக்குப் பெண் கொடுக்க உனக்குச் சம்மதமா?''

பொன்னம்மாள் பதிலளிக்கவில்லை. மௌனமானுள்; யோசனை செய்தாள்.

''என்ன தங்கச்சி, யோசனை செய்கிருய்? வேறு எங்காவது உன் வீட்டுக்காரர் மாப்பிள்ளை தேடி வைத்திருக்கிருரா? குமரவேலின் மகன் செல்வரத்தினத்துக்குக் கொடுத்தால் இதை விட நல்ல இடம் என்ற எண்ணமா?''

பொன்னம்மாள் திடுக்கிட்டாள்.. ஆரம்பத்தில் அப்படி ஒரு நினைவு அவளிடம் தலை தூக்கியது என்னவோ



உண்மைதான். அவர்களில் படித்த மாப்பிள்ளைகள் கிடைப்பது அபூர்வம். இருக்கும் இளைஞர்களில் செல்வரத்தினம் முருகையனை விட மேல் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தவன். இஞ்ஜினியரிங் கல்லூரிப் படிப்புக்குக் கைமேல் பதவியும் பணமும் அப்போது கிடைத்தன. ஆனுலும் பொன்னம்மாள் குமரவேலுவுடன் சம்பந்தம் வைத்துக் கொள்ள விரும்பவில்லை. சிவப்பிரகாசத்தை விட அவள் குமரவேலை ஓரளவு தெரிந்து வைத்திருந்தாள்.

''இல்லையண்ணு! குமரவேல் வீட்டில் சம்பந்தம் வைத்துக் கொள்ள எனக்கு விருப்ப மில்லை. வீட்டுக்குப் போய் உன் மைத்துனரையும் என் பையன்களையும் கலந்து கொண்டு இங்கேதான் கொடுக்க வேண்டும்.''

''அப்பாடா! நெஞ்சிலிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கி விட்டது, தங்கச்சி!'' என்று பெருமூச்சு விட்டார் சிவப் பிரகாசம். ''முருகையனை நன்ருக இன்னும் இரண்டு மூன்று வருஷங்கள் படிக்க வைக்கிறேன். பெரிய படிப்புப் படித்தால் பெரிய உத்தியோகம் கிடைக்காமல் போகாது. அதற்குள் சித்திராவும் படித்து முடித்துப் பெரிய பெண்ணுகட்டும். இதே ஊரில் இதே வீட்டில் கல்யாணத்தைத் தாராளமாக நடத்தி விடுவோம். பணம் ஏராளமாகச் செலவாகும். ஆகட்டுமே, இருப்பது ஒரே பிள்ளைதானே?''

பொன்னம்மாள் கல்யாணத்துக்குச் சம்மதித்ததில் முக்கியமான ஒரு காரணம் அவருடைய 'ஏராளமும் தாராளமும்'தான். குமரவேலிடம் ஏராளமாகப் பணமிருந்தாலும் அவர் தாராளமாக வாங்குவாரே தவிர, தம்பிடி கூடக் கொடுக்க மாட்டார் என்பது அவள் நடைமுறையில் கண்ட உண்மை. கிராமத்துக்கு வந்த போதெல்லாம் தம் வீட்டில் கணக்காக ஒரு வேளை விருந்துச் சாப்பாடு போட்டுப் பொன்னம்மாளின் உறவை நிலைநாட்டிக் கொண்டு வந்தார்.

சிவப்பிரகாசத்துக்குப் பொன்னம்மாளின் சம்மதம் தெரிந்தவுடன் உடம்பு இரண்டு சுற்ருய்ப் பருத்து விட்டது. பட்டணத்தில் படித்த பெண் தமக்கு மருமகளாய் வரப் போகிருள் ' என்ற விஷயத்தை விரைவில் அந்த ஊர் முழுதும் பரப்ப வேண்டு மென்று ஆசைப்பட்டுக்கொண்டார். படித்து உத்தியோகம் பார்க்கப் போகிற பையனுக்கு நாகரிகம் தெரிந்த மனைவி கிடைத்தால்தானே அது மதிப்பாக இருக்கும்? கிராமத்தில் இனி அவருக்கு ஈடு இணை உள்ளவர்களே கிடையாது.

அதே நேரத்தில் முருகையனின் அறையில் முருகையன் தனித்துக் கனவுலகத்தில் மிதந்து கொண்டிருந்தான். நாட்கள் இரண்டும் எப்படிப் பறந்து மறைந்தன என்பதே அவனுக்கு விளங்கவில்லை. நடந்த நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றுமே மறக்க முடியாத நிகழ்ச்சிகள் போல் தோன்றியது.

புதுப் புடவையின் சத்தம் சர சர வென்று அவனருகில் கேட்டது. சட்டென்று திரும்பிப் பார்த்தான் முருகையன். விழிகள் வியப்பால் விரிந்தன. திடீரென்று சித்திரா இவ்வளவு பெரிய பெண்ணுக எப்படி மாறினுள்? பாவாடையும் தாவணியும் உடுத்தி, அன்று காலை வரை சிறுமிபோல் காட்சி அளித்தவள் ஒரு சிறிய உடை மாற்றத்தால் எவ்வளவு வளர்ந்து விட்டாள். கூரில் அவன் வாங்கிக் கொடுத்த புதுப் புடவைக்கு இப்படியோர் அதிசய சக்தி இருக்கிறதா....?

''என்ன அப்படி மிரண்டு விழிக்கிறீர்கள்? புடவை நன்றாக இருக்கிறதா? வாங்கிக் கொடுத்தவரிடம் காண்பிக்க வேண்டுமே என்பதற்காக இப்போதே உடுத்திக் கொண்டேன்.''

''நன்றாக இருக்கிறது சித்திரா!'' என்று தைரியமாகச் சொல்லி வைத்தான் முருகையன்.

''ஹும்! புடவைதானே நன்றாக இருக்கிறது?'' என்று சிணுங்கினாள் அவள். அவள் குறும்புத்தனமாகப் பேசுகிறாளா அல்லது வருத்தத்தோடு பேசுகிறாளா என்று முருகையனுக்குப் புரியவில்லை. 'இந்தப் புடவையை உடுத்திக் கொண்ட பிறகு நீ மிகவும் அழகாக இருக்கிறாய் சித்திரா' என்று அவனுக்கு விளக்கமாகச் சொல்லத் தெரியவில்லை.

''போனால் போகட்டும்! இந்தச் சங்கிலியைப் போட்டுக் கொள்ளலாமென்று பார்த்தால் என்னால் முடியவில்லை. நீங்கள் கொஞ்சம் போட்டு விடுகிறீர்களா?''

இதைக் கேட்டவுடனேயே முருகையனுக்கு நடுக்கமேற்பட்டது. ஒரு பெண்ணுக்குக் கழுத்தில் சங்கிலி போட்டு விடுவதா? இது என்ன அக்கிரமம்? அப்பாவோ அத்தையோ பார்த்தால் என்ன நினைப்பார்கள்?

''ஏன், உங்களுக்குத் தெரியாதா?—இதோ பாருங்கள்! இப்படிப் போட்டுத் திருகைச் சுற்றிவிட்டால் போதும்.''

சங்கிலியை வாங்கி நடுங்கும் கரங்களால் அவள் கழுத்தில் போட்டுத் திருகைச் சுற்றிவிடப் பார்த்தான் முருகையன். கரங்கள் நடுங்ினவே தவிர, சங்கிலித் திருகு சுழலவில்லை. கவீரென்று சிரித்தாள் சித்திரா.

''அத்தான்! சங்கிலியைத் திருட வந்தவர் போல் பயப்படுகிறீர்களே? இது உங்களுடையது அத்தான்! நீங்கள் வாங்கிக் கொடுத்தீர்கள். வாங்கிக் கொடுத்தவருக்குப் போட்டுவிடத் தெரியாது போலிருக்கிறதே!''

அவளுடைய கேலிச் சிரிப்பும் பரிகாசப் பேச்சும் முருகையனுக்கு ரோஷத்தைக் கிளறிவிட்டன. தைரியத்தை வரவழைத்துக் கொண்டு மளமளவென்று திருகைச் சுற்றிவிட்டான். இனி அதைக் கழற்ற வேண்டுமானால் ஆசாரி வந்தாக வேண்டும் என்ற அளவுக்குச் சங்கிலி இறுகிப் போயிற்று.

பிறகு இருவரும் ஒருவரை யொருவர் சில விநாடிகள் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டார்கள். அவர்களுடைய காலின் கீழே இருந்த தரை மேலே கிளம்பி வானத்தில் பறப்பது போல் தோன்றியது.

இந்தச் சமயத்தில் திடீரெனத் தெருவில் குழப்பம் நிறைந்த கூச்சல் கேட்டது. தடதட வென்று பலர் கூட்டமாக ஓடினார்கள். முருகையன் பதற்றத்தோடு கதவைத் திறந்து கொண்டு தெருவுக்கு ஓடி வர முயன்றான். சித்திரா அவனை விடவில்லை. குறுக்கே வழி மறித்து, ''ஏதோ கலவரம் நடக்கிறது அத்தான்! வெளியே போகாதீர்கள்!'' என்று கத்தினாள்.

சன்னல் வழியே தெற்கில் போலீஸ் அவுட் ஸ்டேஷனருகில் நெருப்புப் பற்றி எரிவது போல் தெரிந்தது. குபீர் குபீரென்று வைக்கோல் போர்கள் பற்றிக் கொண்டு கொழுந்து விட்டன. தலைகளில் முண்டாசும், கைகளில் வேல்களும், தடிகளுமாகச் சிலர் நாலா புறங்களிலும் சிதறி ஓடினார்கள்.

''வழி விடு சித்திரா! என்ன கலவரமென்று எனக்குத் தெரியும். வழி விடு!'' என்று துடித்தான் முருகையன்.

''முடியாது!'' என்றாள் சித்திரா.

இதற்குள் அங்கு சிவப்பிரகாசமும் சித்திராவின் தாயாரும் வந்துவிடவே, அவர்களை மீறி முருகையன் வெளியே செல்லவில்லை. முருகையனுக்குப் பெருமாள்சாமி மாட்டு வண்டியிலே பேசிய விஷயங்களெல்லாம் அப்பொழுது நினைவுக்கு வந்தன. (தொடரும்)




## 8 - நச்சுப் பாம்புகள்

போது நள்ளிரவையும் கடந்துவிட்டது. வெறி ஒடுங்கிச் சோர்வு மிகுந்ததால் வன்னி மன்றத்தில் காபாலிகர்களும் உறங்கிப் போய்விட்டார்கள். மரக்கிளைகள் ஆடி உராயும் மர்மர சப்தமும் காற்றுச் சுழித்துச் சுழித்து வீசும் ஓசையும் - இடை இடையே அந்த ஓசையைக் கலைத்துக் கொண்டு ஆந்தையும், கோட்டானும் அலறுகிற விகாரமும், கூகை குழறும் குரலும் சேர்ந்து வன்னி மன்றத்துக்குக் கணம் கணமாகப் பயங்கரச் சூழ்நிலையைப் படைத்துக் கொடுத்துக் கொண்டிருந்தன. தொடங்கினால் முடிவதற்குச் சிறிது நேரமாகும்படி நீண்டு இழுபட்டுக் கேட்கும் நரியின் ஊளைக் குரல் வேறு. ஆண்டலை என்னும் பிணம் தின்னிப் பறவைகள் உயரமும் தோற்றமுமாக ஆள் நடந்து வருவது போலப் பறவை யுடலும் மனிதத் தலை போன்ற சிரமும் கொண்டு சுற்றித் திரிந்தன. இரவில் நெருப்புக் கனிகளாகத் தோன்றும் அவற்றின் கண்கள் காண்பதற்கு அச்சமூட்டுவனவா யிருந்தன.

இந்தச் சூழ்நிலையில் நகைவேழம்பரும், பெருநிதிச் செல்வரும், பைரவியின் குடிசை வாயிலில் காத்துக் கொண்டிருந்தார்கள். பைரவி இன்னும் திரும்பவில்லை. பெருநிதிச் செல்வருக்குப் பயத்தினால் இதயம் வேகமாக அடித்துக் கொண்டது. கைகள் எதையும் செய்யாமலிருக்கும்போதே நடுங்கின. மௌனமாக இருக்கும்போது பேசிக் கொண்டிருந்தால் பயம் தீரும் போலவும், பேசிக் கொண்டிருக்கும்போது பேச்சை நிறுத்திவிட்டு மௌனமானால் பயம் தீரும் போலவும் மாறி மாறிப் பேசியும், பேசாமலும் பயந்து கொண்டே இருந்தார் அவர்.

''இப்படிப்பட்ட செயல்களுக்குப் பைரவிதான் முற்றும் பொருத்தமானவள். அவளை இத்தகைய செயலுக்கு அனுப்பினால் நிச்சயமாக வெற்றியை எதிர்பார்க்கலாம். அவளுடைய கைகளுக்கு முடியாத காரியமென்று எதுவும் இல்லை...'' என்று நகைவேழம்பர் புகழ் பாடிக் கொண்டிருந்தபோதே பைரவி அலறிப் புடைத்தவாறு விழுந்தடித்துக்கொண்டு ஓடி வந்தாள். மேல் மூச்சுக் கீழ்மூச்சு வாங்கி இரைத்துக் கொண்டு நின்றாள். பதற்றத்தில் நிகழ்ந்ததைத் தொடர்பாகச் சொல்ல வரவில்லை அவளுக்கு. தயங்கித் தயங்கி ஏதோ சொன்னாள். சொல்லில் தெளிவில்லை. சொல்லப்பட்டவற்றிலும் துணிவில்லை. சொற்களை முழுமையின்றி அரற்றினாள்.

கொடுமையே வடிவான அவளும் தோற்றுப் போய் வந்தாள் என்பதை அவர்களால் நம்ப முடியவில்லை. ஆனால் நம்பித்தான் ஆக வேண்டி யிருந்தது. ''நிற்கவும் நிலைக்கவும் வேண்டிய காரியத்துக்குத் தடையின்மையே பெரிய அவலட்சணம் என்று சற்று முன் கூறினீர்களல்லவா? அந்த அவலட்சணம் ஏற்பட்டுவிடாமல் தடை நேர்ந்துவிட்டது'' என்று குத்தலாகச் சொல்லிச் சிரித்தார் நகைவேழம்பர். இதைக் கேட்டுப் பெருநிதிச் செல்வருக்கு அடக்க முடியாத கோபம் வந்து விட்டது. ''என் சித்தப்படியே எல்லாம் நடக்கிறதென்று விருப்புப் பேசினீர்களே? உங்கள் சித்தப்படி, இதுவும் நடப்பதுதானே?'' என்று நகைவேழம்பரைப் பதிலுக்குச் சாடினார் அவர். இருவரும் ஒருவரையொருவர் சொற்களால் சாடிக் கொண்டே திரும்பினார்கள். சக்கரவாளத்தைக் கடந்து மதிற் கவருக்கு இப்பால் பூதம் நின்ற வாயிலுக்கு வெளிப்புறம் அவர்களிருவரும் வந்தபோது எங்கிருந்தோ ஓர் ஆந்தை ஒற்றைக் குரல் கொடுத்தது.

''ஆந்தை ஒற்றைக் குரல் கொடுக்கிறது. நல்ல சகுனம்தான். இன்று தோல்வி அடைந்து விட்டாலும் நம் முயற்சிக்கு என்றாவது வெற்றி கிடைக்

கும்'' என்று தேரில் ஏறிக் கொண்டே சொன்னார் நகைவேழம்பர்.

''உமக்குப் பட்சி சாத்திரம் கூடத் தெரியுமோ நகைவேழம்பரே?'' - பெருநிதிச் செல்வர் இயல்பாக இப்படி வினவுகிறாரா ஏளனம் செய்யும் குரலில் வினவுகிறாரா என்பதைப் புரிந்து கொள்ள முயன்று சில விநாடிகள் ஒன்றும் புரியாமல் திகைத்தார் நகைவேழம்பர். பின்பு திகைப்பு நீங்கியவராக, ''ஆகா! பட்சி சாத்திரம் மட்டுமில்லை, பட்சிகளுக்கு வலை விரிக்கும் சாத்திரமும் தெரியும். ஆந்தை ஒற்றைக் குரல் கொடுத்தால் சாவு என்று பொருள். நாம் யாரைக் கொல்ல முயன்றுகொண்டிருக்கிறோமோ அவனுக்குச் சாவு நெருங்குகிறது என்பதைத்தான் இந்த ஆந்தை சொல்லுகிறது'' என்றார்.

''நீர் விளக்கம் சொல்வது போல் அல்லாமல் ஆந்தையின் குரலைக் கேட்ட உமக்கோ, எனக்கோ அது சகுனம் சொல்லியிருந்தால்...?''

''சொல்லியிருந்தால் இந்தக் கணமே அந்த ஆந்தைக்குச் சாவு என்று பொருள். சகுனங்களை நமக்கு ஏற்றாற் போல் இணைத்துப் பார்க்க வேண்டுமே தவிரச் சகுனங்களுக்கு ஏற்றாற் போல நாம் மாறிக் கொண்டு வேதனைப்படலாமோ....?''

''ஓகோ! எதையும் உமக்கு ஏற்றாற் போல வளைத்து மாற்றிப் பார்க்கிறவரா நீர்....?''

பெருநிதிச் செல்வரின் இந்தக் கேள்விக்கு நகை வேழம்பரிடமிருந்து மறுமொழியில்லை. அவர் விழிப்படைந்தார். தேர் விரைந்து போய்க் கொண்டிருந்தது. அமைதியான அந்த நேரத்தில் தேர்ச் சக்கரங்களின் ஓசையே எங்கும் பரவி நிறைவது போல் அதுவே பெரிய ஓசையாகக் கேட்டுக் கொண்டிருந்தது. சிறிது தொலைவு சென்றதும் ஒரு தாழம் புதரருகே புற்றுக்களின் நடுவே மகுடி வாசித்துக் கொண்டிருந்த பாம்புப் பிடாரன் ஒருவனை அவர்கள் கண்டார்கள். தேரிலிருந்தபடியே நிலவொளியில் அந்த நாகரினத்துப் பாம்பாட்டி மகுடி வாசிப்பதை அவர்கள் கண்டு கொண்டே செல்ல முடிந்தது. அந்த இடத்திலிருந்து தேர் சிறிது தொலைவு சென்றபின் எதையோ அவசரமாக நினைத்துக் கொண்டவர் போல் தேரை மறுபடியும் திருப்பி அதே இடத்துக்குச் செலுத்தினார் நகைவேழம்பர். எதற்காகத் தேர் திருப்பப் படுகிறது என்பதைப் பெருநிதிச் செல்வரிடமும் கூறவில்லை. தம்மிடம் கூறாமலே தேர் திருப்பப்படுவதைக் கண்டு அவர் பயமும் திகைப்பும் ஒருங்கு அடைந்தாலும், பயத்தைச் சற்றே மறைத்துக் கொண்டு திகைப்பு மட்டும் வெளிப்படுகிற குரலில், ''ஏன்? எதற்காகத் தேரைத் திருப்புகிறீர்கள் நகை வேழம்பரே! வள்ளி மன்றத்தில் எதையாவது மறந்து வைத்து விட்டீர்களா?'' என்று கேட்டார்.

அவருடைய கேள்விக்கும் பதில் கூறாமல் குதிரைகளை விரட்டியடித்துக் கொண்டு போனார் நகை வேழம்பர். நாகர் இனத்துப் பாம்புப் பிடாரன் மகுடி வாசித்துக் கொண்டிருந்த புற்றருகே போய்த் தேர் நின்றது. அதற்குள் குதிரைகளுக்கு வாயில் நுரை தள்ளியிருந்தது, அவ்வளவு வேகத்தில் விரட்டியிருந்தார் அவர். அந்த இடத்துக்கு வந்ததும் தாம் தேரிலிருந்து முதலில் கீழே குதித்து நின்று கொண்டு ''இறங்கி வாருங்கள்! இவனிடம் ஒரு காரியம் இருக்கிறது'' என்று பாம்பாட்டியைச் சுட்டிக் காண்பித்துப் பெருநிதிச் செல்வரை அழைத்தார் நகைவேழம்பர்: 'எதற்காகத் தேரைத் திருப்புகிறாய் என்று நான் கேட்டபோது என்னை மதித்துப் பதில் சொல்லாத இவனுடைய அழைப்பை மதித்து நான் ஏன் கீழே இறங்க வேண்டும்?' என்று நினைத்தவராய்ச் சில கணங்கள் நகை வேழம்பருடைய வார்த்தைகளையே கேட்காதவர் போலத் தேரிலேயே இருந்தார் பெருநிதிச் செல்வர். பின்பு நகை வேழம்பரைப் போலக் கொடுமையானவர்களை நேருக்கு நேர் அலட்சியம் செய்வது சமயோசிதமாகாது என்று தமக்குத் தாமே உணர்ந்தவராகத் தேரிலிருந்து கீழே இறங்கினார். ''இவனுடைய மகுடி ஓசையால் இந்தப் பகுதியில் மூலைக்கு மூலை நாகங்கள் புறப்பட்டு ஊர்ந்து கொண்டிருக்குமே! இங்கு எதற்காகத் தரையில் இறங்கவேண்டுமென்கிறீர்கள்? தாழம் புதரும், புற்றுக்களும், பிடாரனும் பார்த்தாலே பயமாக இருக்கிறதே......?'' என்று வார்த்தைகளை நீட்டி இழுத்த பெருநிதிச் செல்வரை ஏறிட்டுப் பார்த்தார் நகைவேழம்பர். விஷமமாகச் சிரித்துக்கொண்டே பார்த்தார். பார்த்துவிட்டுப் பதறாத குரலில் உள்ளர்த்தமாகப் பல செய்திகளையெல்லாம் நிறைத்து நிறுத்திய வார்த்தைகளால் சுருக்கமாக ஒரு கேள்வி கேட்டார்:

'' பயப்படுகிற எதையும் நீங்கள் செய்வதே இல்லையோ ?''

பெரு நிதிச் செல்வர் இதைக் கேட்டு அப்படியே வெல வெலத்துப் போனார். இந்தக் கேள்வியின் மூலமாக நகைவேழம்பர் எதை நினைவு படுத்துகிறார் என்று பழைய நிகழ்ச்சிகளை ஒவ்வொன்

ருய். வரிசையாய் நினைத்துப் பார்க்கவும் முயன்ருர். எதையும் நினைவுபடுத்துகிருற் போலவும் இல்லை. எல்லாவற்றையும் நினைவுபடுத்திக் குத்திக் காட்டுவது போலவும் இருந்தது. எல்லாவற்றிலும் பயங்கரமான ஏதோ ஒன்றை மட்டும் நினைவுறுத்துவது போலவும் இருந்தது. இந்தக் கேள்வியைக் கேட்கிறபோது நகைவேழம்பரின் பேச்சும் வன்மமாகவே இருந்தது. மனத்தில் ஏதேதோ அதிர்ச்சிகள் பேசிட, வாய் ஒன்றும் பேசாமல் நகைவேழம்பரைப் பின்பற்றிப் பாம்புப் பிடாரன் இருந்த இடத்துக்கு நடந்தார் பெருநிதிச் செல்வர். கொடி கொடியாய்க் கிளை விட்டு வளர்ந்திருந்த அந்தப் புற்றுக்களின் நுனித் துவாரங்களைப் பார்த்தவாறே கவனம் கலையாமல் மகுடி ஊதிக்கொண்டிருந்தான் அந்த முரட்டுப் பிடாரன். தனக்குப் பின்னுல் மிக அருகில் யாரோ இருவர் வந்து நிற்பதை அறிந்துகொண்டானுயினும் அவன் திரும்பிப் பார்க்கவில்லை. பயத்தினுல் புற்று நுனிகளெல்லாம் பெருநிதிச் செல்வருக்குச் சர்ப்பங்களாகவே தோன்றின. நெருப்பில் காட்டிய தருப்பைப் புல்லின் அழலோடிய நுனிகளைப் போல் செக்கச் செவேலெனப் பிளந்த நாக்குகள் நெளிய ஒரு படம் புற்றிலிருந்து வெளி வந்து தெரிந்தது. பெருநிதிச் செல்வர் பயந்து பதுங்கி நகைவேழம்பரைத் தழுவிக் கட்டிக் கொள்வது போல அவரோடு அவராக ஒண்டினுர்; சாதிக்காயின் மேல் நரம்போடிப் படர்ந்த சாதிபத்திரி போல் நச்சு நாவுகள் நெளியப் புற்றுத் துளையிலிருந்து பொங்கி ஒழுகிப் பெருகி வழியும் கருமையாய் ஒரு பெரிய கரு நாகம் வெளி வந்தது. மகுடியை ஒரு கையாலேயே வாசித்துக் கொண்டு மற்ருெரு கையால் சர்ப்பத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் வாய்ந்த வேரைப் பிடித்தான் பிடாரன். தரையில் அவனைச் சுற்றிலும் பாம்பைச் சிறைப் பிடித்து அடைத்துக் கொண்டு போகும் பேழைகள் கிடந்தன. பயத்தின் மிகுதியால் நகைவேழம்பரையும் இழுத்துக் கொண்டு பின்னுக்கு நகர்ந்தார் பெருநிதிச் செல்வர்.

கூடை போலப் பிரம்பினுல் நெருக்கமாய்ப் பின்னிய வட்டப் பேழையில் சாமர்த்தியமாக அந்தச் சர்ப்பத்தை அடைத்து மூடி அதன் மேலே சிறு கல் ஒன்றையும் தூக்கி வைத்தான் பிடாரன். பின்பு விலகி நிற்கும்படி அவர்களுக்குச் சொல்லிவிட்டு மேலும் மகுடி ஊதலானுன். புற்றில் இன்னெரு படம் தெரிந்தது. தொடர்ந்து வேறு வேருக அடுத்த இரண்டு துவாரங்களிலும் படங்கள் தெரிந்தன. பிடாரன் சாதுரியமாய் வேலை செய்தான். அவனிடம் மீத மிருந்த பேழைகளும் நிரம்பின. கிடைத்த பாம்புகளை யெல்லாம் சிறைப்படுத்திக் கொண்டு அவன் மகுடியை நிறுத்தி விட்டு எழுந்தான். நகைவேழம்பர் அவனைப் பற்றி அவனிடமே விசாரித்தார். இந்திர விழாவில் வேடிக்கை விளையாட்டுக்கள் செய்து பாம்பாட்டிக் காட்ட வந்திருப்பதாகவும் அது தன் தொழில் என்றும் அவன் சொன்னுன். நகைவேழம்பர் அவனிடமே மேலும் கேட்டார்: ''இந்த நச்சுப் பாம்புகளை எப்படிப் பொது இடங்களில் வைத்து ஆட்டுவாய்? இவற்றைக் கண்டாலே மக்கள் பயப்படுவார்களே?''

''ஆட்டுவதற்குக் கொண்டு போகும் முன்பே நச்சுப் பல்லைப் பிடுங்கிவிடுவோம் ஐயா! பிடுங்கா விட்டாலும் இவற்றை ஆட்டும் வேர் எங்களிடம் உண்டு'' என்ருன் பிடாரன். நகைவேழம்பர் மிக அருகில் சென்று குழைவான குரலில் அவனிடம் வேண்டினுர்:

''நீ எங்களுக்கு ஓர் உதவி செய்ய வேண்டும்.....?''

''என்ன செய்ய வேண்டும் ஐயா?''

''நீ உன் பாம்புப் பேழைகளுடன் எங்களோடு எங்கள் தேரில் வரவேண்டும்....'' என்ருர் நகைவேழம்பர்.

இதை
வெல்வது
இயலாத
காரியம்





மாடல் 0322  6 வால்வ் • ஆல்–வேவ்
3 பாண்டு • ஏஸி, அல்லது ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)

# murphy radio

மர்பி ரேடியோ

இல்லத்திற்கு இன்பமளிக்கிறது

MR.0-137



# மனக்கொதிப்பும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன

நம் வயிறும், மூளையும் நரம்புகளின் மூலம் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு முறையும் நாம் மனக் கொதிப்பினாலோ அல்லது கவலையினாலோ பாதிக்கப்படும்பொழுது இந்த நரம்புகள் ஜீரணம் செய்வதை தாற்காலிகமாக தடுப்பதுடன் ஆட்ரினலின் என்ற சக்திவாய்ந்த அமிலத்தை வெளிப்படுத்தி ரத்தத்துடன் கலக்கிறது. இந்த அமிலம் ஓடியாடி வேலை செய்வோருக்கு மனக்கொதிப்பை எதிர்த்துப் போராட உதவுகிறது. ஆனால் மற்றவர்கள் விஷயத்தில் இது தீமையைப் பயக்குவதுடன் அவர்கள் ஜீரண சக்தியையும் குறைக்கிறது. அதனால்தான் வியாபாரத் துறையிலுள்ளவர்களில் 10 பேர்களில் 6 பேர் அஜீரணத்திற்குள்ளாகி, அதன் விளைவாக சாப்பிட்டபின் வயிற்று வலியினால் கஷ்டப்படுகிறார்கள்.






ஹ்யூலட்ஸ் மிக்சர் வயிற்றுவலியை விரைவாகவும் அடியோடும் நிவர்த்திக்கிறது. எரிச்சலை உண்டாக்கும் அமிலத்திலிருந்து இரைப்பையின் சுவற்றைக் காப்பாற்றுவதோடு உணவை நன்றாக கரைத்து ஜீரண சக்தி ஏற்படுவதற்கும் உதவுகிறது. 80 வருஷங்களுக்கு மேலாக உலகத்திலுள்ள எல்லா டாக்டர்களும் சிபாரிசு செய்யும் மருந்து இதுவே. குழந்தைகளின் வயிற்று உபாதையையும் தீர்க்கவல்லது ஹ்யூலட்ஸ் மிக்சர்.

வயிற்றுக் கடுப்புக்கு அபினி கலந்த ஹ்யூலட்ஸ் மிக்சரை உபயோகியுங்கள்.

## “ஹ்யூலட்ஸ் மிக்சரை

உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து நான் நன்றாக சாப்பிட முடிகிறது.”



வி.ஜே. ஹ்யூலட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்,
86/A, லிங்கியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3

பிடாரன் எதற்காகவோ, தயங்கினன்.
''இந்திர விழாவின் எல்லா நாட்களிலும் சேர்த்து நீ எவ்வளவு சம்பாதிக்க முடியுமோ அவ்வளவு சம்பாத்தியத்தை விட அதிகமாகச் சம்பாதிக்கும் வாய்ப்பைச் சில நாழிகைகளிலேயே உனக்கு நான் ஏற்படுத்தித் தர முடியும்.''

பாம்புகளைச் சிறைப்படுத்திய தைரியசாலி ஆசைக்குச் சிறைப்பட்டான். நச்சுப் பாம்புகளே தன்னைத் தீண்டாமல் பிடித்தவன் ஆசைப் பாம்புக்குக் கடிபட்டான். 'ஐயையோ! தேரிலா? பாம்புப் பேழைகளும் இவனும் வந்தால் நாம் எப்படிப் போவது?' என்று பதறிய பெருநிதிச்செல்வரின் காதருகே சென்று மந்திரம் போட்டது போல ஏதோ சொன்னார் நகை வேழம்பர். அவ்வளவுதான். பெருநிதிச் செல்வர் முகம் மலரச் சம்மதம் தந்துவிட்டார். பாம்புப் பிடாரன் பேழைகளும் தானுமாகத் தேரின் பின் பக்கத்துச் சட்டத்தில் ஏறிப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தான். பேழைகளைக் கவனமாகப் பற்றிக் கொள்ளும்படி அவனை எச்சரித்து விட்டு நகைவேழம்பரும் பெருநிதிச் செல்வரும் தங்கள் இடங்களில் ஏறிக்கொண்டனர். தேர் பட்டினப்பாக்கத்துக்கு விரைந்தது.

மாளிகைக்குத் திரும்பியதும் பெருநிதிச் செல்வரை மட்டும் உறங்குவதற்கு அனுப்பி விட்டுப் பிடாரனை அழைத்துக் கொண்டு தம் பகுதிக்குச் சென்ற நகைவேழம்பர் பணியாட்களை எழுப்பி மாளிகைத் தோட்டத்திலிருந்தும் வெளியேயுள்ள பூங்காக்களிலிருந்தும் குவியல் குவியலாகப் பூக்களைக் கொண்டு வரச் செய்தார். பூக்கள் குவிந்தன. பொழுதும் புலர்ந்தது.

## 9- தொழுத கையுள்ளும் ...

பட்டினப்பாக்கத்துப் பெரு மாளிகையில் பூக்கள் குவிந்து பொழுது விரிந்து கொண்டிருந்த இதே வேளையில்தான் இளங்குமரன் ஆலமுற்றத்துக் கடல் ஓரமாக நீலநாக மறவருடன் நடந்து கொண்டிருந்தான்: அங்கே நெய்தல் நிலத்துக் கழிமுகங்களில் மலர்ந்திருந்த தாழம்பூக்களின் மணத்தை நுகர்ந்த போது, 'இந்தத் தாழம்பூக்களின் மணத்தையே நான் அடிக்கடி உணர நேர்கிறதே' என்று நினைத்துத் தனக்குத் தானே மெல்லச் சிரித்துக் கொண்டான் அவன். உலகத்துப் பூக்களிலும் அவற்றின் மணத்திலும் நாங்கூர் அடிகள் தெய்வத்தையே பார்க்கிறார். நானோ 'இவ்வளவு நாள் கற்ற பின்னும் பழைய மனிதர்களையும், பழைய உறவுகளையும் பழைய நினைவுகளையும் தவிர வேறெதையும் இவற்றின் மணத்தில் காண முடியவில்லையே' என்று எண்ணியபோது இளங்குமரனுக்கு ஏக்கமாகத்தான் இருந்தது. வாசனையின் வழியே மனம் போகக்கூடாதென்பதைத்தான் அவன் கற்றிருந்த சமய தத்துவங்கள் அவனுக்குச் சொல்லிக் கொடுத்திருந்தன. அவனோ கால்கள் நடந்த வழி மனமும், மனம் நடந்த வழியே கால்களும் செல்லாமல் இரண்டும் வேறு வேறு வழிகளுக்கு முரண்டிக் கொண்டு போகிற வேதனையை இன்று அதிகாலையில் உணர்ந்தான். நீராடித் தூய்மை பெற்றுத் திரும்பிய போது மனமும் கால்களும் ஒரே வழியில் நடக்கும் ஒருமை நிலையோடு அவன் நீலநாக மறவருடன் படைக்கலச் சாலைக்குள் நுழைந்தான். புனலாடிக் குளிர்ந்த உடம்பினாலும் தியானத்தினாலும் மனம் தூய நினைவுகளில் மூழ்கியிருந்தது. பழைய கலக்கம் இல்லை.

அவர்களை எதிர்பார்த்து அப்போது ஓவியன் மணிமார்பனும், அவன் மனைவியும் படைக்கலச் சாலையில் வந்து காத்துக் கொண்டிருந்தார்கள். நீலநாக மறவர் மணிமார்பனைக் கண்டதுமே அடையாளம் புரிந்து கொண்டார்.

''பாண்டிய நாட்டுப் பிள்ளையாண்டானா? எப்பொழுது வந்தாய்?'' என்று அன்போடு அவனை விசாரித்தார் நீலநாகமறவர். மனைவியோடு இந்திர விழாக் காண வந்திருப்பதை அவரிடம் கூறினன் மணிமார்பன். ''எங்கே தங்கியிருக்கிறாய் தம்பி?'' என்று மேலும் கேட்டார் அவர். இலவந்திகைச் சோலையின் மதிற்புறத்தில் உள்ள ஓர் அறக் கோட்டத்தில் தங்கியிருப்பதாகக் கூறினான் அவன். அதைக் கேட்டதும் அவர் முகம் கலக்கத்தைக் காட்டியது.

''இந்த ஊரில் உனக்குப் பழைய பகைவர்கள் இருக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டிருந்தும் நீ இப்படி யெல்லாம் பொது இடங்களில் தங்கலாமா? முன்பாவது நீ தனிக் கட்டை. இப்போது உன்னைப் பற்றிக் கவலைப்படவும் நீ கவலைப்படவும் இந்தப் பெண்ணும் இருக்கிறாளே. முதலிலேயே இங்கு வந்து தங்கியிருக்கக் கூடாதோ? இப்போதும் ஒன்றும் கெட்டு விடவில்லை. இலவந்திகைச் சோலைக்குப் போய் உங்கள் பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டு இன்று மாலைக்குள் இருவரும் இங்கே வந்து விடுங்கள். இந்திர

விழா முடிந்து ஊர் திரும்புகிற வரை இங்கேயே தங்கலாம்'' என்றார் நீலநாக மறவர். அப்படியே செய்வதாக இணங்கினான் மணிமார்பன். சிறிது நேரம் அவர்களோடு உரையாடிக்கொண்டிருந்துவிட்டு இளங்குமரனும், நீலநாகரும் அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பினர்.

செய்ய வேண்டிய வழிபாடுகளையும் நியமங்களையும் முடித்துக் கொண்டு அன்று காலையிலேயே சமயவாதத்துக்குப் புறப்பட்டு விட்டான் இளங்குமரன். புறப்படும்போது நீலநாகர் எச்சரித்தார்:- ''நேற்றைய அநுபவத்தை மறந்து விடாதே. கவனமாக நடந்து கொள். ஒவ்வொரு விநாடியும் நான் உனக்குத் துணையிருப்பதென்பது இயலாத காரியம். நான் ஒரு விநாடி சோர்ந்திருந்தால் அந்த ஒரு விநாடியைப் பயன்படுத்திக் கொண்டு உன் பகைவர்கள் உனக்கு எவ்வளவோ செய்து விடலாம்.''

இதைக் கேட்டு இளங்குமரன் மெல்லச் சிரித்தான். ''அறிவுடையவனுக்கு அந்த அறிவே பெரிய அரண் என்று நீங்கள்தானே நேற்றுக் கூறினீர்கள்! அதை நம்பித்தான் தனியே போகிறேன்'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான். இன்று நடந்தே புறப்பட்டுச் செல்வதென்று தனக்குள் நினைத்திருந்தபடியே செய்தான் அவன்.

வேடிக்கை, விளையாடல், கலை, களிப்பு என்று இந்திர விழாக் கூட்டம் பலவிதமான நுகர்ச்சிகளில் சிதறியிருந்தாலும் அறிவில் இன்பம் காணுகிற கூட்டம் நாளங்காடியின் ஒரு மூலையிலிருந்த அந்த அறிவுப் போர்க்களத்தில் கூடியிருந்தது. இந்திர விழாவின் இரண்டாவது நாட் காலையாகிய அன்று பூத சதுக்கத்தில் படையலிடுவோர், பாடுபவர் கூட்டம் மிகுதியாயிருந்தது. அதனால் நேரம் காலையாயினும் சமயவாதிகளைச் சுற்றிலும்கூடக் கூட்டம் அதிகமாயிருந்தது. இளங்குமரன் அந்தக் கூட்டத்தில் நுழைந்து தன் கொடியை ஊன்றிய போது கூடியிருந்தவர்களிடம் பெரிதும் ஆர்வம் பிறந்தது. அவர்களிற் பலர் முதல் நாள் அவனுடைய வாதத்தில் திறமை கண்டதின் காரணமாக இன்றும் அதைக் காணலாம் என்னும் ஆவலால் வந்தவர்கள். கூட்டத்தில் ஒரு பகுதியினர் இளங்குமரன் உள்ளே நுழைந்து கொடி ஊன்றியதும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து அவனை வரவேற்றதிலிருந்தே அந்த ஆர்வம் புலப்பட்டது. அன்றைக்கு இளங்குமரனுக்கு வாய்த்த முதல் எதிரி ஒரு சாங்கியனாக அமைந்தான். தத்துவங்களில் மிகவும் வல்லவனாகிய அந்தச் சாங்கியன் மிடுக்காக நடந்து சிரித்துக் கொண்டே இளங்குமரனுக்கு எதிரில் வந்து தன்கொடியை நட்டான். அவனுடைய சிரிப்பு-'நீ என் தத்துவங்களுக்கு முன்னால் வெறும் சிறு பிள்ளை. உன்னை வெல்வதற்கென்று எனக்குத் தனி முயற்சி எதுவும் வேண்டியதேயில்லை' என்று இளங்குமரனை எள்ளி நகையாடுகிற விதத்தில் தெரிந்தது. சாங்கியன் கூர்மையான அம்பைக் குறி வைத்து எய்வது போல் தன் முதல் கேள்வியைத் தொடுத்தான்:- ''உலகம் உள்ள பொருளாகச் சொல்லப்பட்டது. தானே தோன்றித் தானே அழியப் போகிற உலகத்துக்கு முதற் காரணமே போதுமே? நிமித்த காரணமாக ஒரு செய்பவன் எதற்கு?''-இந்தக் கேள்வியும் அவன் தோற்றத்தில் இருந்தாற் போலவே மிடுக்கு இருந்தது. இளங்குமரன் தெளிவான முறையில் அவனுக்கு மறுமொழி தந்தான்: ''செய்வோர் இல்லாமல் வினை செய்யப்படுவது முடியுமோ? செய்பவன் செய்து உண்டாக்கிய பின்பு தானே பொருள் உள்ளதாகும்? உத்தேசம் பண்ணிக் கொள்ளாமல் இலக்கணம் பண்ணுவது தருக்கத்தில் குற்றமல்லவா? நான் 'மலடியீன்ற மகன்' என்பது போல உத்தேசமும் இல்லாமல் இலக்கணமும் இல்லாமல் வீணான வார்த்தைகளைச் சொல்லுகிறீர்களே? உள்ளதை உள்ளதென்று உணரும் அறிவுக்கு உபலத்தி என்று பெயர். இல்லதை இல்லதென்று உணரும் அறிவுக்கு அநுபலத்தி என்று பெயர். கண் முன் தெரிகிற உலகத்தை உபலத்தியாக உணரும் நாம் அதற்குச் செய்தவன் உண்டு என உணருவதே நியாயம். செய்யப்பட்ட பொருள் உபலத்தியாகும்போது செய்தவன் மட்டும் அநுபலத்தியாவதுஎப்படிப்பொருந்தும்? பொருந்துமானால் 'வாக்கிய பேதம்' என்னும் குற்றமுடைய பேச்சை நீங்கள் பேசுகிறீர்கள். கவிகள் அலங்காரத்துக்காக வாக்கிய பேதம் செய்யலாம். தருக்கத்தில் சிறு சொல்லுக்கும் மதிப்பு அதிகம். நெருப்புக் காய்வது போல் நெருங்காமலும் விலகாமலும் சொல்லை



அளவாகத் தொடுத்து வாதிட வேண்டும். ஒளியைக் கண்டு உணர்வது உபலத்தி. இருளைக் கண்டு உணர்வது அநுபலத்தி. ஆலம்பழத்தின் அளவுள்ள சிறு நெருப்பைக் கொண்டு ஏழு எட்டு வேள்விக் குழிகளில் பெரு நெருப்பை வளர்க்க முடிவதுபோல் தருக்கத்தில் சிறுசொல்லுக்கும் பெரும்பயன் விளைய வேண்டும். சிறியதில் இருந்து பெரியவற்றைப் பயனுக விளைத்துக் காட்ட வேண்டும்.''—

இதைக் கேட்டுச் சாங்கியன் சிறிதும் அயரவில்லை. தனது அடுத்த கேள்வியைத் தொடுத்தான். "நீர் தன் மேல் உருண்டு அலைந்து ஆடினும் தான் பற்றின்றித் தாங்கி இருக்கும் தாமரை இலைபோல் புத்தியே ஐம்பொறிகள் வழியாக நுகர்ச்சியை ஏற்றுக் கொள்ளும். புத்திக்கும் அப்பால் வேறொருவன் எதற்கு?''

''உமது கேள்வி நன்முயிருக்கிறது. அழகாகப் பதில் சொல்ல முடியாதவர்கள் கேள்விகளையாவது அழகாகக் கேட்க முடியும். சாங்









கிவராக இருந்து நீர் அறிந்தது அழ காகக் கேள்வி கேட்கும் அறிவு ஒன்று தான் போலிருக்கிறது. ஆன்மா ஒன் றித்து நின்று காட்டாவிடின் புத்தியும் ஐம்பொறிகளும் நுகரமாட்டா என் பதை நீர் தெரிந்து கொள்ளவில்லையா? உமக்குக் கண்கள் இருக்கின்றன. அவற் றுக்குப் பார்க்கும் ஆற்றலும் இருக்கி றது. ஆயினும் செறிந்து மண்டிய இரு ளில் உம்முடைய கண்களால் ஏன் எதை யும் பார்க்க முடிவதில்லை? கண்களும், பார்க்கும் ஆற்றலும் தவிர-உம்முடைய விழிகளையும்-காணும் ஆற்றலையும் நீர் காண வேண்டிய பொருளோடு ஒன்றிப் பதற்கு அவற்றின் வேறுபட்ட ஒளியும் வேண்டுமா, இல்லையா?''

மேலே என்ன கேட்பதென்று தயங் கிய சாங்கியன் விழித்தான். ஆனால் இன்னும் ஏதோ கேட்பதற்கு அவனு டைய உதடுகள் மட்டும் துடித்தன. அதற்குள் கூட்டத்தில் இளங்குமரனைப் புகழும் வெற்றிக் குரல்கள் முழங்கத் தொடங்கி விட்டன. கொடியும், மிடுக் கான பார்வையோடு கூடிய முகமும் தாழத் திரும்பி நடந்தான் சாங்கியன்.

அப்போது கூட்டத்தில் ஏதோ பர பரப்பு ஏற்பட்டது. யாரோ வழி விலக் கிக் கொண்டு உள்ளே வருவதற்கு முயல் வது போலத் தோன்றியது. இளங் குமரன் பார்த்தான். இரண்டு மூன்று பெண்களும் அவர்களுக்குப் பின்னால் பெரிய கூடையைச் சுமந்து கொண்டு யவனப் பணியாளன் ஒருவனும் உள்ளே வந்து கொண்டிருந்தனர். அருகில் வந் ததும் அவர்கள் யாரென அவனுக்குத் தெரிந்தது. பட்டினப்பாக்கத்துப் பெரு மாளிகைப் பெண்கள். ஒரே விதமான கோலத்தில் விளங்கிய இருவரில் ஒருத்தி சுரமஞ்சரியாகவும், இன்னொருத்தி வான வல்லியாகவும் இருக்க வேண்டும் என்று அவன் அநுமானித்தான். மூன்றாவதாகக் கூட்டிவந்தவள் தோழி வசந்த மாலை. அவர்களுடைய அழகு, அலங்கார ஒளியினாலும், அவர்கள் பரவ விட்ட மணத்தினாலும்-கூட்டமே அவர்கள் பக் கம் கவரப்பட்டது. இளங்குமரன் மட்டும் சலனமின்றி நின்றான். மூன்று பெண்க ளும் அவனுக்கு மிக அருகில் வந்து தலை தாழ்த்தி அவனை வணங்கினார்கள். மூவ ரிலும் முதலில் நின்ற பெண் வணங்கிய படியே நிமிர்ந்து 'என்னைத் தெரியவில் லையா? நான்தான் சுரமஞ்சரி' — என்று மெல்லச் சொன்னாள். சலனமின்றி நின்ற இளங்குமரன், ''நேற்று நீங்கள் வான வல்லியாக இருந்தது மெய்யா? இன்று நீங்கள் சுரமஞ்சரியாக இருப்பது மெய்யா? இரண்டில் எது மெய்?'' என்று பதறாமல் கேட்டான். (தொடரும்)

# உயிருக்கு

'தென்னை மரக் கிளை மீதில் அங்கோர் செல்வப் பைங்கிளி தேசிட்டுப் பாய்ந்து' விளையாடிக் கொண்டிருந்தது. இந்த விளையாட்டுக்கு நடுவே காலைவொளி பாய்ந்து, அழகின் கட்டியங்கள் கூறிய வண்ணமிருந்தது. ஒளியோடு புதுமையான ஓர் ஒலியும் சேர்ந்து வரத்தொடங்கவே ஜன்னலுக்கு வெளியே ஆவலுடன் நோக்கினேன்.

கூப்பிடு தூரத்திலிருந்து கொண்டு நம்மைக் கூப்பிடுவது போலிருக்க ஆற்றில், புது வெள்ளம் சுழித்தோடிக்கொண்டிருந்த 'சோ' வென்ற ஒலி.

சீரும் தாள லயமும் ஆற்றில் குதித்தோடி வரும் புது நீர்ச் சுழலுக்கு அமைவதுபோல் வேறெந்த இசைக்கும் அமைய முடியாதோ? நேற்று அங்கே சாரைப் பாம்புகள் போல் இரு ஓரங்களில் மட்டும் தண்ணீர் ஓட, எல்லை. கர ஆறு முழுதும் வெறும் மணல் மட்டும்தான் ஓடிக் கொண்டிருந்தது. இன்றோ கரைகளில் நாணல்களும் தாழ்ந்த தம் கழுத்துகள் நிமிர்ந்து ஒயிலாய்ப் புது வெள்ளத்தைப் பார்த்து அசையாமல் நின்றிருந்தன.

நானும் அசையாமல் பார்த்துக் கொண்டிருந்தேன் சாளரத்தின் வழியே.

அவள்—எனது மனைவி—முதல் பிரசவத்துக்கு ஊருக்குப் போயிருந்தாள். சிறிய விஷயங்களில் பெரிய அதிசயத்தைக் காணும் குழந்தை மனசு அவளுக்கு. இன்று இப்போது என்னருகில் நின்றுகொண்டு, இரு கரைகளின் கன்னங்களும் குழியச் சென்று கொண்டிருக்கும் இந்த நீர்ப்பரப்பைப் பார்த்தாளானால், அதிசயத்தில் அவள் புரியும் புன்னகையில் அவளது அழகிய கன்னங்களும் குழிந்துவிடும்.

திடீரென்று ஜன்னலுக்கு அருகில் வீதியில் இரு கீச்சுக் குரல்கள்: சிறுவர்கள் இரண்டு பேர்கள் பேசிக் கொண்டார்கள்.

முதல் சிறுவன் ரொம்பத் துடிப்புள்ளவன் போலிருக்கிறது. அவன் அடுத்தவனைப் பார்த்துச் 'சவால்' விட்டான். ''பெரிய வெள்ளமானாலும் மீனைப் போல் நீந்துவேன்னு அன்னிக்குப் பெருமை அடிச்சியே! எங்கே, இப்போ இந்த வெள்ளத்தில் நீந்திக் காட்டு, பார்ப்போம்.''

அடுத்தவன் பெரிய குறும்புக்காரன். ''டேய், யாரைப் பார்த்து இந்த வார்த்தை சொன்னே? என்னைக் குட்டையில் கூட நீந்தத் தெரியாத பயல் நீ. . ''

முதலாமவன் விடவில்லை. ''எனக்குத்தான் நீந்தத் தெரியாது. ஒத்துக்கிறேன். நீதான் குட்டிச் சுறாவாச்சே? இப்போ நீந்திக் காட்டேன், கப்பல் மாதிரி...''

இரண்டாமவன் உறுமினான்: ''அதோ அந்தக் கூனல் தென்னை மேல் ஏறிக் குதிப்பேண்டா. ஆற்றில் இவரு நீந்தத் தெரிந்த சிங்கமாக்கும்! நீயும் தயாரா, சொல்லு? உன்னையும் ஆற்று வெள்ளத்தில் தூக்கிப் போட்டு விட்டு உடனே காப்பாற்றவும் செய்யறேன்! டேய், பயந்தாங்கொள்ளி! எங்கே ஓடறே? நீ வேடிக்கை பாரு போதும்! நீந்தத் தெரியாத பயலுக்கு வாய்ச் சவடால் வாய்க்காத் தண்ணீர் மாதிரி நீளுது!'' — அந்தப் பையன் கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் என் காதில் துல்லியமாய் விழுந்தன. அதிலும் ஜன்னல் பக்கம் திரும்பி என்னை நோக்கிக் கொண்டே ''நீங்களே பார்த்துக்குங்க, சார்! எங்கே உருப்படப் போறான் தண்ணியிலே நீந்தத் தெரியாத இந்தப் பயல்?'' என்று முடித்து விட்டு, ஆற்று நீரில் பாய, கூனல் தென்னையை நோக்கி விரைந்தான் அந்தச் சிறுவன்.

என் உள்ளத்தை அவன் வார்த்தைகள் உசுப்பின. அவ்வார்த்தைகள் என்னை நோக்கியும் தூக்கி எறியப் பெற்றன போலிருந்தது. மனிதன் தன்னை எத்துணை உயர்வாக நினைத்துக் கொண்டாலும் – உயர்வு படுத்திக் கொண்டாலும் வாழ்க்கையில் அகண்ட சக்தி வெள்ளத்திலே வெற்றி பெற்றதாக நினைத்துள்ள ஞாயிறாகிய மனிதனும் ஒரு குமிழிதான். கூப்பிடு தூரத்தில் ஓடும் இந்த ஆற்று வெள்ளத்துக்கு நானும்கூட ஒரு குமிழிதான்.

'சக்தி வெள்ளத்திலே ஞாயிறு ஒரு குமிழியாகும். . ' பாரதியார் எத்தனை பொருத்தமாகச் சொல்லியிருக்கிறார்!

ஜன்னல் கம்பிகளைப் பிடித்து நின்றுகொண்டிருந்த நான் என் மனச் சாளரத்தின் கதவு திறக்கக் கண்டேன். இப்போது நான் ஜன்னலருகில் நிற்கவில்லை. பரந்த நீர்ப் பரப்பில்—என் மனைவியுடன்—நிற்கிறேன். இரண்டாண்டுகளுக்கு முன்பு நடந்ததன் நினைவு 'செய்கையாய், ஊக்கமாய், சித்தமாய், அறிவாய்' மறுபடியும் இப்போது என் புலன்களில் நிறைந்து என்னை மெய்மறக்கச் செய்கிறது.....

நாட்டியமாடிக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தது காவிரியின் தெள்ளிய நீர்: பெரிய வெள்ளமில்லா விட்டாலும் சீரான ஆழத்தைத் தனக்குள் புதைத்துக் கொண்டு புன்னகையில் ஓடிக் கொண்டிருந்தது நீர்;



# மேல்

க. பஞ்சாபகேசன்



மூன்றாவது படியில் காலை வைக்கும்போதே என் இடுப்பு அளவுக்கு வந்து விட்டது தண்ணீர். நீருக்குள் என் கால்கள் இரண்டும் நடுங்கின.

எனது வலது கை 'பாலன்ஸ்' ஆட்டம் ஆட, இடது கை அவ ளுடைய — என் மனைவியுடைய - வலது கையை வேறே பற்றி யிருந்தது. அவள் இரண்டாவது படியில் நின்று கொண் டிருந்தாள். அதற்குள் அவளது பட்டுக் கால்களைச் சுற்றிய வாயில் புடவை நனைந்து போயிருந்தது.

"எனக்குப் பயமாக இருக்கிறது" என்று கூறினாள் அவள்.

"என்ன பயம்? நானிருக்கிறேன்" என் றேன். எனக்கும் உள்ளூறப் பயம்தான். சிறு வயதில் என் கிராமத்தில் நதியில் நீந்திப் பழக எத்தனையோ சந்தர்ப்பம் நேரிட்டிருந்த போதிலும் அதையெல்லாம் அசட்டை செய் திருந்தவன் நான். ஆற்றில் தென்னை மரங் களிலிருந்து 'தொபுகடீ' றென்று என் வயதுக் கொத்த மற்ற சிறுரெல்லாம் நீந்தி விளை யாடிக் கொண்டிருந்தபோது, நான் வீட்டில் கிணற்றடியில் குளித்து விட்டு அறைக்குள் ஒரு புத்தகப் புழுவாய் நெளிந்து விட்டேன்.

இன்று இப்போது என் கை மனைவியின் கைக்கு அபயம் கொடுத்தாலும், மனம் எனக்கோ அவளுக்கோ அபயம் கொடுக்க முடியவில்லை. இந்த அழகில் காவிரியில் குளிக்க வேண்டுமென்று கொள்ளை ஆசை வேறே அவளுக்கு.

ஏதாவது தன் ஆசையை என்னிடம் சொல்லவேண்டுமானால் அவளுடைய கன்னம் இரண்டும் சிவக்கும். அது எனக்குக் குறிப்பு. அக்குறிப்பை நான் என்றும் மறுத்ததில்லை. திருச்சிக்கு மாற்றலாகி வந்து இரண்டு மாதங் களாகியும் அவளுக்குக் காவிரியில் குளிக்காமல் குளித்த மாதிரியே இல்லையாம். எங்கே யிருந்தெல்லாமோ புண்ணியக் காவிரி யில் நீராட வருகிறார்களாம்.

இன்று காலையில் கன்னச் சிவப்பு அவளது அகக்குறிப்பைக் காட்டியது. விளைவு இதோ. நான் மார்பளவு நாலாவது படியிலும், அவள் தன் இடுப்பளவு நவழ்ந்தோடிய நீரிலுமாக நிற்கிறோம். இதய மென்கிற 'ஸ்பீடாமீட்ட' ரில் முள்ளின் முன்னேற்றம் ஏறிக் கொண்டே இருந்தது.

"முங்கலாமா?" என்று கேட்டாள்.

"கொஞ்சம் இரு. சுற்றியும் யாராவது இருக்கிறார்களா, பார்க்கிறேன்" என்றேன்.

"ஏன் பயமா?" என்றாள் சிரித்தபடியே.

"பயமில்லை. குளிர்கிறதே. முங்க வேண் டுமா என்று பார்த்தேன்" என்றேன்.

"சரிதான். காவிரிக்கு வந்து காலை மட்டும் நனைத்துக் கொண்டு போவதா? யாராவது பார்த்தால் சிரிக்க மாட்டார்களா?" என்று கூறினான்.

"எப்படி மூழ்குவது?"

"நீங்கள் கிராமத்து மடியில் வளர்ந்த பிள்ளை என்று பீற்றிக் கொள்வீர்களே?"

"ஆமாம். அதற்கென்ன இப்போது?"

"உங்கள் கிராமத்திலும் காவேரி ஓடுகிறதோ?"

"என் இப்போதுமதான் ஓடுகிறது. நாளைக்கும் ஓடும். மறு வருஷமும் ஓடும். மறு யுகமும்..."

"கண்டிப்பாய் ஓடும்! நல்ல பேச்சு இது! சரி மூழ்கலாமா? கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறேன். பயப்படாதீர்கள்" என்றான் அவன் கேலியாக.

இதற்குள் முதல் படியின் படித்துறையை ஒட்டியிருந்த மேட்டுப் பகுதியிலிருந்து 'கொல்'லென்ற சிரிப்பொலி கேட்டதும் இருவரும் நிமிர்ந்து பார்த்தோம்.

'சரே'லென்று என் மனைவியைப் பற்றியிருந்த கையை விட்டேன் நான்.

"டேய் பழி! நீயா?" என்றேன், மேட்டில் இருந்து கொண்டு சிரித்த பேர்வழியைப் பார்த்து.

"டேய், இரட்டைப் பழி! நீ இன்னுமா நீந்தப் பழக வில்லை?" என்றான் அவன். என் பாலிய நண்பன் சுந்தரமுத்து கிராமத்தில் 'ஏ ஒன்' நீச்சல்காரன் என்று பெயர் வாங்கியிருந்தவன். இப்போது ஏதாவது 'ஸ்விம்மிங் பூலு'க்குக் காரியதரிசியாக இருக்கிறானோ என்னவோ?

மேட்டிலிருந்து அப்படியே ஆற்றில் குதிக்கத் தயாராக இருந்தான் சுந்தரமுத்து.

அவன் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல், "நீ எங்கேடா இங்கே இருக்கிறாய்? பத்து வருஷங்களாச்சே உன்னைப் பார்த்து? பரீட்சையில் உனக்குக் காப்பியடிக்கக் காட்டவில்லை என்பதற்காக என்னை ஆற்றில் தள்ளப் பார்த்தவனாயிற்றே நீ!" என்றேன் நான்.

"தள்ளியிருந்தாலும் உன்னை மறுபடியும் காப்பாற்றி விருப்பேனடா மண்டு ... சரி, உன் இல்லாளைக் கவனி" என்று சுந்தரமுத்து சொல்லி முடிக்கு முன்னால் நான் திக்பிரமையில் அதிர்ச்சியுறும்படி, நொடிப் பொழுதில் நடந்து விட்டது அந்தச் சம்பவம்.

இடுப்பளவு தண்ணீரில் நின்றுகொண்டிருந்த என் மனைவியின் பட்டுப் பாதங்களை ஒருகணத்தில் பத்துப் பதினைந்து மீன்குஞ்சுகள் முத்தமிட்டு விட்டன போலும்.

"ஐயையோ! மீன் கடிக்கிறது...." என்று நீரில் கால்களைச் சலசலத்த அவள் வழுக்கி விழுந்தாள்; நீர்ச் சுழலில் மளமளவென்று உருண்டும் விட்டாள்.

அவளைக் காப்பாற்ற முடியாதவனல்ல, நான். 'ஆவியினுள்ளும் அறிவினிடையிலும் அன்பை' வளர்த்தவன்தான் அவளுக்காக. அக்கினிக் கெதிரே சாட்சி கொடுத்தபோது, அவளுக்காக உயிரையும் தியாகம் செய்யத் துணிவேன் என்றுதான் சத்திய உறுதி சொல்லியிருந்தேன். இப்போது அவளை நான் காப்பாற்ற வேண்டுமானால் உயிரைத்தான் பணயப் பொருளாக்க வேண்டும். ஓர் உயிரல்ல; இரண்டு உயிர்கள். எனக்குத்தான் நீந்தத் தெரியாதே.

அவளை உயிரினும் மேம்பட நேசிப்பவன் நான். பெண் பார்க்கப் போனபோது அவள் அழகில் மட்டும் மயங்கினேன்; கைப்பிடித்து, ஸ்பரிசத்தில் ஐக்கியமாகிய போது, என் ஆத்மாவோடு அவளை ஐக்கியப்படுத்திக்கொண்டு தான் விட்டேன்.

இப்போது நீர்ப்பரப்பில் அமிழ்ந்து கொண்டிருப்பவளையும் அவளது கணவனான என்னையும் தடுத்துக் கொண்டிருப்பது சுழன்றோடும் நதியோ, என் உயிராசையோ அல்ல.

அவள் ஆற்றில் நழுவி விழுந்தபோதே மேட்டிலிருந்து சீறிக் குரல் கொடுத்தான் சுந்தரமுத்து.

"டேய், பழி, முட்டாள்! தண்ணீரில் நீ குதிக்காதே! உனக்கு நீந்தத் தெரியாது.... இதோ வருகிறேன்!" என்று குரல் கொடுத்து விட்டு அம்பு போல் தண்ணீரில் பாய்ந்தான் சுந்தரமுத்து.

ஆற்றுத் தண்ணீரில் நின்று கொண்டிருந்த எனக்கு வியர்த்தது. இதயம் துவாலையாய் மாறித் தன்னைத்தானே பிழிந்து கொண்டு துயரக் கண்ணீர் வடிக்க ஆரம்பித்தது.

மெதுவாக மேல் பாறையை நோக்கி விரைந்தேன். அந்தச் சில விநாடிகளுக்குள் எனது உட்புலன் அரங்கில் அந்த இக்கட்டான வேளையிலும் சென்ற காலக் காட்சிகள் சுருங்கித் தெரிந்தன.

பள்ளி வகுப்பு அறை. ஆசிரியரின் குரல்:

"இங்கே நீந்தத் தெரியாத மாணவன் யார்?"

நான் மட்டுமே எழுந்து நிற்கிறேன். வகுப்பில் ஆற்று நீர் மாதிரி சலசலப்பு. மற்ற மாணவர்களின் சிரிப்பொலி.

ஆசிரியர் இரைகிறார்: "சட், எதற்காகச் சிரிப்பு? வகுப்பில் பாடங்களில் முதல் மாணவனாகத் திகழ்பவனுக்கு இப்படியா மரியாதை செலுத்துவது? அவன் வாழ்க்கை வெள்ளத்தில் சரியாக நீந்திப் போய் விடுவான். நீங்களெல்லாம் வெறும் ஆற்று வெள்ளத்தில்தான் நீந்திக் கொண்டிருக்க வேண்டும்."

பிறகு ஆசிரியர் என்னைப் பார்த்து, "இருந்தாலும் ரத்தினம், நம் ஊரில் இல்லாத ஆறு குளமா? நீந்தப் பழகிக் கொண்டால் என்ன?" என்கிறார்.

நான் அப்போது தலையை ஆட்டுகிறேன். என்றாலும் எந்தக் குளம் குட்டையு மல்லவா பயங்கரமான சமுத்திரங்களாகத் தெரிந்து கொண்டிருக்கின்றன எனக்கு!

மாலை வேளை. மறு நாள் பரீட்சைக்கு நிம்மதியாகப் படிக்கலாம் என்று ஆற்றங்கரைப் பிள்ளையார் கோயிலுக்கு வந்திருக்கிறேன்.

நீச்சல் மன்னன் சுந்தரமுத்து அங்கே வந்து என்னை வளைத்து விடுகிறான்.

"இப்போது என்ன சொல்கிறாய்?"

"என்னது..." என்று 'திருதிரு'வென்று விழிக்கிறேன்.

"டேய் ரத்தினம்! நாளைப் பரீட்சையிலாவது உன்னருகில் உட்காரப் போகும் என்னைக் கவனித்துக் கொள்வாயா, மாட்டாயா?"

"முடியாதடா......அகப்பட்டுக் கொண்டால் எனக்கும் சைபர் மார்க் விழுந்துவிடும்" என்று கூறும் என்னை அலக்காகத் தூக்க வந்த



# குழந்தைகள் எல்லோரும் விரும்புவது ப்ரௌன் அன்டு போல்ஸனில் தயாரித்த ப்ளாமாஞ்ச்



## ப்ரௌன் அன்டு போல்ஸன் பிளேவர்ட் கார்ன் ப்ளவர் வாய்க்கு ருசியான ஒரு சிறந்த பதார்த்தம்

ப்ரௌன் அன்டு போல்ஸன் ப்ளேவர்ட் கார்ன் ப்ளவரினால் இதைத் தயாரிக்கும்போது எப்பொழுதுமே மிகச் சிறந்த பதார்த்தமாகிறது. ஏனென்றால் ப்ரௌன் அன்ட் போல்ஸனின் கார்ன் ப்ளவர் மிருதுவாக, சரியான அளவுக்குக் கலங்கக்கூடியது. ஒருக்காலும் கட்டி பிடிப்பதில்லை. மேலும் இது சுவை மிகுந்த 5 வித வாசனைகளில் கிடைக்கின்றது. வனில்லா, ராஸ்பெரி, கேரியல், ஸ்ட்ருபெரி, மற்றும் பைனாபின் வாசனைகளில் கிடைக்கின்றன. ப்ரௌன் அன்டு போல்ஸனின் மற்ற சாதனங்கள் என்னவென்றால் – பேட்டன்ட் கார்ன் ப்ளவர், ரெய்ஸி, வெரய்டி கஸ்டர்ட் மற்றும் கஸ்டர்ட் பவுடர்.




ப்ரௌன் அன்டு போல்ஸன் பிளேவர்ட் கார்ன் ப்ளவர்

கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) ப்ரைவேட் லிட்.



**இலவசம்:** இங்கிலீஷ், ஹிந்தி, தமிழ், தெலுங்கு, குஜராத்தி, மலையாளம், வங்காளம், மராத்தி, அல்லது உருது பாஷைகளில் பிரசுரிக்கப்பட்ட அபூர்வமான சமையல் புத்தகம் இலவசமாக வேண்டுவோர் இங்குள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்பவும். (வேண்டாத பாஷையை அடித்துவிடவும்).

தபால் செலவிற்காக 25 ந. பைசா விலையுள்ள தபால் ஸ்டாம்பு தான் இத்துடன் அனுப்புகிறேன்.

ஸ்ரீ/ஸ்ரீமதி/குமாரி ..............................

..............................

விலாசம் ..............................

டிப்பார்ட்மெண்ட் நம்பர்: KLK 6

கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.

த. பெ. நி. 994, பம்பாய்—1.

இந்த இலவச அளிப்பு இந்தியாவிற்கு மாத்திரம்தான்.

தென் இந்தியாவுக்கு ஏஜன்டுகள்: பாரி அண்டு கோ. லிட்.

வளைப் பிள்ளையார் கோயிலில் 'டண்' என்ற மணியொலி தடுத்து நிறுத்துகிறது. யாரோ பிள்ளையாருக்குத் தேங்காய் உடைக்க உள்ளே வருகிறார்கள். பிழைத்தோமென்று நான் அங்கேயிருந்து நழுவி விடுகிறேன்.....

கல்லூரி தமிழ் மன்றத்தில் பெரிய விவாதம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. 'பெண்மை உயிரினும் மேம்பட்டதா?' என்பதே விவாதப் பொருள். நான் சான்றுகளை வீசிப் பிரமாதமாகப் பேசிக்கொண்டிருக்கிறேன். பெண்மையின் ஒப்பற்ற கற்பு நிலை, பெருமை பொருந்திய உயிரை விடவும் மதிப்புக்குரிய பொருளாவதால் அக் குண நலத்தைப் பெற்றிருக்கும் பெண்மை உயிரை விடவும் மேம்பட்டதுதான் என்று விவாதித்துக் கொண்டிருக்கிறேன். கடைசியில் பாரதியார் பாடல் ஒன்றையும் உரத்த குரலில் பாடுகிறேன்.

''உயிரைக் காக்கும் உயிரினைச் சேர்த்திடும்
உயிரினுக் குயிரா யின்பமாகிடும்
உயிரி னுமிந்தப் பெண்மை இனிதடா
ஊது கொம்புகள் ஆடு களிகொண்டே.''

— அன்று பலத்த ஆரவாரமும் பரிசும் எனக்குக் கிடைக்கின்றன.

ஆனால் என் நினைவு எனக்கு அப்போது திரும்பி வந்துற்ற சமயத்தில்—

என் மனைவியின் உயிர் ஆற்று வெள்ளத்தில் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. வாழ்க்கைப் பரீட்சையில் தோல்வி அடையப் பார்க்கும் எனக்கு வெற்றி தர உதவப் போயிருக்கிறான் சுந்தரமுத்து.

அதற்குள் ஆற்றங்கரையில் ஆணும் பெண்ணுமாக வரிசை வைத்து விட்டார்கள்.

''மவராசன் அந்தப் பொம்பளையை நடு ஆத்திலே பிடிச்சுட்டான். இந்தமட்டும் ஆயுள் கெட்டிதான். அதுக்கு.''

''இந்த ஐயாவோடேதான் வந்தாங்க அந்தம்மா....''

''ஏன் சாமி, உன் பொஞ்சாதியா அது?''

''சாமிக்கு நீந்தத் தெரியாது போலிருக்கிறது. நல்ல வேளை அந்த மவராசன் தெய்வமா வந்து உதவினாரு.''

ஆசிரியர் என் மனத்தில் கூறுகிறார். ''ரத்தினம், நம் ஊரில் இல்லாத ஆறு குளமா? நீந்தப் பழகிக் கொண்டால் என்ன?''

மனத்தில் கவியின் பாட்டு: ''உயிரினும் இந்தப் பெண்மை இனிதடா.''

'அவளைக் காப்பாற்றப்பட வேண்டுமே' என்ற வேதனைக்குப் பதிலாக, 'மனைவியைக் காப்பாற்றத் திராணி இல்லாது போய்விட்ட' வேதனை என்னை மீறிக் கொண்டிருந்தபோது அவளைத் தூக்கிக் கொண்டு மூச்சு இரைக்கப் படிகளில் ஏறி வந்து கரையில் அவளைக் கிடத்தினான் சுந்தரமுத்து.

''காற்றுக்கு வழி விடுங்கள்.''

''முகத்தில் விசிறுங்கள்.''

''வண்டிப் பேட்டைக்கு அழைத்துப் போவோம். சக்கரத்தில் வைத்து ராட்டினம் சுற்றினால் பிரக்ஞை வந்துவிடும்.''

இதற்குள் அவளே தூங்கி எழுந்தவள்போல் கண் விழித்து விட்டாள். தன்னைச் சுற்றிக் கண்ட கும்பல் அவளுக்கு அதிக உணர்ச்சியூட்டி நாணமுறச் செய்துவிட்டது.

''நீலா....'' என்றேன் தழுதழுத்த உணர்ச்சியுடன்.

''எனக்கொன்றுமில்லை. ஒரு வண்டி பாருங்கள். வீட்டுக்குப் போகலாம்'' என்றாள்.

சுற்றிலும் பார்த்தேன். சுந்தரமுத்துவைக் காணவில்லை. அவன் எங்கே போய் விட்டான்?

மறு நாள் என் காரியாலய விலாசத்துக்கு ஒரு கடிதம் வந்தது. என்ன ஆச்சரியம், சுந்தரமுத்து எழுதி யிருந்தான்.

''அருமை நண்பன் ரத்தினத்துக்கு,

உன்னிடம் நான் சொல்லிக் கொள்ளாமல் வந்து விட்டதற்கு வேதனைப்படுவாயோ என்னவோ? ஆனால் உன் மனைவியை உன்னால் காப்பாற்ற முடியவில்லையே என்பதற்காக மட்டும் நீ வேதனைப்பட வேண்டாம். நீ பட்டதாரி, கை நிறையச் சம்பளம் வாங்குகிறாய். நான் நாடோடி, நிலையற்ற வாழ்க்கையினன். வாழ்க்கை வெள்ளத்தின் சுழல் பத்து ஆண்டுகளுக்குப் பின் நம்மை மீண்டும் இணைத்துப் பிரித்து விட்டது.

நான் உனக்கு விடுக்கும் வேண்டுகோள் இதுவொன்றே: தயவு செய்து மனைவியைக் காப்பாற்ற முடியவில்லையே என்பதற்காக நீ நீந்தக் கற்றுக் கொள்ள வேண்டாம். ஏனென்றால், என் மாதிரி ஆபத்தில் மாற்றான் மனைவியைக் காப்பாற்ற நேரும்போது அடையும் வேதனை மிகப் பெரிது. தயவுசெய்து உன் மனைவியை — என் சகோதரியை — என்னை மன்னித்து விடச் சொல்.

உன் அருமை நண்பன் சுந்தர முத்து''

என் கண்ணில் நீர் முட்டி நின்றது. உள்ளத்தில் ஒரு தெளிவு, என் மனைவியின் உயிர் நிலையை விடவும் மேம்பட்டுத் தெரிந்த பெண்மையின் உயர்வு — இவை யாவும் என்னைச் சிலிர்க்க வைத்தன. கண்டும் காணாமற்போய் விட்ட சுந்தர முத்து என் உள்ளத்தில் அளித்துச் சென்ற பேருணர்வு தங்கிப் பிரகாசித்தது. 'உயிரினும் இந்தப் பெண்மை இனிதடா' என்ற வார்த்தைகளுக்கு இருந்த உண்மையான பொருள் உயிருக்கும் மேலான கற்பு நிலையின் சிறப்புத்தான் சுந்தரமுத்துவின் உள்ளத்தையும் எழுத்துக்களையும் ஆக்கியிருக்கின்றன.

இப்போது மீண்டும் ஜன்னலுக் கருகில் நிற்கிறேன் என்ற நினைவு எனக்கு வருகிறது. கூப்பிடு தூரத்தில் கூவல் தென்னையிலிருந்து ஆற்று வெள்ளத்தில் குதித்து நீந்துகிறான் அந்தப் பொல்லாத சிறுவன்.

உள்ளே திரும்பி மேஜை டிராயரைத் திறந்து சுந்தரமுத்துவின் கடிதத்தை எடுத்து மீண்டும் ஒரு முறை படிக்கிறேன்.

அதைப் படித்து முடிக்கு முன்பே என் கண்ணீர் வெள்ளத்தில் அது நனைந்து விடுகிறது. ஜன்னலுக்கு வெளியே வாழ்க்கை, பண்புகள் நிறைந்த வடிவமாகக் காலை வெயிலில் பளபளத்துக் கொண்டிருக்கிறது. அந்தப் பளபளப்பினூடே தென்றலில் கவியின் குரல் கேட்கிறது:

''பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா
பெண்மை வெல்கென்று கூத்திடுவோமடா
தண்மை இன்பநற் புண்ணியஞ் சேர்ந்தன
தாயின் பேரும் ஸதியென்ற நாமமும்!''

# இதோ புத்தம் புதிய

# நேஷனல் எக்கோ ரேடியோ

## மாடல் 764

விலை:
**ரூ. 280.75 மட்டுமே**
எக்ஸைஸ் ட்யூடி உள்பட; வரிகள் தனி



**இன்றே உங்கள் நேஷனல்-எக்கோ வியாபாரியிடம் இதை இயக்கிக் காண்பிக்கச் சொல்லுங்கள்!**

புத்தம் புதிய நேஷனல்-எக்கோ ரேடியோ மாடல் U-764 உங்களுக்கு இனிய இசை விருந்தை அளிக்கும். இன்றே உங்கள் நேஷனல்-எக்கோ ரேடியோ வியாபாரியிடம் சென்று இதைப் பாருங்கள் — இது உங்கள் மனதைக் கவரும்! இதன் ஒலியைக் கேளுங்கள். இவ்வளவு இனிய இசையை கேட்டதே இல்லை என்று நீங்களே சொல்வீர்கள்! இதன் விலையோ எவ்வளவு குறைவாயிருக்கிறது! எல்லாவித புதிய அம்சங்களையும் பெற்றிருக்கும் இந்த மாடலை நீங்கள் பார்த்தவுடன் வாங்குவீர்கள் என்பதற்கு சந்தேகமே இல்லை!

மாடல் U-764 ஏஸி/டிஸி செட், தங்கவர்ண வேலைப்பாடுடன் கூடிய அழகான பிளாஸ்டிக் காபினெட்; 5 வால்வுகள்; 3 பாண்டுகள்; மாடல் B-764: டிரை பாட்டரி செட், 4 வால்வுகள், 3 பாண்டுகள். ரூ. 280.75 எக்ஸைஸ் ட்யூடி உள்பட; வரிகள் தனி

**நேஷனல்–எக்கோ ரேடியோக்கள் சிறந்தவை -அவைகள் 'மான்ஸூன்-ப்ரூப்' செய்யப்பட்டவை!**



**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸெஸ் லிமிடெட்**
பம்பாய் . கல்கத்தா . பாட்னா . மதராஸ் . பெங்களூர் . டில்லி . செகந்திராபாத்

JWT-GRA 2704

# ஸ்ரீவைகுந்தத்துக் கண்ணபிரான்

தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்

காதல் வயப்பட்ட பெண் தன் காதலனுக்குத் தூது அனுப்புவது இயற்கை. அப்படியே ஒரு பெண் திருவரங்கநாதனிடமே காதல் கொள்கிறாள். அவனோ உதாசீனமாக இருக்கிறான். ஆதலால் தூதனுப்ப விரைகிறாள். சாதாரணமாகத் தோழியரையோ, கிளிகளையோ, அன்னங்களையோ, வண்டுகளையோ தூதனுப்புவதுதானே வழக்கம். இவள் நினைக்கிறாள், இவர்களையெல்லாம் அனுப்பினால் அவர்கள் இவளை வஞ்சிக்க மாட்டார்கள் என்பது என்ன உறுதி? ஆதலால் தனக்கு உற்ற துணையாக இருக்கும் நெஞ்சையே தூது அனுப்புகிறாள். ஆனால் நடந்தது என்ன? சென்ற நெஞ்சு திருவரங்கனை வணங்கி, தூது சொல்லிவிட்டுத் திரும்பாமல் அவன் அகன்ற மார்பின் அழகிலே லயிக்கிறது. கடைசியாகத் தான் வந்த காரியத்தை மறக்கிறது. ஏன், தன்னையுமே மறந்து விடுகிறது. அது எப்படித் தூது சொல்லி மீளுவது? இப்படித் தன் உள்ளங்கவர்ந்த கள்வனும் அரங்கனது காதலை வெளியிடுகிறாள் பெண் ஒரு பாட்டிலே. பாடியவர் திவ்யகவிப் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார். பாடல் இதுதான். தோழியிடம் கூறுவதாகப் பாவனை.

நீர்இருக்க, மடமங்கைமீர்! கிளிகள்
தாமிருக்க, மதுகரம் எலாம்
நிறைந்திருக்க, மடஅன்னம்
முன்னம் நிரை
யாயிருக்க உரையாமல் யான்

ஆரிருக்கினும் என்நெஞ்சம் அல்லது ஒரு
வஞ்சமற்ற துணை இல்லை என்று
ஆதரத்தினோடு தூது விட்ட பிழை
யாரிடத்து உரைசெய்து ஆறுகேன்

சீரிருக்கும் மறைமுடிவு தேடரிய
திருவரங்கரை வணங்கியே
திருத்துழாய்தரின் .விரும்பியே கொடு
திரும்பியே வருதல் இன்றியே

வாரிருக்கு முலை மலர் மடந்தை உறை
மார்பிலே பெரிய தோளிலே
மயங்கி, இன்புறமுயங்கி என்னையும்
மறந்து தன்னையும் மறந்ததே.

இப்படி உள்ளங் கவர்ந்த கள்வன் அரங்கநாதன் மட்டும் அல்ல. சைவ உலகிலும் சீகாழித் தோணியப்பர், பிள்ளைப் பிராயமே உள்ள ஞானசம்பந்தனது உள்ளங் கவர் கள்வனாக இருந்ததையும்தான் அவர் முதற் பாட்டிலேயே படித்திருக்கிறோமே. ஆனால் இப்படி உள்ளங்கவர் கள்வனான பெருமாள் உண்மையாகவே ஒரு கள்ளனுக்கு அவன் தொழிற்பட உதவியதோடு அவனுடைய உருவையே தாங்கி அரசன் முன் வந்திருக்கிறார் என்றால் அதிசயம்தானே. ஒரு காட்டிலே காலதூடகன் என்று ஒரு கள்ளர் தலைவன் இருக்கிறான். அவனும் அவன் சகாக்களும் திருடுவதையே தொழிலாகக் கொண்டிருக்கின்றனர். ஆனால் அவன் நல்லவர்களை நெருங்குவதில்லை. தீயவர்களையே தேடிச் சென்று திருடி வருகிறவன். திருட்டில் கிடைத்த பொருளில் பாதியைப் பரந்தாமனுக்கே கொடுத்து விடுகிறான். மீதத்திலும் தன் வாழ்க்கைக்கு வேண்டியது போக மிச்சம் இருப்பதை ஏழைகளுக்குப் பகிர்ந்து அளித்து விடுகிறான். இப்படிப்பட்ட கள்ளனைப் பரந்தாமன் கைவிட்டுவிட முடியுமா என்ன? எப்படியோ ஒரு நாள் அரசகாவலர் இவனது சகாக்களைப் பிடித்து வருகின்றனர். இவன் மட்டும் தப்பித்து வந்து பரந்தாமனின் திருவடிகளில் விழுகிறான். பக்தனைக் காக்கும் பரம தயாளன் ஆயிற்றே அவர். ஆதலால் அவரே காலதூடகன் வேடத்தில் அரசனிடம் சென்று தம்மை ஒப்புவித்துக் கொள்கிறார். தம் உண்மை வடிவினையும் காட்டுகிறார். 'தருமம் செய்யப் பெறாத பொருள்கள் அழியும். அதனையே அரசர் கைப்பற்றுவர், திருடர் கவர்வர் என்ற உண்மையை உனக்கு அறிவிக்கவே காலதூடகனைத் தோற்றுவித்தோம்; அவனுக்குத் துணை நின்றோம்' என்று தம் செயலை விளக்குகிறார். பரந்தாமனது திவ்ய தரிசனம் பெற்ற அரசன், 'ஐயா! கள்ளப்பிரானே! உம் திருவருள் வழியே நானும் நிற்பேன்' என்று அவர் திருவடிகளில் விழுந்து வணங்குகிறான். இப்படித்தான் உள்ளங்கவர் கள்வனான பரந்தாமன் கள்ளப்பிரானாகவும் நின்றிருக்கிறார். இந்தக் கள்ளப்பிரான் கோயில் கொண்டிருக்கும் தலமே ஸ்ரீவைகுந்தம். அந்த ஸ்ரீவைகுந்தத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

பரம பதத்திலுள்ள ஸ்ரீவைகுந்தத்துக்கோ கைலாயத்துக்கோ நம்மால் போகமுடிகிறதோ என்னவோ. ஆனால் பூமியிலுள்ள ஸ்ரீ வைகுந்தத்துக்கு ரயிலிலே போகலாம், காரில் போகலாம், பஸ்ஸிலேயும் போய்ச் சேரலாம், சென்று திரும்பவும் செய்யலாம். ஸ்ரீவைகுண்டம் திருநெல்வேலிக்கு நேர் கிழக்கே பதினெழு மைலில் உள்ள சிறிய ஊர். ஒரு தாலுகாவின் தலைநகரம். தண்பொருநை நதியின் வடகரையில் கள்ளப்பிரான் கோயில் இருக்கிறது. திருநெல்வேலி திருச்செந்தூர் ரயில் மார்க்கத்தில் சென்று ஸ்ரீவைகுண்டம் ஸ்டேஷனில் இறங்கி, தாமிரவருணி ஆற்றில் கட்டியிருக்கும் அணையோடு கூடிய பாலத்தையும் கடந்து நாலு பர்லாங்கு சென்றால் கள்ளப்பிரான் கோயில் வாயிலில் வந்து சேரலாம். பாலத்தின் மீது நடக்கும்போதே நூற்றுப் பத்தடி உயரம் வளர்ந்துள்ள கோயில் கோபுரம் தெரியும். கோயிலும் பெரிய கோயில்தான். 580 அடி நீளமும் 396 அடி அகலமும் உள்ள மதிலால் சூழப்பட்டிருக்கும் கோயில் என்றால் கேட்கவா வேணும்? கோயில் வாயிலில் ஒரு தகரக் கொட்டகை போட்டுக் கோயிலின் பார்வை அழகைக் கெடுத்திருக்கிறார்கள். அதனை அடுத்து இருப்பதே ராமாயணக் குறட்டை உடைய மண்டபம். அதன் பின்

னரே கோபுர வாசல். அந்த வாயில் வழியாகவே உள்ளே செல்ல வேணும். நாமோ கள்ளப்பிரானைக் காணும் ஆவலோடு வந்தவர்கள். ஆதலால் கொடிமர மண்டபம், இடைநிலைக் கோபுர வாயில், கருட மண்டபம், மணி மண்டபம் எல்லாம் கடந்து அர்த்த மண்டபத்துக்கே போய் விடலாம். அங்கேதான் தங்க மஞ்சத்திலே திருமகளும் நிலமகளும் இருபுறமும் இருக்கக் கள்ளப்பிரான் கையில் கதையுடன் நிற்கின்றார். நல்ல தங்கக் கவசம் அணிந்திருக்கிறார். அதை விட அழகான திருமேனி உடையவர் அவர். அவரைச் சமைத்த சிற்பி அவரது திருமேனி அழகினால் கொள்ளை கொள்ளப்பட்டு மெய்ம் மறந்து அவருடைய கன்னத்தைக் கிள்ளிக் கொஞ்சினான் என்றும், அப்படி அவன் தொட்டுக் கொஞ்சிய இடம் கன்னத்தில் பதிந்திருக்கிறது என்றும் சொல்வர். இந்த அர்த்த மண்டபத்துக்கும் அப்பால் உள்ள கருவறையிலேதான் வைகுந்த நாதர் நல்ல சிலை வடிவிலே நின்று கொண்டிருக்கிறார். சோமுகாசுரன், பிரம்மாவிடத்திலிருந்து நான்கு வேதங்களையும் பிடுங்கிச் செல்ல, அதற்காக வருந்தி அவன் தவம் செய்ய, வைகுந்தநாதன் பிரம்மனது தவத்துக்கு இரங்கிக் கருடன்மீது ஏறி வந்து சோமுகாசுரனை வென்று மறைகளை மீட்டுப் பிரம்மாவிடம் கொடுத்திருக்கிறார். கருவறையில் அந்த அரங்கநாதனைப்போல, ஸ்ரீதேவி பூதேவி எல்லாம் இல்லாமல் தனித்தே இருக்கிறார் வைகுந்தநாதர். பிரம்மனுக்காக அவசரமாக எழுந்தருளிய காரணத்தால் தன்னந்தனியே வந்திருக்கிறார் போலும்.



சுக்ரீவ ஸக்யம்

இவரையே பால் பாண்டியன் என்றும் அழைக்கிறார்கள். அன்று நான்முகன் பூஜித்த வைகுந்த நாதர் சில காலம் மண்ணுக்குள்ளேயே மறைந்திருக்கிறார். அப்படி மறைந்திருந்த இடத்தில் அங்குள்ள பசுக்களெல்லாம் பால் சொரிய, அதை அரசனிடம் கோவலர்கள் அறிவித்திருக்கிறார்கள். அந்த இடத்துக்கு மன்னன் வந்து வெட்டிப் பார்த்து வைகுந்தநாதனை வெளிக் கொணர்ந்திருக்கிறான். இது காரணமாகவே இவருக்கு நாள்தோறும் பால் திருமஞ்சனம் நடைபெறுகிறது. பாற்கடலிலேயே பள்ளி கொள்ளும் பரந்தாமன் பால் திருமஞ்சனம் பெறுவதும் அதனால் பால் பாண்டியன் என்று பெயர் சூட்டப்படுவதும் அதிசயமில்லைதானே. இந்த வைகுந்த நாதனை வருஷத்துக்கு இரண்டு முறை சூரியன் வழிபாடு செய்கிறான். சித்திரை மாதம் ஆறும் தேதி, ஐப்பசி மாதம் ஆறும் தேதி இரண்டு நாட்களும் இளஞ்சூரியனது கிரணங்கள் கோபுர வாயில் மண்டபம் எல்லாம் கடந்து வந்து வைகுந்தன் மேனியைப் பொன்னிறமாக்குகின்றன. இந்தச் சூரிய பூசனை பரந்தாமனுக்கு நடப்பது இத்தலம் ஒன்றிலேதான் என்று அறிகிறோம்.

இனி வெளியே வந்து வலமாகச் சுற்றினால் கன்னி மூலையில் வைகுண்டநாயகி அதற்கு எதிர்த்த திசையில் சோரநாத நாயகியுடன் தனித் தனிக் கோயிலில் கொலு விருப்பதைக் காணலாம். சோரநாத நாயகி சந்நிதி மண்டபத்தைக் கடந்து வந்தால் பரமபத வாசலைக் காண்போம். அது ஆண்டுக்கு ஒரு முறை வைகுண்ட ஏகாதசி தினத்தன்று மாத்திரமே திறக்கப்படும். அதன் பக்கத்திலேயே மணவாள மாமுனிகள் சந்நிதி இருக்கிறது. அங்கும் வணக்கம் செலுத்தி விட்டு மேலும் நடந்தால் சிலை உருவில் தசாவதாரக் காட்சியைக் காண்போம். இந்த வடிவங்களெல்லாம் எண்ணெய்ப் பசை ஏறி உரு மழுங்கி நிற்கின்றன. இதற்கு எதிர்த் திசையில் தென்கிழக்கு மூலையில் யோக நரசிம்மர் சிலை உருவில் தனிக் கோயிலில் இருக்கிறார். அவர் முன்பு லக்ஷ்மிநரசிம்மர் செப்புச் சிலை உருவில் அழகிய வடிவில் அமர்ந்திருக்கிறார். இச்சந்நிதியில் ஒவ்வொரு செவ்வாய்க்கிழமை இரவிலும் சிறப்பான பூசை நடக்கிறது. இவர்களையெல்லாம் கண்டுவணங்கி விட்டு வெளிவந்தால் பலி பீடம், கண்ணன்குறடு. இவற்றுக்கு வடபுறம் ஒரு பெரிய மண்டபம் தோன்றும். அங்குதான் திருவேங்கடமுடையான் சந்நிதி இருக்கிறது. இக்கோயிலின் சிற்பச் சிறப்பெல்லாம் இம் மண்டபத்தில்தான். வரிசைக்கு ஒன்பது சிங்கப் பொதிகையோடு கூடிய யாளிகள் இருக்கின்றன. யானை மேல் யாளியும், யானையின் மேல் சிங்கமும் அதன்மேல் யாளியும் உள்ள தூண்கள் அவை. தெற்கேயிருந்து மூன்றாவது தூணில் யாளியின் வாயில் அநுமார் நிற்கிறார். இங்குள்ள ஒவ்வொரு தூணின் மேலும் அநுமார் பலப் பல உருவங்களில் இருக்கிறார். ஆழ்வாராதியர்களும் இருக்கிறார்கள். மண்டபத்தின் முகப்பில் உள்ள தூண் ஒன்றில் அகோர வீர பத்திரன் காட்சி கொடுப்பார். இவைகளையெல்லாம் விடச் சிறந்த வடிவங்கள் இரண்டு இம்மண்டப முகப்பில் உண்டு. ஒன்று ராமன் சீதாப்பிராட்டி சகிதனுகத் தனது இலங்கைப் படையெடுப்புக்கு உதவிய சுக்ரீவனை அணைத்து

அருள்பாலிப்பது. சுக்ரீவ ஸக்யம் இதிகாசப் பிரசித்தி உடைய வரலாறு ஆயிற்றே. அதைக் கல்லில் காட்டும் காவியமாகச் சிற்பி வடித்தெடுத்து நிறுத்தியிருக்கிறான். ராமன் சுக்ரீவனுக்கு அருள்பாலிக்கும்போதே லக்ஷ்மணனும் அங்கதனையும் அனுமனையும் அணைத்துக் கொண்டு நிற்கிறான். இப்படி வானர வீரர்களை ராமனும் லக்ஷ்மணனும் அணைத்துக் கொண்டு நிற்கும் காட்சி சிற்ப உலகிலே அபூர்வமானவைதாமே.

இத்தலமும் இதனை அடுத்துள்ள எட்டுத் தலங்களும் நம்மாழ்வார் பாடிய நவ திருப்பதிகள். அவைகளில் பொருநையாற்றின் தென் கரையில் இருப்பவை நம்மாழ்வார் கோயில் கொண்டிருக்கும் ஆழ்வார் திருநகரி என்னும் குருகூரும், நம்மாழ்வாரது சிஷ்யரான மதுரகவியாழ்வார் பிறந்த திருக்கோளூரும் மகரநெடுங்குழைக்காதர் கோயில் கொண்டுள்ள தென் திருப்பேரையும் ஆகும். மற்றவை ஸ்ரீவைகுந்தம், நத்தம் என்னும் வரகுண மங்கை, திருப்புளிங்குடி, பெருங்குளம், இரட்டைத் திருப்பதி என்னும் தொலைவலி மங்கலம் ஆகும். நவ திருப்பதிகளையும் நம்மாழ்வார் பாடியிருக்கிறார். அதில் பிரபலமான பாட்டு ஒன்றில் புளிங்குடி, வரகுண மங்கை, வைகுந்தத்திலுள்ள மூவரையும் சேர்த்தே பாடியிருக்கிறார்.

புளிங்குடி கிடந்து, வரகுணமங்கை
இருந்து, வைகுந்தத்துள் நின்று
தெளிந்த என் சிந்தை அகங்கழியாதே
என்னை ஆள்வாய், எனக்கருளி
நளிந்த சீர் உலகம் மூன்றுடன் வியப்ப
நாங்கள் கூத்தாடி நின்று ஆர்ப்ப
பளிங்கு நீர் முகிலின் பவளம்போல்!
கனிவாய்
சிவப்ப நீ காணவாராயே!

என்பது பாசுரம்.

இக்கள்ளபிரான் கோயிலில் ஆறு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. ஒன்று தேவர்பிரான் தாதருக்குக் கோனேரி மேல் கொண்டான் வல்ல நாட்டில் ஐந்து மாதிலம் மடப்புற இறையிலியாகக் கொடுத்ததைக் குறிக்கிறது. திருவரங்கப் பெருமான் பல்லவராயர் பிரதிட்டை பண்ணியவர் வைகுந்தவல்லி என்ற தகவலும் கிடைக்கிறது. சடாவர்மன் குலசேகரர் கோனேரி கொண்ட சுந்தரபாண்டியத் தேவர் முதனியோர் செய்த திருப்பணி விவரங்கள் கிடைக்கின்றன. இத்தலத்தில் தான் குமரகுருபர அடிகள் பிறந்து வளர்ந்தார் என்பதும் யாவரும் அறிந்ததொன்றே.

வைகுந்தம் வரை வந்துவிட்டோமே, திருக்கயிலாயம் இங்கிருந்து மிகவும் தூரமோ என்று சைவ அன்பர்கள் கேட்கும் கேள்வி என் காதில் விழுகிறது. இல்லை, வைகுந்தத்திலிருந்து கூப்பிடு தூரமே கைலாயம் என்பதையும் இத்தலத்திலேயே தெரிந்து கொள்ளலாம். இந்தக் கள்ளப்பிரான் கோயிலிலிருந்து கூப்பிடு தூரத்திலேயே கைலாச நாதர் கோயில் இருக்கிறது. அங்கும் சிறுசிறு சிற்ப வடிவங்கள் நிறைய உண்டு. கள்ளப்பிரானைத் தரிசித்த கண் கொண்டே கைலாய நாதரையும் தரிசித்துத் திரும்பலாம்.

# ஆனந்தமான வாழ்க்கைக்கு




காட்பரீஸ் சாக்கலேட்...
மிட்டாய் மட்டுமல்ல-
ஒரு உணவும் கூட

காட்பரி என்றாலே தரத்தில் உயர்ந்தது

# விநய நகரில் விநாயகர் விழா

சென்ற ஆகஸ்ட் 24-ந் தேதி வியாழக்கிழமை, புதுதில்லி விநய நகரில் கால்வாய்க்குப் பக்கத்தில் காலி நிலத்தில் நால்வாய்க் கடவுள் விநாயகருக்குக் கன ஜோராகக் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இம் முயற்சிக்கு ஜகத்குரு காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் நல்வாசி கூறி, நல்லபடி நடத்தி வைக்க வேத விற்பன்னர்களை உவந்து தவி, திருமுகமும் அனுப்பி வைத்தது இப் புனிதப் பணியில் ஈடுபட்டவர்களுக்குப் பெரும் பேறாகக் கிடைத்தது.

இம் முயற்சியில் முக்கியமான அம்சங்கள் என்னவெனில், மத்திய தர வகுப்பைச் சேர்ந்த பெருமக்களே ரூ. 35000 வரை சமர்ப்பித்திருக்கிறார்கள். இதில், ஒரு வருஷத்துக்கு முன் பாலே (வன) பாங்கில் போடப்பட்ட ரூ. 14,000 பறிபோயிற்று. தமிழ்நாட்டு அறநிலைய மந்திரி பக்தவத்ஸலம் அவர்களின் தூண்டுதலால் சென்னையிலுள்ள தேவஸ்தானங்கள் சமயத்தில் உதவி செய்து சமயம் செழிக்கக் காரணமாயின.



கும்பாபிஷேக வைபவத்துக்கு வந்த கூட்டம் சமாளிக்க முடியாத அளவுக்குப் போய் விட்டது. தில்லித் தமிழ் மக்கள் குடும்ப சமேதராய்க் குழுமியிருந்தார்கள். அதிகாலை முதல் அர்க்ய ஹோமங்களும், மூல மந்திர ஜபங்களும், அஷ்டதிக் பாலர் பூஜைகளும், வஸோர்தாரையும் சாங்கோபாங்கமாக நடைபெற்றன. சரியாகப் பத்தரை மணிக்குப் பக்த கோடிகள் நாம ஸங்கீர்த்தனத்துக்கிடையே பாரதத்தின் பல்வேறு பாகங்களில் உள்ள புண்ணிய நதிகளிலிருந்தும் தருவிக்கப்பட்ட தீர்த்தங்களில் கஸ்தூரி, கோரோசனை, க்ஷீரம் சேர்த்து நிரப்பிய கலசங்களிலிருந்து படியளக்கும் பரமனின் பவித்திர கும்பத்துக்கு அபிஷேகம் செய்தனர். 'அம்பிகை லோலா தும்பிக்கை பாலா' என்று நாமஸங்கீர்த்தனம் செய்தனர். மறக்கவொண்ணு அநுபவம்தான்.

இந்த முயற்சிக்கு ஆதிகர்த்தாவாக இருந்து மெய் சோராமல் பணியாற்றிய ஸ்ரீவி.வி.ஆர். நாகப்ப செட்டியாரை நினைவுகூர வேண்டும். அதற்குப் பின்னர் முக்கிய பொறுப்பேற்ற ஸ்ரீ பட்டாபிராமன் அவர்கள் காதும் காதும் வைத்தாற்போல் காரியம் செய்பவர். கோபுரம் உயரக் காரணமாயிருந்த ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியும் இஞ்சினீயர் ஸ்ரீ நாராயணய்யரும் கூட இப்படித் தான். ஆனால் பெருங் காது படைத்த பெரியபிள்ளையின் காதுக்கு இவர்கள் பிரார்த்தனை எட்டாமல் இருக்குமா?

ஒன்று சொல்ல மறந்து விட்டேன். புதன் கிழமையன்று தில்லிக்கு திடீர் விஜயம் செய்த ஸ்ரீ ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள் அன்று நடந்த விக்கிரக ஸ்தாபன வைபவத்தில் கலந்துகொண்டு வைரம் கலந்த நவரத்தினங்களைத் தம் கைகளாலேயே சமர்ப்பித்தார்.

இந்த ஆலயத்தில் ஒரு புதிய அம்சம். அது தான் கல்யாண மண்டபம். எல்லா வசதிகளுடன் அமைந்துள்ள இம்மண்டபம் நல்ல காரியங்களுக்குப் பயனாகும். — சுப்புடு

---

சந்ததமும் செந்தமிழில் பாடிப் பாடி
சங்கரக் கங்காதரக் குமரன் அருள்
வந்ததில்லை இல்லையென்று வாடி வாடி
வருந்தும் அடியாரொரு வார்த்தை கேளீர்;
கந்தன்அன்பர் சொந்தன் கள்ளிவள்ளிக் குகந்தன்
கருணைக் கரத்தில் கட்டுப்பட வேண்டின்
தொந்தியுள்ள மைந்தன் துதிக்கையான் உம்மைத்
தொடர்ந்து வரவேணும்! துரத்தி வரவேணும்!

—லண்டன் வாமனன்




**வ**ண்டிச் சத்தம் கேட்டுச் சிவராமன் திரும்பிப்பார்த்தான். 'ஜலுங்' கென்று பாதஸரம் சத்தம் செய்ய வண்டியிலிருந்து மெள்ள இறங்கிய பத்மாவும் அதே சமயத்தில் அவனைப் பார்த்தாள். பார்த்து உணருகிற நேரம் அவள் கண்கள் அவன் முகத்தைச் சுதந்திரமாக நோக்கின. பிறகு அவள் தலை குனிந்து கொண்டு, தன் வீட்டுப் படியில் கால் வைத்தாள்.

ஆரம்பத்தில் அது பத்மா என்று சிவராமனால் சீக்கிரம் புரிந்துகொள்ள முடியவில்லை. அந்த விடிகாலைப் பொழுதின் மெல்லிய பனி வெளிச்சமல்ல அதற்குக் காரணம். அவள் ஒருவிதமாக மாறிப் போயிருந்ததுதான். முகத்தில் ஒரு வகை தேஜஸின் கம்பீர மிதப்பு. அதில் மிதந்த நாணத்தின் போக்கு புதுமையாயிருந்தது. அவயவங்களின் அசைவுகள் துவண்டு தோன்றின. அந்த வித்தியாசத்தை உணர்ந்ததும் சிவராமன் கொஞ்சம் ஆச்சரியப்பட்டுப் போனான். அவளுடைய கல்யாண நினைவு அவனுக்கு வந்தது. மெல்லிய புன்முறுவல் செய்தான்.

நேற்றுப் போலிருக்கிறது, புதுப் புடவையின் மொடமொடப்புச் சத்தத்துடன் அவள் புக்ககம் புறப்பட்டுப் போனது. அப்பொழுதும், இதே மாதிரிதான், சிவராமன் தன் வீட்டுத் திண்ணையிலிருந்தபடி அவளைப் பார்த்தான்.

மாப்பிள்ளை ஸ்ரீநிவாசன், முன்பே வண்டியிலேறி உட்கார்ந்து விட்டிருந்தான். பின்னால் பத்மா வந்தாள். உள்ளே அழுதிருக்கிறாள். கண் மை அழிந்து கண்ணோடு கலங்கியிருந்தது. எதனாலோ, அவளுடைய பிற அலங்காரங்களும் அன்று அவளுக்கு ஒரு சோக உருவையே கொடுத்தன. வண்டியின் அருகே போய் நின்று, இன்னொரு முறை எல்லாரையும் திரும்பிப் பார்த்துக் கொண்டாள். அப்பொழுது சிவராமனையும் பார்த்தாள்.

சிவராமன் அவளைப் பார்த்தான். அவனது இருதயப் பக்கத்திலிருந்து ஓர் உணர்வு தூரப் போவதைப் போலிருந்தது. அது ஒரு புனிதமான துக்கம். ஆனாலும் அவனால் மனம் தெரியப் புன்முறுவல் செய்ய முடிந்தது. அது அவள் கல்யாணத்தைப் பற்றி அவனுக்கு ஏற்பட்ட சந்தோஷம்.

அவர்கள் இருவரும் என்றைக்கும் பேசினதில்லை. பேசக்கூடிய உறவு இருவருக்கும் இருந்ததில்லை. எனவே, அவன் இப்பொழுதும் அவளிடம் பேசவில்லை. ஆனால் அவள் பார்வையில் எதுவோ இருந்தது. தனக்கு விருப்பமான மொழியில் அவன் அதை எந்த விதத்திலும் அர்த்தம் செய்து கொள்ளவில்லை. ஆனால் அதன் மூலம் ஓர் அபூர்வ நிம்மதியடைந்தான்.

இப்பொழுதும் அதே போல்தான்.

மருண்டு தாழ்ந்த அந்த வதன மாதுரியமும், சிறிதே இமைத்த அந்த இமைகளின் மகா சாந்தமும், மெதுவாய் மடிந்த அந்த அதரங்களின் புதுமையும் அவன் நெஞ்சில் இதமாய் நுழைந்தன.

எதிரே வக்கீல் சந்தானம் வண்டிக்காரனுக்குச் சில்லறையைக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

''என்ன சார், ஷோரனூர் இன்றைக்கு இவ்வளவு சீக்கிரம்!'' என்று அவரிடம் பேச்சுக் கொடுத்தான் சிவராமன்.

அவர் அவனைத் திரும்பிப் பார்த்து, ''லேட்டாக வரலையே தவிர சீக்கிரம் ஒன்றும் வந்துடலையே!'' என்று சிரித்தார்.

அவரிடம் இன்னும் ஏதோ பேச வாயெடுத்தவன், ''பாய்லர் காய்ஞ்சாச்சு, சிவராமா!'' என்ற அம்மாவின் அழைப்புக் குரல் கேட்டு உள்ளே வந்தான்.

அம்மா, ''யாருடா வந்தது?'' என்றாள்.

சிவராமன் தன்னுள் ஒரு யோசனையை நிகழ்த்திக் கொண்டே, மெதுவான குரலில், ''பத்மா வந்திருக்காம்மா!'' என்றான்.

''பத்மாவா!'' என்று அவள் ஆச்சரியம் தெரிவித்தாள்.

''ஆமாம்'' என்றவன், ''பிரசவத்துக்கு வந்திருக்காப் போலிருக்கு!'' என்று சொல்லி விட்டுக் குளிக்கச் சென்றான்.

அதைக் கனவென்று நினைக்கத்தான் சிவராமன் பிரியப்பட்டான். உண்மையில் அது சாதாரணமாக நடந்ததே என்று நினைப்பதில், அதன் சிறப்புக் குறைவதாக அவனுக்குள் ஓர் எண்ணம்.

ஒரு பங்குனி மாதத்தின் சாயங்கால நேரத்தில், இளம் வெய்யில் காய்ந்து கொண்டிருந்தது. அந்த வீட்டுக்குச் சிவராமன் அன்றுதான் குடி வந்திருந்தான். 'கொஞ்சம் உலாவப் போகலாமே' என்ற எண்ணத்துடன் வெளியே வந்த பொழுது, ''டேய், பாலு! இங்கே வாயேன்....!'' என்ற மதுரமான சொற்கள் மல்லிகை மலர்கள்போல் நெஞ்சில் மெல்லென விழுந்தன.

பக்கத்து வீட்டு வாசலில் ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். ஆகாய வர்ணச் சேலையில் வெள்ளி நிற நட்சத்திரங்கள் பூத்துச் சொரிந்தன. மாலைச் சூரியன் காது ஜிமிக்கியில் மின்னினான். தோளில் விழுந்த பளபளப்பான பின்னலை விரல்களால் பிரித்துக் கொண்டிருந்தாள். தெருவில் விளையாடும் ஒரு சிறுவனை வெகு நேரம் அழைத்தும் அவன் அவளைக் கவனிக்கவில்லை போலிருக்கிறது. மையிட்டு எழுதிய விழிகளின் பொய்யான கோபம் சிவராமனுக்குத் தெரிந்தது. அவளைப் பார்த்த வாறே நின்றான்.

''என்னடா, நான் கூப்—'' எதற்கோ திரும்பிச் சிவராமனைப் பார்த்து விட்டவள், சட்டென்று நாக்கைக் கடித்து வார்த்தைகளை நிறுத்தினாள்.

அந்நிலையில் அவள் கழுத்தின் மென்மையான மடிப்புகள், அவள் அழகின் இனிமையை அதிகமாக்கின. விரல்கள் பின்னலை விட்டன. முகத்தின் சுதந்திரமான சுபாவம் மறைந்தது. கொஞ்சமாகக் கீழிதழைப் பற்களிடையே மடித்துக் கொண்டு உள்ளே திரும்பினாள். பாதஸரத்தின் சங்கீதம் தூரமாகப் போயிற்று.

இதுவே அவன் முதன் முதலில் பத்மாவைப் பார்த்த விதம்.

அவளைப் பார்த்து, அவள் உருவத்தை நெஞ்சில் வாங்கிக் கொண்ட மறுகணமே, அவன் வாழ்வில் ஒரு புது உணர்ச்சி சேர்ந்தது. எந்த விதமான ஆதாரமோ அர்த்தமோ இல்லாமல் அவன் உற்சாகப்படத் தொடங்கினான்.

இன்னும் கொஞ்ச நாட்கள் போகப் போக அவன் ஞாபகத்தில் புது வரிகள் விழுந்தன.

விடியற்காலைகளில் மப்ளரும் ஸ்வெட்டருமாகக் குளிரை அனுபவித்துக் கொண்டு அவன் உலாவ வெளியே வருகையில், எல்லாப் பெண்களிலும் அவள் மட்டுமே, கோலத்தைப் பாதியில் நிறுத்தி விட்டு உள்ளே சென்று மறைந்தாள்.

சிவராமனும், கோயில் பிராகாரத்தின் வெளிறிய இருட்டில் புதுப்பட்டின் சரிகைக் கரை மின்ன அவள் நிற்கும்பொழுது, வழக்கமில்லாத தலைகுனிவுடனும் தன்னடக்கத்துடனும் ஒருபுறமாக ஒதுங்கிச் சென்றான்.

இலேசான சந்திர வெளிச்சத்தில் தன் வீட்டு மாடிச் சுவரின் மேல் சாய்ந்து நின்றிருக்கும் அவள், சிவராமன் தெருமுனையில் திரும்புவது தெரிந்ததும் மறைந்தாள்.

தோட்டப்புறத்துத் துளசிமாடத்தில் அவள் விளக்கு ஏற்றி வைக்கையில், ஒரு சுவரால் பிரிக்கப்பட்ட தன் வீட்டுக் கிணற்றடியில் தங்கி நிற்காமல், உள்ளே வந்து மறைந்து சிவராமன் அவளுக்கு வசதிப்படுத்தினான்.

ஒருமுறை , அவன் சென்றிருந்த பாட்டுக் கச்சேரிக்கு அவளும் சிநேகிதிகளுடன் வந்திருந்தாள். கலகலச் சிரிப்புகளால் சப்தித்த அவர்களிடையே, சிவராமனைப் பார்த்துவிட்ட ஒரு மரியாதை பாவத்துடன் அவள் அடக்கமாக உட்கார்ந்திருந்தது. அவனிடத்திலும் ஒரு கம்பீர அமைதியை ஏற்படுத்தியது.

பின் வீடு திரும்புகையில், அன்றைக்கென்று கும்மென்று சூழ்ந்திருந்த இருட்டில் , எப்படிச் செல்வது என்று தயங்கித் தனியே நின்றிருந்தவள், சிவராமன் அவ்வழியே வந்தவுடன், அவனைக் கண்ட ஓர் உறுதியான தைரியத்தில், பாதையின் மறுபுறம் பதுமைபோல் அவன் துணையை நம்பியவளாய் நடந்து வந்தாள்.

தன்னைக் கண்டு அவள் வெட்கப் படுவதையும், தன் மேல் அவள் வைத்திருக்கும் மதிப்பையும் சிவராமன் அறிந்து கொண்டபோது, யாருக்கும் இல்லாத ஒரு தூய உரிமை தனக்கு அவள் மேல் இருக்கிறது என்று கருதிக் கொண்டான். அந்த எண்ணம் அவனுக்குத் தந்த திருப்தியும் நிம்மதியும் அவன் நெஞ்சில் ஒரு மென்மையான உணர்ச்சியை உண்டாக்கின. அது வெகு நூதனமானது; நேர்மை மிகுந்தது: பக்குவமான மனங்களுக்கு மட்டுமே அனுபவிக்கக் கிடைப்பது. 'இதுதான்!' என்று உருவமற்றது: முக்கியமாக அதன் பெயர் காதல் இல்லை.

எனவேதான் பத்மாவின் கல்யாணத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட பொழுது அவன் அதிர்ச்சியடையவில்லை. தன்னைப்போன்றவர்கள் அடைய முடியாதவள் என்று விவரமறிந்த முதல் நாளே தீர்மானித்து, அவ்வப்பொழுதும் அதை ஞாபகத்தில் கொண்டு உணர்ந்து, யாரோ ஒருவன் எங்கிருந்தோ வந்து பத்மாவைக் கைப்பிடிப்பான் என்பதை அவன் எதிர்பார்த்து வந்திருப்பதும், அதற்குக் காரணம். அப்படியிருந்த போதிலும், அவள் கல்யாணத்துக்குப் பிறகும், அவள் கணவனுக்குக்கூடச் சொந்தமில்லாத ஓர் உணர்வின் வழியில், அவள் தனக்கே சொந்தம் என்று அவன் இன்னமும் நினைத்தான். அது ஏன் என்று புரியாதது ; இன்னதென்று தெரியாதது.

இரண்டு நாட்கள் கழித்துப் புரட்டாசிப் பௌர்ணமி வந்தது. அன்று மாலை ஏழு

## திருப்பத்தூர் பி. ச. குப்புசாமி




முதன்முதலில் இந்தியாவில் தயாரிக்கப்படும் டேப் ரிகார்டர் 'கான்ஸர்டோனே' மத்திய வகுப்பினரும் வாங்கும் முறையில் தயாரிக்கப் போகிறார்கள். இங்கிலாந்திலுள்ள ஒரு ஸ்தாபனத்தின் இயந்திர நுணுக்க உதவியோடு சென்னையில் இந்தத் தொழிற்சாலை இயங்கப் போகிறது. டெலி டேப் ரிகார்டிங் ஸ்தாபனத்தின் அதிபர்களான திரு அருணாசலத்தையும், திரு ஆர். ஜி. ராஜகோபாலையும், லண்டன் பிஷர் எலெக்டிரானிக்ஸ் கம்பெனியைச் சேர்ந்த போடேயையும் காணலாம்.

---

மணி சுமாருக்கு, தோட்டத்துப் பக்கம் கொஞ்ச நேரம் பத்மாவைச் சிவராமன் எதேச்சையாகப் பார்க்க நேர்ந்தது. வானத்தில் மேகங்களே இல்லாததால் அவள் மேல் நல்ல வெளிச்சம் விழுந்தது.

முதற் பார்வையில், 'இந்தக் குழந்தையா இந்தக் குழந்தைக்குத் தாயாகப் போகிறது?' என்று அவன் வேடிக்கையாக நினைத்துக் கொண்டான். மழலையைப் போல் ஓர் இளந்தன்மை அவளிடம் இன்னும் இருந்து கொண்டிருந்தது. ஆனாலும், சற்று உற்றுக் கவனித்ததும், அவளுடைய மாறுதல் அவனை மிகவும் ஆச்சரியப்படுத்தியது. கைவிளக்கா யிருந்தவள் கற்பூர ஜோதியாய் மாறி விட்டிருந்தாள். முகத்தில் அதன் பிரகாசம் வீசியது. கண்களில் கருமையும் உதடுகளின் சிவப்பும் நன்கு ஊறி நின்றன போல் பட்டன. உடம்பின் சோர்வைத் தவிர வேறு எந்தச் சோகமும் அவளிடம் தென்படாதது கண்டு சிவராமன் மகிழ்ந்தான். ஸ்ரீநிவாஸனிடத்தில் திடீரென்று அவனுக்கொரு திருப்தி உண்டாயிற்று.

அவள் தன்னைப் பார்த்து விடாதபடிக்குச் சீக்கிரமாக உள்ளே வந்து சேர்ந்தான். அவன் உதடுகளில் ஒரு புன்னகை இருந்தது.

விஷயமறிந்து ஸ்ரீநிவாஸன் வந்திருந்தான். அவன் விருப்பப்படியே ஆண் குழந்தை பிறந்திருந்தது. அவனது தாயாருக்கும் அதைப் பற்றி அளவுகடந்த சந்தோஷம். எல்லாரிடமும் தன் மருமகள் பத்மாவை வெகுவாக மெச்சிக் கொண்டிருந்தார்.

பத்மாவுக்கு விதம்விதமான எண்ணங்கள். எல்லாருடைய பாராட்டினாலும் அவள் நெஞ்சில் பெருமிதம் பொங்கியது. தனிமையில் ஸ்ரீநிவாஸன் அவளிடம், "எங்களுக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா?" என்ற பொழுது வெட்கமும் கர்வமும் கலந்த பார்வையால் அவள் அவனைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

ஆனாலும் அவள் மனத்தின் ஒரு பகுதி இன்னும் காலியாகவே இருப்பது போல் அவளுக்குப் பட்டது. வேறு யாருடைய பெருமிதத்தையோ பாராட்டையோ அது எதிர்பார்த்தது. அப்பொழுதெல்லாம் அவள் கொஞ்சம் வெட்கப்பட்டாள்.

புக்ககத்தில் தான் உண்டாகி யிருப்பதை உணர்ந்ததும் அவளுக்குள் பல நினைவுகள் தோன்றின. அதைப் பற்றி ஒவ்வொருவரும் என்ன நினைப்பார்கள் என்ற யோசனையில் அடிக்கடி ஆழ்ந்திருப்பாள். ஸ்ரீநிவாஸனைப் பற்றிய நினைவு தாம்பத்திய இன்பத்தோடு வந்தது. பெற்றோரைப் பற்றிய எண்ணம் மகளின் வெட்கத்தோடு எழுந்தது. தோழிகளின் கேலிகள் கற்பனைக்கு வந்தன. இப்படியே வருகையில் திடீரென்று சிவராமன் குறுக்கிட்டான். அப்பொழுது அவள் ஒரு புதுவித வெட்கத்தை அனுபவித்தாள்.

பக்கத்து வீட்டில் வசித்த ஒரு யுவன் என்பதோடு மட்டுமே, அவளால் சிவராமனைப்பற்றி நினைக்க முடியவில்லை. அதற்கும் மீறி ஒரு விதத்தில் அவன் முக்கியமாயிருப்பது போல் தோன்றியது. மற்றவர்களிடமிருந்து தனித்து, ஒரு புதுக்கோணத்தில்-புதியஉறவாய்-அவன் அவளுக்குத் தெரிந்தான். அது சட்டென்று நெஞ்சுக்குச் சிக்கவில்லை.

அவன் அவளது உணர்ச்சிகளைப் பாதித்திருக்கிறான். உண்மை. ஆனால், எந்த விதத்தில்....?

எல்லாரையும்விட அவனைக் கண்டபொழுது தான் அவள் அதிகம் வெட்கப்பட்டாள். எதற்காக வெட்கம்?

அவனைப் பற்றிய மதிப்பும், பற்றுதலைப் போன்ற உணர்வும் அவளுள் அந்தரங்கமாக வளர்ந்தனவே! ஏன் அது?

பத்மாவுக்குப் புரியவில்லை. அவள் ஸ்ரீநிவாஸனை மணந்தாள். சந்தோஷமாகவே மணந்தாள். அவனது கவர்ச்சியில் மனம் விரும்பியே மணந்தாள். இப்பொழுதும் அவளுடைய வாழ்க்கை நிறைந்தே நீடிக்கிறது. ஆனாலும், சிவராமனிடம் அவளுக்கு ஒரு தனி அபிமானம் இன்னும் விலகவில்லை. அவளுடைய நினைவுகளில் அவனது ஞாபகத்தின் ஆட்சி இன்னும் சரியவில்லை. பழைய பத்மாவுக்குப் பழைய சிவராமன் தெரிந்து கொண்டுதானிருக்கிறான்.

அன்று காலை, வண்டியை விட்டிறங்கியதும் முதன் முதலில் அவள் அவனைத்தான் பார்த்தாள். அவனென்று உணர்ந்ததுமே அவள் தலை தாழ்ந்தது. உடம்பெல்லாம் வெட்கம் பிரவகித்தது. பிற்பாடு, பிறந்தகத்தின் வரவேற்புக்களில்கூட அந் நிலை பூரணமாகச் சரிப்படவில்லை.

வழக்கம்போலவே இந்த முறையும், அவளுக்குக் கல்யாண விஷயமேதும் இன்னும் நிச்சயமாகவில்லை யென்று அவள் தெரிந்து கொண்டாள். அந்த விஷயத்தில் அறியாமலே அவளுக்கு அக்கறை விழுந்தது. அவனுக்கு நன்மைகள் நேர அவள் பிரியப்பட்டாள். குறைந்த பட்சம், சாதாரணக் குமாஸ்தாவாகிய அவனுக்கு, ஓர் உத்தியோக உயர்வை அவள் எதிர்பார்த்தாள். பிறகு, கல்யாணம்-பெண்ணின் அழகை அவள் பிரதானமாக விரும்பினாள்—அப்புறம் வாழ்க்கை.

**வெ**ந்து சில நாட்கள் கழித்து. திடுமென்று ஒருநாள் அவள் அவனைத் தன் வீட்டுக் கூடத்தில் சந்திக்க நேர்ந்தது. பாதரஸ விளக்கின்



# அழகு மிகுந்த நீண்ட அடர்ந்த கூந்தலுக்கு

# பாமாலிவ்

## பெர்ப்யூம்ட் கோகோனட் ஹேர் ஆயில்

குடும்பம் முழுவதிற்கும் மிக்க உகந்தது!








பெரிய எகானமி அளவு புட்டியினால் பணம் மிச்சமாகிறது! மூன்று விரு விருப்பான வாசனைகளில் கிடைக்கும்: லவண்டர், மல்லிகை, ரோஜா.

PCM/85 TAM

---



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414. மதராஸ்-5

தந்தி: 'EVERMANS' போன்: 85834

சேரக் கடைசி தேதி 20-9-1961 ... முதல் ஏலத் தேதி 22-9-1961

| 25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (4-வது வெள்ளிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ்கள்: நாவலன் ஹவுஸ், 4/24, ஆஸப் அலி ரோடு, புது டில்லி-1 * பாலுஸேரி பில்டிங் 14-A/4, W. E. A. கரோல்பாக், புது டில்லி-5 * 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டில்லி-3 * பெங்களூர் கிளை ஆபீஸ்: 185, முதல் மாடி, ஆறாவது க்ராஸ், காந்தி நகர், பெங்களூர்-9 * பம்பாய் கிளை ஆபீஸ் "விஜய விஹார்" 17-A, ஸயான் மாதுங்கா எஸ்டேட் (கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்) பம்பாய்-22 கல்கத்தா கிளை ஆபீஸ்: 48, லேக் ப்லேஸ், கல்கத்தா-29

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

மெல்லிய நீல ஜோதியில் அவள் ரேடியோவினருகே உட்கார்ந்திருந்தாள், எதிரே தம்பி பாலு உட்கார்ந்து கணக்கு போட்டுக்கொண்டிருந்தான். மின்சார விசிறி, மெதுவாய்ச் சுழன்றது. மோகன ராகத்தில் ரேடியோவிலிருந்து நாகஸ்வரம் இலேசான தவிலுடன் கலந்தும் பிரிந்தும் எழுந்தது. அவள் இமைகள் அதில் கொஞ்சம் கொஞ்சமாக மூடின.

பாலு திடீரென்று, ''வாங்கோ!'' என்றான். அவள் திடுக்கிட்டுக் கண் விழித்தாள்.

ரேழியின் அருகே சிவராமன் தயங்கி நின்றிருந்தான். கையில் ஒரு சிறிய பை இருந்தது. அவன் பக்கம் அவள் திரும்பியதும் அவன் முகம் கீழே குனிந்தது.

பிரம்பு நாற்காலியில் சாய்ந்திருந்த பத்மா சட்டென எழ முயன்றாள். நிறை கர்ப்பிணி ஆதலால், உடம்பின் அசதியைச் சீக்கிரமாக வெல்ல முடியாமல், கீழுதட்டை இலேசாகக் கடித்துக் கொண்டாள். அவள் சிரமத்தை உணர்ந்தவன் போல், சிவராமன் கொஞ்சமாகப் பின்னுக்கு நகர்ந்து, அவள் பார்வையிலிருந்து ஒதுங்கிக் கொண்டான்.

அவளுக்குக் கொஞ்ச நேரம் எதுவும் பேச வரவில்லை. பின், ரகசியக் குரலில், ''என்னன்னு போய்க் கேளுடா, பாலு!'' என்றாள். பாலு சிலேட்டைக் கீழே வைத்துவிட்டு எழுந்து போனான். அவளும் உட்புறம் மறைந்து கொண்டாள்.

அந்தச் சிறு பையோடு பாலு திரும்பினான். அதில் நெல்லிக்காய்கள் இருந்தன.

அவள் மனசில் வேகமாய் ஓர் உணர்ச்சி விரிந்தது. நிமிஷ நேரத்தில் இமைகள் ஈரம் பட்டன. ஒரு நெஞ்சின் அருமைக்கு ஆளானது போல் புல்லரிப்படைந்தாள்.

நாலைந்து காய்களை உள்ளங் கையில் எடுத்துப் பார்த்த வண்ணம் பத்மா நின்றாள். அவை வேண்டுமென்று சில நாட்கள்முன்பு தான் அவள் வீட்டில் கேட்டிருந்தாள். சாதாரணப் பொருள்தான். ஆனால், அதில்தான் அவளுக்கு ஆசை விழுந்தது. முன்பெல்லாம் தெருப்பக்கம் கூடை கூடையாக விற்றுக் கொண்டு போகும். இவள் வந்த பிறகு கண்ணிலேயே படவில்லை.

அவனுக்கு அது தெரிந்திருக்கிறது. அவள் வெட்கப்பட்டு மெதுவாய்ப் புன்னகை செய்தாள். நாவில் ஜலம் ஊற ஊற, கன்னங்களில் ஒருவிதமான குறுகுறுப்பு பரவ, ஒரு காயை எடுத்து வாயில் அடக்கிக் கொண்டாள். மனத்தில் ஒரு புதிய சந்தோஷம் தோன்றியது.

அன்றைக்கு வெள்ளிக்கிழமை. குழந்தையைத் தொட்டிலில் போட்டிருந்தார்கள்.

தாளிப்பு மணம் சமையலறையிலிருந்து கமகமவென்று வந்து கொண்டிருந்தது. மத்தியான விருந்துக்கு ஏற்பாடு நடந்துகொண்டிருந்தது.

சிவராமனுக்குச் சொல்லி யிருந்தார்கள். பத்மா அடிக்கடி வாசற்புறம் பார்த்தாள். அவனை இன்னும் காணவில்லை. அவன் வருவான், வந்து குழந்தையைப் பார்ப்பான் என்ற எண்ணமே அவளுக்கு ஒரு தனிப்பட்ட சந்தோஷத்தைக் கொடுத்தது. அந்தப் பரபரப்பில், மாடியறையிலிருக்கும் ஸ்ரீநிவாஸனை மணிக்கொரு முறை சென்று சந்தித்து, அவன் சீண்டலுக்கு ஆளாகும் இன்பத்தையும் அவள் மறந்திருந்தாள்.

கூடத்தில் இலை போட்டாயிற்று.

''வாங்கோ! வாங்கோ!'' என்று அப்பா வந்தவர்களை வரவேற்றுக் கொண்டிருந்தார். கொஞ்ச நேரங் கழித்து, ''பேரன் பிறந்ததிலே வக்கீல் சார் ஒரு சுற்றுப் பருத்துட்டாப் போலிருக்கு!'' என்று சொல்லிக் கொண்டே சிவராமன் வந்தான்.

அப்பா அவனைப் பார்த்துப் புன்னகை செய்துவிட்டு ஒரு ''வாங்கோ!'' போட்டார். அதே சமயத்தில் அவன் விழிகள் தொட்டிலையும் தொட்டிலினருகே நின்றிருந்த பத்மாவையும் பார்த்தன. தன்னிச்சையோடு வந்த அவனது கேலி சட்டெனத் தயங்கி நின்றது. தலையைக் குனிந்து கொண்டான்.

''குழந்தையைப் பார்த்தீர்களா? யார் மாதிரின்னு சொல்லுங்கோ பார்ப்போம்!'' என்றார் அப்பா பெருமிதத்துடன்.

சிறிது அசடு தட்டிய புன்னகையுடன், ''யார் மாதிரி?'' என்றான்.

''போய்ப் பாருங்கோ.''

சிவராமன் தொட்டில் பக்கம் திரும்பினான். பத்மா சற்றுத் தலைகுனிந்து தொட்டிலை விட்டு ஒதுங்கி நின்றாள்.

தங்க விக்கிரகம் தழுவக் குழைந்தாற்போல் குழந்தை பட்டுத் துணிகளின் நடுவே படுத்-



தமிழ்த் தாத்தா சாமிநாதையர் தொடங்கி வைத்த பழைய நூல் வெளியீட்டுப் பணி பிற்காலத்தில் ஒரு தமிழ் இயக்கமாகவே வளர்ந்தது. அந்த இயக்கத்தில் தமிழ்த் தாத்தா, மதுரைத் தமிழ்ச் சங்கத்தினர் ஆகியோருக்குப் பின் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் உற்சாகமும், ஊக்கமும் கொண்டு பெரும் பணி புரிந்து வருகின்றனர். கழகத்தின் 1008-வது புத்தக வெளியீட்டு விழாவும், புத்தகக் கண்காட்சியும் ஆகஸ்டு 20, 21, 22 தேதிகளில் சென்னையில் சிறப்பாக நடைபெற்றன.

இருந்தான். சின்னஞ்சிறிய விழிகள்; சின்னஞ் சிறிய விரல்கள்; சின்னஞ் சிறிய வாய்; பார்க்கையில் நெஞ்சை கொள்ளை போயிற்று. மெது வாய் ஒரு விரலால் கன்னத்தைத் தொட்டு, "என்னடா?" என்றான். என்ன பேசுவது? அவனுக்குத் தெரியவில்லை.

"யார் மாதிரி சார்?" - அப்பாவுக்குப் பூரிப்பு.

கொஞ்சம் நிமிர்ந்த பார்வையில், பத்மாவின் பாதங்கள் தெரிந்தன. சந்தேகமென்ன? அம்மாவைப் போல்தான். இந்த மோவாயின் அமைவு பத்மாவினுடையதுதான். நெற்றியின் கட்டும் அவளுடையதுதான். வர்ணம் சந்திர வர்ணம்தான்.

கொஞ்சம் சிரித்து, "உங்கமாதிரி இல்லே சார்!" என்றான். அப்பாவுக்குத் தமாஷான பாவனையில் முகம் சுருங்கியது.

"எல்லாரும் பத்மா மாதிரின்னுதான் சொல்றா. எனக்கென்னமோ என் மாதிரின்னு தோண்றது!"

சிவராமனுக்கு அவர் வார்த்தை காதில் விழவில்லை. திடீரென்று அவன் மனம் பயங்கரமாய் இளகிற்று. சட்டெனக் குனிந்து குழந்தையை முத்தமிட்டு விட்டான். நிமிரும் பொழுது அவன் கண்களில் அன்புருக்கம் தழுதழுத்தது.

"குழந்தை பேஷாக இருக்கான்!" என்று திரும்பியவன், அப்பாவின் சந்தோஷத்தைப் பார்த்துவிட்டு மேலும் ஒரு புன்னகையுடன், "அடுத்த முறை பேத்தியாகப் பிறக்கட்டும்" என்று கூறினான்.

முகத்தின் வெட்கத்தை வென்றவாறு பத்மாவுக்கு ஒரு சந்தோஷப் புன்னகை உண்டாயிற்று. ஆத்ம பூர்வமான பெருமிதத்தின் புல்லரிப்பு அவள் மனத்தில் படர்ந்து, கண்கள் சிரித்தன. தனக்கு வரவேண்டிய பாராட்டு வந்து விட்டதென்று நினைத்தாள். அவளது தாய்மை உணர்ச்சியில் ஒரு புதிய செருக்குப் பிறந்தது. அது, ஸ்ரீநிவாஸனாலும் வீட்டின் மற்றவர்களாலும் ஏற்படாமல் இப்பொழுது ஏற்பட்டது.

விருந்து முடிந்து எல்லாரும் தாம்பூலம் தரிக்க அமர்ந்தார்கள். மாமனாரின் பிரஸன்னத்தாலும் மற்றவர்களின் கேலியாலும், ஸ்ரீநிவாஸன் ஓர் அசட்டுச் சிரிப்புடன் பவ்யமாக உட்கார்ந்திருந்தான். அடிக்கடி அவனையே பார்த்தவனாய் ஒருபுறம் சிவராமன் இருந்தான்.

குழந்தைக்கு நாமகரணம் செய்வதைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

"சம்பந்திக்கு நாங்கதான் வைப்போம்னு சொல்லிட்டேன். ஆனா, நல்ல பேராகத்தான் இன்னும் கிடைக்கவில்லே" என்றார் அப்பா.

சிவராமன், "திருமலே என்று வைக்கலாமே!" என்றான். அப்படி அவன் சொன்ன பொழுது, கலகலவென்று பக்கத்தறையில் வளையல் குலுங்குவதைப் பார்த்துக் கொண்டிருந்த ஸ்ரீநிவாஸனின் கவனம் மீண்டு, "ஆ-ஆ, என்ன பெயர்?" என்று கேட்டான்.

"திருமலேன்னு வைக்கலாம்னா ர். ஆனால்..." என்று ஒருவர் தயங்கி இழுத்தார். "கொஞ்சம் பழசாகத் தோன்றுகிறது!"

சிவராமன் அங்கு கொஞ்ச நேரம்தான் உட்கார்ந்திருந்தான்.

"கொஞ்சம் வேலையிருக்கு!" என்று பாதியிலேயே எழுந்து விட்டான் சிவராமன்.

மணி பதினொன்று. டாக்ஸி வந்து நின்றது.

தெருவே கவனிக்கும் பெருமிதத்தை ரகசியமாக நெஞ்சில் அனுபவித்துக் கொண்டு, திறந்திருந்த டாக்ஸியின் கதவைப் பிடித்தவாறு ஸ்ரீநிவாஸன் நின்றிருந்தான். வரவேண்டிய சாமான்கள் வந்து கொண்டிருந்தன. படியின் மீதிருந்து, வக்கீல் சந்தானம் அப்படி இப்படியென்று எல்லா வற்றையும் சரி பண்ணிக் கொண்டிருந்தார்.

நேரமாயிற்று. வெளித் திண்ணையின் கைப்பிடிச் சுவரில் துண்டை மடித்துப் போட்டு அதன் மீது முழங்கைகளை ஊன்றிச் சாய்ந்தவாறு, சிவராமன் மேலுக்கு மௌனமாகக் கவனித்துக் கொண்டிருந்தான். பத்மா போகிறாள். ஊருக்குப் போகிறாள். ஆனால் மீண்டும் வருவாள். எனினும், அந்தச் . சமாதானம் இந்தச் சமயத்தில் ஏன் ஆறுதல் தரவில்லை?

"இதோ, இந்தப் பக்கம் ஏறிக்கொள்!" என்று ஸ்ரீநிவாஸனின் குரல் கேட்டது. அவனைப் பார்த்துப் புன்சிரிப்பு செய்ய முயன்ற பத்மா, குழந்தையைத் தோளில் அணைத்தவாறு, மையும் குங்குமமும் களை கொடுத்திருந்த முகத்தில் பிரிவுணர்ச்சியின் சோகம் சற்றே சாயை கொள்ள, ஒருமுறை திரும்பித் தன் தாய் தந்தையரைப் பார்த்தாள்.

"போய்ட்டு வரேம்மா!"

"மாப்பிள்ளே! லெட்டர் போடுங்க" என்றார் அப்பா.

அந்தச் சமயம் எதிர் வீட்டிலிருந்து, ஒரு காலணா அளவுக்குக் குங்குமத்தைச் சுடர வைத்துக் கொண்டு வெளியே தலைகாட்டிய ஒரு பாட்டி, "என்னபேர் வைச்சார்டி உங்கப்பா!" என்று கேட்டாள்.

அப்பா, பேரனைப் பற்றிய விசாரிப்பில் சற்றுக் குதூகலம் கொண்டு, "நாங்க வைக்கலே; அவளே விடாப்பிடியா ஒரு பேரை வைச்சுண்டுட்டா!" என்றார்.

அதற்குள் பத்மாவும் அந்தப்புறம் திரும்பினாள். சிவராமனின் மௌனமான முகம் அசைப்பில் தெரிந்து மறைந்தது. எல்லாரிலும் அவன் ஒதுங்கி நிற்கிறான்.

"த்தி...திருமலே, பாட்டி" என்று மெதுவாய்ச் சொன்னாள். அது சிவராமன் காதுக்கும் கேட்டது. அவளது முகத்தில் தவழ்ந்த நாணத்தைப் பார்த்து ஸ்ரீநிவாஸன் புன்னகை செய்தான்.

ஆனால் சிவராமன், சற்று நேரமே அங்கு நின்று, பின், சட்டென்று உள்ளே போனான். போவதற்கு முன், கொஞ்ச நேரத்துக்கு முன்பிருந்தே அவனை இலேசாகப் பார்த்துத் தலை குனிந்து கொண்டிருந்த பத்மா சற்று அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அவர்கள் இருவருக்கும் என்றைக்குமே பேசக்கூடிய உறவு இருந்ததில்லை. எனவே இப்பொழுதும் பேசவில்லை. டாக்ஸி செல்லும் சத்தம் கேட்டது. தன் இதயத்துக்குக் கிடைத்த அபரிமிதமான திருப்தியின் போதையில் அவன் ஆழ்ந்து கிடந்தான். வெகுநேரம் பொறுத்து வெளியே வந்து, கவனமின்றி ஏதோ காரியங்களைச் செய்தான்.

பத்மாவுக்கும் அவனுக்கும் இடையே இருக்கும் உறவுக்கு உருவம் இல்லை.

CIBA



## பிரஷினால் தேய்க்க,
## பெருநல இன்பமாம்




## உயர்ந்த பழமணங்கொண்ட



# பினகா வின் பற்பசையால்

மென்மையான ஈறுகளின் பழுப்புக் கறையைத் தடுத்து, பல் சொத்தையாகாமல் செய்ய வல்ல 'பினகா ரோஸை'யே பெரும்பாலும் குழந்தைகளுக்கு சிபார்சு செய்கின்றனர்.
துர் நாற்றம் உண்டாக்கி பல் சொத்தையாக்கும் ஈறு தொல்லைகளை குணப்படுத்தவும், பழுப்புக் கறையைப் போக்கவும், சிறப்பாக சிபார்சு செய்வது, 'குளோரோபில்' கலந்த பினகா பசையையே!






## The Kural

தெய்வப் புலவர் திருவள்ளுவரின் குறள் பாக்களை மகரிஷி வ. வே. சு. ஐயர் அவர்கள் பைபிள் நடையைப் பின்பற்றி ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார்.

தமிழ் நூல்களில் அதிகமான உலக மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டது திருக்குறள் தான். ஆங்கில மொழியில் பெஸ்கி முனிவர் 150 ஆண்டுகளுக்கு முன்னமே மொழிபெயர்த்திருக்கிறார். ஆனால் ஆங்கிலம் அறிந்த தமிழர்களுக்கு இம்மொழிபெயர்ப்புக்களில் எதுவுமே திருப்தி தராது. அதனால்தான் வ. வே. சு. ஐயர் தாமே குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். ஆனால் இந்த மொழி பெயர்ப்பும் ஆங்கிலம் அறிந்த தமிழர்களுக்குத் திருப்தி தராது. குறளாசிரியரை வ. வே. சு. ஐயர் அவர்கள் சரியாக மொழிபெயர்க்கவில்லை என்றே தோன்றும். பல இடங்களில் தவறாக இருப்பதாகக் கூடத் தோன்றும். இது, மூல நூலில் தமிழுக்கே உரிய சிறப்பியல்புகளை உணர்பவர்களுக்கு எந்த மொழி பெயர்ப்பையும் படிக்கும்போது ஏற்படும் உணர்ச்சியே தவிர வேறில்லை. இதனால் வ.வே.சு. ஐயர் அவர்களின் பணிக்கு இழுக்கு கற்பித்ததாகக் கொள்ளலாகாது.

பிரசுரம்: அமுதநிலையம், தேனாம்பேட்டை, சென்னை - 18; விலை ரூ. 10.

## லிப்கோவின்
## பத்திரங்களும் ரிஜிஸ்திரேஷனும்

“பத்திரங்கள் எழுதுவது சிக்கலும் சிரமங்களும் நிறைந்த ஒரு கலை. எனவே, பத்திரங்கள் எழுதுவதற்கான பயனுள்ள பல குறிப்புக்களையும் பொதுவாக வழக்கத்திலிருந்துவரும் பத்திரங்களின் மாதிரிகளையும் கொடுத்துள்ளோம். மற்றும் பல்வேறு வகையான தஸ்தாவேஜுகளின் பேரில் செலுத்த வேண்டிய ஸ்டாம்புக் கட்டணம், ரிஜிஸ்திரேஷன் கட்டணம், நீதிமன்றக் கட்டணம் போன்றவைகளைக் கணக்கிட்டு அறிவதற்கான விவரங்களையும் இந்நூலில் கொடுத்துள்ளோம்” என்கிறார்கள் இந்நூலின் பதிப்பாளர்கள்.

இதைவிடச் சுருக்கமாகவும், தெளிவாகவும் இந்நூலின் உள்ளுரையைப் பற்றிக் கூறிவிட முடியாது. இக்காலத்தில் எதையும் தமிழில் சொன்னால்தான் மக்களுக்கு விளங்கும். ஆகவே இது காலம் அறிந்து வெளியிடப்பட்ட புத்தகமாகும். பதிப்பாளர்கள் தமிழர்களின் பாராட்டுக்குரியவர்களாகிறார்கள்.

பிரசுரம்: தி லிட்டில் பிளவர் கம்பெனி, சென்னை-17; விலை: ரூ. 4.00.

## சிவபோக சிந்தாமணி என்னும் ஸ்ரீ ரமணானுபூதி (முதற் பாகம்)

பாக்கியம் செய்தவர்களை ஆட்கொள்ள ஈசனே 'குருவாயெழுந்தருளி மோக மயற் பாசமறச் செற்றுத்தன் பாதவொளி காட்டி' விடுகிறான். அப்பேர்ப்பட்ட பாக்கியவான்களில் ஒருவர் பாரத்வாஜி முதலைக் கண்ண முருகனார். ஸ்ரீரமண பகவானின் 'மோன மெய்ஞ்ஞானக் கொழுந்தாம்' திருப்பதத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டவர். பகவான் அவரைக் 'குற்றம் தீர்த்து இன்ப முறக் கோதாட்டித் தன் கழற் கீழ்' சேர்த்துக் கொண்டதும் 'உன்னையடைந்த எனக்கோர் குறையுமில்லையே' என்று மன அமைதி அடைந்தார். குறைவு இல்லாததோடு ஆத்ம நிறைவும் பெற்றார். 'நிச்சயமாய் என் உளத்து நின்றொளிர் மெய்ப்பாதம்' என்று திட நம்பிக்கையுடன் அவர் கூறும் அந்தத் தீட்சை மூலம் அநுபூதியே கிடைத்து வருகிறது. அதைப் பெற்றதையும் எவ்வளவு சந்தேகமறக் கூறுகிறார் பாரத்வாஜி? 'மாயமாய் என் னுருவை மாற்றினான் தன்னுருவா,' 'மோன வியற் கைவல்ய மூர்த்தியுருவானேனே,' 'ஒளிர் சிவமே நானே,' 'பரம சிவாநுபவம் திளைத்தேனே' என்றெல்லாம் அழுத்தம் திருத்தமாகத் தமது ஆத்ம சாட்சாத்கார அநுபவத்தை அவர் சொல்கிறார். அதோடு நம்மையும் அந்தப் பெருவாழ்வு வாழ அழைப்பு விடுக்கிறார்.

வெளியிட்டவர்: ரமணபாதானந்தா, 292, லிங்கச் செட்டி தெரு, சென்னை-1. விலை: ரூ. 2.

## சென்னை மாநில தமிழ் டைரக்டரி

சென்னை மாநில தமிழ் டைரக்டரியின் அட்டையில் '...உலகநாடுகள் வணிக விவரம் கொண்டது' என்று மட்டும் இருப்பதைக் கண்டு இப்புத்தகத்தை வேண்டா வெறுப்பாகப் பிரிப்பவர்களுக்கு ஆச்சரிய மேற்படும்! உள்ளே வணிகம் குறித்த சகல விஷயங்களும் இருப்பதோடு, அரசியல், பொருளாதாரம், கலை, பூகோளம், சரித்திரம், பொது அறிவு முதலிய பல விஷயங்களைக் காணலாம். பல நாடுகளைப் பற்றிய சமாசாரங்கள் இருந்தாலும் தமிழகம் முக்கியமான இடம் பெற்றிருக்கிறது. இவ்வளவு நல்ல நூலில் இத்தனை அச்சுப் பிழைகள் இருப்பதுதான் வருத்த மளிக்கிறது.

ஆசிரியர்: டி. கே. என். கேசவன்; பிரசுரம்: எக்ஸ்போர்ட் இந்தியா ஜர்னல், தபால் பெட்டி 401, சென்னை-5; விலை ரூ. 6.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.




குதூகலம் கொண்டாடுவோம்—
லைப்பாய் சோப்பினால் நீராடுவோம்...
ஆஹாஹா, கிளுகிளுக்கும்
உல்லாச நயம்... 'எல்லாம் இன்ப மயம்!'
அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக்
களைவது லைப்பாய்; குடும்ப முழுமைக்கும்
குன்றாத சுக வாழ்வு!

# லைப்பாய் இருக்குமிடம்
# அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்

L.26-X29 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

